FAS-534

நவ நாகரீக
பெண்கள் விரும்புவது



டி.எஸ்.ஆர்.
கோகுல்
ஹேர் ஆயில்





டி.எஸ்.ஆர் & கோ.
கும்பகோணம்.

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:
சுராஜ் ஏஜன்ஸீஸ்
10, ஜானிபாட்சா சாஹிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்,

B. பாலபட்டாபி செட்டியார்
346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)



"கல்கி" ஆசிரியர் எழுதிய

# பார்த்திபன் கனவு

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின்
மகோன்னத காலத்தை அற்புத
மாக விளக்குகின்றது

விலை ரூ. 6-8-0

●

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின்
பெருமையையும் அவர் இந்தியாவுக்கு
ஆற்றி யிருக்கும் அருந் தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் வெகு அழகாக
விளக்கி யிருக்கிறார்

●

விலை அணா எட்டு
(தபால் செலவு தனி)

●

சசிதேவி

எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபாற் செலவு தனி)

●

கிடைக்குமிடம்

## கல்கி காரியாலயம்

மேற்ப்பாக்கம் :: சென்னை




ஜெமினியின்

# நிஷான்

ஹிந்தி

லக்ஷக்கணக்கான வடஇந்திய ரஸிகர்களை
மகிழ்வித்த மகத்தான சித்திரம்.





தினசரி 2 காட்சிகள் — மாலை 6-15; 9-30-க்கு

மாட்டினி: வெள்ளி, சனி, ஞாயிறு, இதர லீவ் நாட்களில் மாலை 3 மணிக்கு!

முதல் 2 வகுப்புகளுக்கு தினசரி காலை 9 முதல் 12 மணி வரை!
ரிசர்வ் செய்து கொள்ளலாம்




# லிப்டன்ஸ்
## என்றால்
# சிறந்த டீ

LTX-180



# மலிவாக
# சீக்கிரமாக
# சுலபமாக

## வேலையை முடிக்க

## அக்ரிகோ மண்வாரிகளை உபயோகியுங்கள்



விவசாயிகள், சுரங்கம், இருப்புப்பாதை முதலியவைகளில் வேலைசெய்பவர்கள், ரஸ்தாக்களை அமைப்பவர்கள் இவர்கள் யாவரும் டாடா அக்ரிகோ மண்வாரிகளையே விரும்புகிறார்கள். விசேஷமான ஹைகார்பன் எஃகால் தயாரிக்கப்பட்ட இம்மண்வாரிகள் நீடித்துழைக்கக் கூடியவையாதலால் இவைகளே கடைசியில் மிகவும் சிக்கனமானவை. உயர்தரமான அமைப்பு உள்ளவையாதலால் இவை கையாளுவதற்கு மிகவும் சுலபமாக இருக்கின்றன. ஆகையால்தான் அவை உங்களுடைய வேலையையும், நேரத்தையும் மிச்சப் படுத்துகின்றன.

## டாடா அக்ரிகோ கருவிகள்




கிளை ஆபீஸ்கள்: பம்பாய், மதராஸ், கான்பூர், ஜலந்தர், நாக்பூர், விஜயநகரம், ஸெகிந்திராபாத்.

**நீடித்த மலிவான உழைப்புக்காக அக்ரிகோ கருவிகளையே வாங்குங்கள்.**

1875
தி கடாவ் மில்ஸ்
75
வருஷங்களாக
ஒரே அதிகாரத்
தின் கீழ்
1950






தி கடாவ் மில்ஸ், பைகுலா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். துணிக்கடை: மூல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக், பம்பாய் 2.

SISTA'S TAMIL



"மலேரியா ஒரு போதும் நமது கிராமத்தை அணுகுவதில்லை, இதற்குக் காரணம் பாலுட்ரின்தான்..

நீங்கள் மலேரியாவினால் பிடிக்கப்படும்போது ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை தினந்தோறும் உட்கொண்டால் மூன்று நாட்களில் குணமடைந்து பழைய நிலை அடைவீர்கள். மலேரியா இல்லாத போதும் வாரந்தோறும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை உட்கொள்ளுவதனால் மலேரியாவினால் பிடிக்கப் படாமலேயே இருப்பீர்கள். இந்த விஷயம் நமது கிராமத்திலே எல்லோருக்கும்—ஏன், சிறு குழந்தைகளுக்கும் தெரியும். ஆகவே, இதைப்பற்றி என்ன சொல்லுகிறேன் என்பது, போஸ்ட் மாஸ்டராகிய எனக்குத் தெரியும்".

ஒரு வேளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 3 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை வீதம் உட்கொள்ளுவதனால் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்னிட்டு சேரும் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. சிறுவர்கள், வயோதிகர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.




# 'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.

குணத்தின் ICI சின்னம்

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ்
(இந்தியா) லிமிடெட்,

கல்கத்தா பம்பாய் சென்னை கொச்சி
புதுடில்லி கான்பூர்.

ICX9TM

வருஷக்கணக்கில்
வனப்பும் வாலிபப்பொலிவும்
வாடாமலிருக்க



Distributors:

A. V. R. A. & CO.,

45, Thambu Chetty Street, Madras-1  6, Lohar Chawl, Bombay-2



பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லாவகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர செய்வதில்லை.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்








## தொழில் ஸ்தாபனங்களுக்கு

முக்கிய தொழில் ஸ்தாபனங்களில் சரியான நேரத்தை அறிவிக்க பேவர் - லூபா ஸ்டாப் வாட்சுகள் மிகவும் பயன்படுகின்றன. பொருளின் பொருமானத்தை இறுதியில் நிர்ணயிக்க உற்பத்தி முறையில் ஏற்படும் நேரமே அவசியமானது. உற்பத்தியையும் உற்பத்தி முறையையும் மதிப்பிட பேவர்-லூபா ஸ்டாப் வாட்சுகள் இன்றியமையாதவை.



## பரிசோதனை சாலைகளுக்கு

பல்லாண்டுகளாகவே சாஸ்திரிய முறையில் சரியான அளவு சாதனங்கள் இருப்பது பாராட்டத்தக்கது. எடையை அறிவிக்கும் தராசுகள், அளவு சாதனங்கள் நேர்மையையே அளிப்பது போல் பேவர் லூபா ஸ்டாப் வாட்சுகள் சரியான நேரத்தையே காட்டுகின்றன.



## பள்ளிக்கூடங்களுக்கு

கல்வி ஸ்தாபனங்களும் போதனாசிரியர்களும் ஸ்டாப் வாட்சுகளின் தேவையை அதிகம் உணர்கின்றனர்.

நெ. 5109 ஐந்தில் ஒரு விநாடியை காட்டுவது ரூ. 84/-
நெ. 5129 மேற்கூறியபடி இன்னும் பல பாகங்களாக அறிவிப்பது ரூ. 206/-
நெ. 5119 பத்தில் ஒரு விநாடியைக் காட்டுவது ரூ. 87/-




பேவர்-லூபா & கம்பெனி லிமிடெட் • பம்பாய் • கல்கத்தா

உணர்ச்சி ஊட்டும்...
உள்ளத்தை உருக்கும்...

# ஏழை படும் பாடு



சென்னை
காஸினோ.. கிரௌன்
& ஸரஸ்வதி..
மற்ற எல்லா
முக்கிய நகரங்களிலும்

a **PAKSHIRAJA** *production* ..... *Directed by* **RAMNOTH**

 **NARAYANAN Co** *Release*




# மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப்பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப் படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாச துணை அழுக்கை யகற்றி, சருமத்தினுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்குப் புஷ்டியும் மென்மையும் தரும். அபூர்வ மணம். நுட்பமான சருமத்திற்கும் ஹானியற்றது.

A CALCHEMICO PRODUCT

மதராஸ் ஆபீஸ்:

5/149, பிராட்வே, ஜி. டி., மதராஸ்




மலர் 10 இதழ் 16 | நவம்பர் 19 | விக்ருதி ஐப்பசி கார்த்திகை 4



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



வெற்றிகரமான இரண்டாவது வாரம்!

மதராஸ் ஸ்ரீ கிருஷ்ண & ராஜகுமாரி

மற்றும் ஆந்திரா, ஸீடெட் ஜில்லாக்களிலும்
நைஜாம், மைசூர் சமஸ்தானங்களிலும்

★  ★

ப்ரதிபாவின்

# ஸ்வப்ன சுந்தரி

( தெலுங்கு )

○●○

24 - 11 - 1950 முதல் தமிழ்நாடு முழுவதும்
இந்தப் படம் தமிழில் திரையிடப்படும்!

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற - தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 10 கல்கி இதழ் 16

# என்ன சேதி ?

## வாலைப் பிடிக்கின்றனர் !

கொரியா யுத்தத்தைப் பற்றி ஐக்கிய நாடுகள் சபையிலே நடக்கப் போகும் விவாதத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்று மேற்படி சபை அனுப்பி யிருந்த அழைப்பைச் சீன சர்க்கார் விராகரித்து விட்டனர். சீன சர்க்கார் பிரதிநிதிக்கு அந்தச் சபையில் ஸ்தானம் இல்லை என்று சொல்வானேன்? பிறகு குறிப்பிட்ட விவாதத்தில் கலந்து கொள்ளுமாறு அவர்களை வருந்தி அழைப்பானேன்? இந்தக் கூத்துக்கும் தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கும் விபரீதத்துக்கும் ஏதாவது வேற்றுமை உண்டா?

ஐ. நா. சபையில் சீன சர்க்காருக்கு ஸ்தானம் அளிக்க வேண்டும் என்று சில மாதங்களாக இந்தியா மன்றாடி வருகின்றது. இந்தியாவின் நேர்மையான, நேரடியான அந்தக் கோரிக்கைக்கு அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகளும் ஐ. நா. சபையும் முதலிலேயே செவி சாய்த்திருந்தால் பல சிக்கல்கள் தவிர்க்கப் பட்டிருக்கலாம். அதற்குத்தான் அவர்கள் செவி சாய்க்கவில்லை; தென் கொரியாவை மறுபடியும் கைப்பற்றிய ஐ. நா. துருப்புகள் எல்லையைக் கடந்து வடகொரியாவுக்குள் பிரவேசிக்கு முன் சமாதான முயற்சியில் ஈடுபட வேண்டும் என்று இந்தியா கோரியதற்காவது அந்தச் சபை இசைந்ததா? இசைந்திருந்தால் கொரியா யுத்தம் இப்போதைய உக்ர நிலையை அடைந்திராது; சீனு திபேத் விஷயத்திலும் தலையிடத் துணிந்திராது.

கொரியாவில் வெளிநாட்டினர் அதாவது ருஷ்யத் துருப்புகளோ, சீனத் துருப்புகளோ பிரவேசிக்காத வரையில் அந்த யுத்தம் பரவுவதற்குக் காரணமில்லை என்று கொரியா யுத்தம் ஆரம்பமானபோது அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் கூறினார். அமெரிக்காவின் நடவடிக்கை காரணமாகவே இப்போது கொரியாவில் சீனத் துருப்புகள் பிரவேசிக்கும் படியான நிலைமை ஏற்பட்டு விட்டது. இனி அமெரிக்காவும் உலக மகா சபையும் என்ன செய்யப் போகின்றன?

## அவசரமான காரியம்

குடியரசு இந்தியாவின் பொதுத் தேர்தல்கள் நெருங்க நெருங்கப் புதிய புதிய கட்சிகள் சிருஷ்டியாகி வருவது யாரும் எதிர்பார்க்காத விஷயம் அல்ல. காங்கிரஸ் அக்ராசனராக இருந்த ஆச்சாரிய கிருபளானியின் தலைமையில் ஒரு கட்சி ஏற்படப் போகிறது. இப்போது பிரபல வங்காளத் தலைவர்களான டாக்டர் பி. ஸி. கோஷ், டாக்டர் சுரேசசந்திர பானர்ஜி இவர்களின் தலைமையில் மற்றொரு கட்சி உருவாகப் போகிறது. இத்தகைய காரியங்களுக்கு எப்போதுமே வங்காளம் பெயர் பெற்றதாதலால், அங்கு ஏற்பட்டிருக்கும் புதிய கட்சியை அலட்சியமாகக் கருதுவதற்கில்லை. இவ்விதம் மகத்தான காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் தாய் ஸ்தாபனத்திலிருந்து பிய்த்துக் கொண்டு தனித் தனியாகக் கட்சிகளையும் கோஷ்டிகளையும் சிருஷ்டித்துக் கொண்டிருந்தால், காங்கிரஸின் எதிர்காலம், தேசத்தின் எதிர்காலம் என்ன ஆவது? காங்கிரஸின் பெருமை குறைந்து அதில் ஊழல்கள் மலிந்து விட்டன என்ற காரணத்தினாலேயே பல பிரமுகர்களும் அதிலிருந்து விலகிப் புதிய கட்சிகளைச் சிருஷ்டிக்க முற்படுகிறார்கள். எனவே, அதற்கு இடம் கொடுக்காமல் இருக்க வேண்டியது காங்கிரஸ் மேலிடத்தாரின் முழு முதற் கடமையாகும். காங்கிரஸில் படிந்துள்ள ஊழல்களைக் களைந்து அதைத் தூய்மைப் படுத்தும் கைங்கர்யத்தை அவர்கள் இனி ஒரு விநாடியும் தாமதமின்றி அவசரமாக மேற்கொள்ள வேண்டும்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

- சாஸ்திரி












# ஹிமயமலை அதிர்கின்றது!

சமீப காலமாக ஹிமயமலைப் பிரதேசம் அகில உலகத்தின் கவனத்தையும் இழுத்து வருகின்றது.

முன்பெல்லாம் எந்த நேரத்திலிருந்தாவது ஒரு கோஷ்டியினர் ஹிமய மலைச் சிகரம் ஒன்றின் உச்சியைக் கண்டுபிடிப்பதற்காகப் புறப்படுவார்கள். அப்போதுதான் அதைப்பற்றி ஏதாவது செய்தி வெளியாகும். பிறகு சில வருஷங்கள் சென்று வேறொரு கோஷ்டியினர் ஹிமயத்தின் மற்றொரு சிகரத்தில் ஏறுவதற்காகப் புறப்படும் போதுதான் அதைப்பற்றி ஏதாவது செய்தி வெளிவரும்.

ஆனால், சென்ற சில வாரங்களாகப் பத்திரிகைகளில் ஹிமயமலையின் பிரதாபம் அடிபடாத நாளே இல்லை!

ஹிமயமலையின் ஓரத்தில் உள்ள காஷ்மீரில் மூன்று வருஷங்களுக்கு முன் போர் மூண்டபோதுகூட ஹிமயத்தின் பெயர் தினந்தோறும் பத்திரிகைகளில் இடம்பெறவில்லை; ஹிமயத்தில் இப்போது ஏற்பட்டிருப்பது போன்ற அதிர்ச்சி ஏற்படவில்லை.

மேற்படி அதிர்ச்சியினால் ஹிமய மலைக்கு அணுவளவும் ஆபத்து நேரப் போவதில்லை. எனினும் ஹிமய மலையில் உள்ள ராஜ்யங்கள் அந்த அதிர்ச்சியினால் ஆட்டம் கண்டிருக்கின்றன என்பதில் சந்தேகம் இல்லை.

ஹிமய மலையின் உச்சியில் இருக்கும் திபெத்தில் ஏற்பட்ட அரசியல் பூகம்பம் இன்னும் முற்றிலும் நின்றபாடில்லை. அதற்குள் நேபாளத்திலும் அரசியல் பூகம்பம் மூண்டு விட்டது.

பூகோள படத்தில் மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் நேபாளமும் திபெத்தும் வெவ்வேறு சிறிய பிரதேசங்களாகத் தோன்றுகின்றன.

ஆனால் நேபாளம் இங்கிலாந்தைக் காட்டிலும் பெரியது; திபெத் தேசமோ இங்கிலாந்தைக் காட்டிலும் பத்து மடங்கு பெரியது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பால் உள்ள கொரியாவில் நடைபெறும் போரையும் சீனாவில் உண்டாகும் குழப்பத்தையும் அக்கறையுடன் கவனித்து வர வேண்டிய நிர்ப்பந்தம் பாரத நாட்டிற்கு ஏற்பட்டிருக்கிறது.

அப்படியிருக்க, வாசற்படியில் இருக்கும் நேபாளத்திலும் திபெத்திலும் ஏற்பட்டுள்ள அதிர்ச்சியைக் கண்டு அலட்சியமாக இருக்க முடியுமா?

* * *

நேபாளம் சுதந்திர நாடு என்றாலும் அதற்கும் இந்தியாவுக்கும் பூகோள ரீதியாக மாத்திரம் அல்ல, சரித்திரம், மதம், கலாச்சார ரீதியாகவும் நெருங்கிய சம்பந்தம் உண்டு.

நேபாளத்தில் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக ஹிந்து மதம் தழைத்து ஓங்கி வந்திருக்கிறது.

இன்று அந்த நாடெங்கும் ஹிந்து, பௌத்த மதங்கள் அசைக்க முடியாதபடி வேரூன்றியிருக்கின்றன.

நேபாள தேச மக்கள் சைவ சமயத்தில் பற்றுதல் உடையவர்களாதலின், ஒரு காலத்தில் தமிழ் நாட்டுக்கும் நேபாளத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வந்தது.

சைவ சமயத்தின் புனித சின்னமான ருத்ராக்ஷங்கள் நேபாளத்திலிருந்து தான் வருகின்றன.

இக்காலத்திலும் நேபாளத்தில் இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட சிவபரமான கோவில்களும் விஷ்ணுபரமான கோவில்களும் இருக்கின்றன. குறிப்பாக அந்த நாட்டில் உள்ள ஆஞ்சனேயர் ஆலயமும் துர்க்காதேவியின் கோவிலும் மிகவும் பிரசித்தி பெற்று விளங்குகின்றன.

இரண்டு கைகளால் தழுவுவது போல் கங்கை, பிரம்மபுத்திரா நதிகள் நேபாளத்தைத் தழுவிக் கொண்டிருப்பது அந்த நாட்டின் விசேஷச் சிறப்பாகும்.

எனவே, இவ்வளவு நெருங்கிய தொடர்பு கொண்ட இந்தியாவின் எல்லையை அடுத்துள்ள நேபாளத்தில் இப்போது ஏற்பட்டிருக்கும் அரசியல் அதிர்ச்சிகளும் கிளர்ச்சிகளும் இந்திய சர்க்காரின், இந்திய மகாஜனங்களின் கவனத்தை இழுத்திருப்பதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

* * *

உலகத்திலே இதுவரையில் எத்தனை எத்தனையோ முடியரசுகள் வீழ்ச்சியுற்றிருக்கின்றன.

மக்களின் அபிலாஷைகளுக்கு முட்டுக்கட்டை போட்டதால்தான் பெரும்




பாலான நாடுகளிலும் மன்னர்கள் முடி துறக்கும்படி நேர்ந்திருக்கிறது.

எனினும் நேபாளத்தில் நிகழ்ந்துள்ள சம்பவமோ இதற்கு விதி விலக்காக, நேர்மாறாக இருக்கிறது.

நேபாள தேசத்து மகாராஜா திரிபுவன வீர விக்கிரம ஜங் பகதூர் தமது மக்களுக்காகப் பரிந்து கொண்டு இந்தியாவில் வந்து அடைக்கலம் புகுந்துள்ளார். இந்திய சர்க்கார் புதுடில்லியிலே அவரை வரவேற்றுப் பாதுகாப்பு அளித்திருக்கிறார்கள்.

இச்சந்தர்ப்பத்திலே நேபாள தேசத்தின் பண்டைய சரித்திரத்தைச் சிறிது புரட்டிப் பார்க்கலாம்.

1867-ம் வருஷத்திலே நேபாளத்தில் 'பெரிய' மனிதர்களான பிரபுக்கள் மகாராஜாவுக்கு விரோதமாகப் புரட்சியை ஆரம்பித்தார்கள்.

நேபாளத்தில் பெயரளவுக்கு முடியாட்சி இருந்தாலும் உண்மையில் பிரபுக்களின் சர்வாதிகார ஆட்சி அமைய வேண்டும் என்பதே அவர்களுடைய அந்தரங்க நோக்கம்.

அப்போது நேபாளத்தில் ஆட்சி புரிந்து வந்த மகா ராஜாதிராஜா சுரேந்திர விக்கிரம ஷா வின் புரட்சியையும் இரத்தக் களரியையும் தடுப்பதற்காகத் தாமிருந்த அதிகாரங்களை யெல்லாம் தமது டைய பிரதம மந்திரியிடம் மனமின்றி ஒப்புவித்தார்.

ராஜகுடும்பத்தைச் சேர்ந்த ஒருவரே பிரதம மந்திரியாக இருக்க வேண்டும்; அவருக்கு மாத்திரமே சகல அதிகாரங்களும் உண்டு என்ற நிரந்தரமான நியதியும் ஏற்படுவதற்கு சுரேந்திர விக்கிரம மகாராஜா வேண்டா வெறுப்பாக இசைய நேர்ந்தது. அதிலிருந்துதான் நேபாளம் துரதிர்ஷ்டத்துக்கு இலக்காயிற்று.

சர்வாதிகாரம் படைத்த பிரதம மந்திரியின் வெறி எல்லை கடந்து போயிற்று. மகாராஜா அரண்மனையில் சுதந்திரமில்லாத கைதியைப்போல் வாழ நேர்ந்தது. மன்னரிடம் அனுதாபம் கொண்ட மக்கள் கொடிய அடக்குமுறைகளுக்கு ஆளாயினர்.

பிரதம மந்திரியின் அடக்குமுறைகள் வெகுகாலம் வரையில் வெளி உலகத்துக்குத் தெரியாமல் இருந்தன.

இப்போது நெருக்கடி முற்றி விட்டதால் மகாராஜா இந்தியாவுக்கு வந்து தஞ்சம் புகும்படி நேர்ந்திருக்கிறது.

அவருக்கு இந்திய சர்க்கார் அபயம் அளித்து இடம் கொடுத்திராவிட்டால், நேபாள மகாராஜா தம்முடைய ராஜ்யத்திலேயே சிறைப்பட்டுத் தவிக்கும்படி நேர்ந்திருக்கலாம்.

எனவே, உற்ற சமயத்தில் அவருக்குப் பாதுகாப்பு அளித்த இந்திய சர்க்காரின் பெருந்தன்மையை உலகத்தோர் போற்றுவர் என்பது நிச்சயம்.

தங்களுடைய மகாராஜா இந்தியாவில் தஞ்சம் புகும்படி நேர்ந்ததைக் குறித்துக் கொதிப்படைந்த நேபாள மக்கள் பெரும் புரட்சியையும் போரையும் ஆரம்பித்திருக்கிறார்கள்.

இரண்டொரு நாளில் அவர்கள் சில முக்கியப் பட்டணங்களையும் கைப்பற்றுவதில் வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

இவ்வாறாக, நேபாளத்தின் பிரதம மந்திரி மகாராஜ் பத்ம ஜங் பகதூர் ராணாவின் சர்வாதிகார வெறி அந்த நாட்டில் மகத்தான கொந்தளிப்பை உண்டு பண்ணியிருக்கிறது.

உலகம் முழுவதையும் ஆட்டி வைத்த மகாவல்லமை பொருந்திய சர்வாதிகாரிகளும் அவர்களுடைய ஆட்சியும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டதை நேரில் கண்டோம்.

அப்படியிருக்க நேபாளத்தில் நேரான நியாயமற்ற ஆட்டி சர்வாதிகாரியின் ஆட்சி எவ்வளவு காலம் நீடிக்க முடியும்?

# இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



"நான் எத்தனையோ டூத் பேஸ்டுகளைச் சோதித்திருக்கிறேன். மக்ளீன்ஸ் போல சிறந்த தொன்றை இதுவரை கண்டதில்லை. என் பற்கள் எவ்வளவு நன்றாயிருக்கின்றன என்று என் நண்பர்கள் எல்லோரும் பாராட்டுகிறார்கள்."

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது.

உமிழ் நீர
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத் பேஸ்ட் உபயோகிக்கும்போது நீங்கள் உங்கள் பற்களுக்கும், ஈறுகளுக்கும் சிறந்த பாதுகாப்பு அளிக்கிறீர்கள். பற்கள் வெண்ணிறமாகி பளபளக்கிறது; அதே சமயத்தில் சுவாசத்திலும் நறுமணம் உண்டாகிறது. அதனால்தான் லக்ஷக் கணக்கான மக்கள் மக்ளீன்ஸைத் தவிர வேறு எதையும் உபயோகிப்பதில்லை.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**




MTX-5 TM

# உபயகுசலோபரி

இந்த வருஷத்துத் தீபாவளிப் பண்டிகை ஒரே அமர்க்களம். புதுடில்லி முதல் இரிகோண மலை வரையில் வியாபித்துள்ள தமிழ் கூறும் நல்லுலகமெல்லாம் 'பட் பட் படார்! டப் டப் டபார்!' என்று பட்டாசுகள் வெடித்தன. இந்த வெடி முழக்கங்களுக்கு மத்தியில் "அரிசி போதவில்லை; வெல்லம் கண்ணில் படவில்லை; சர்க்கரை பற்றாக்குறை; உளுந்து, கடலை, மிளகாய் ஒரே கிராக்கி" என்ற குரல்களையும் கேட்டோம்.—இத்தகைய அசௌகரியமான சூழ்நிலையில் தமிழ் மக்கள் தங்களுக்கு இயற்கையாக உள்ள உற்சாகம் காரணமாகத் தீபாவளிப் பண்டிகையைச் சீரும் சிறப்புமாகக் கொண்டாடினார்கள்.

நாட்டில் குடிகொண்டிருக்கும் பற்றாக்குறையெல்லாம் போதாது என்று நாமும் ஒரு பற்றாக்குறையை உண்டாக்கினோம் என்று அறிந்து திடுக்கிட்டுப்போனோம். தீபாவளிப் பண்டிகையன்று வந்த கடிதங்களில் முதல் கடிதத்தைப் பிரித்துப் படித்தபோது, கையில் மத்தாப்பு வைத்துக் கொளுத்தின பிள்ளைகளைப் போல், கடிதம் முடியும் சமயத்தில் சட்டென்று கீழே வைக்க வேண்டியதாயிற்று. அந்தக் கடிதத்தில் எழுதியிருந்ததாவது :—

காரைக்குடி, 8—1—50

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

மனமார்ந்த தீபாவளி வாழ்த்துக்கள். மணமிக்க மலரைக்கண்டு மனம் நிறைவு பெற்றேன். தமிழ் மக்களின் மனத்திலே என்றும் நின்று நிலவும் மலராக அமைந்திருக்கிறது என்றுகூற ஆசைப்படுகிறேன். எந்த மலரும் பெற்றிராத எழில் சிறப்பை தம் மலர் பெற்றே விட்டது. அதனால் பல அன்பர்களின் ஆத்திரத்திற்குத் தாங்கள் ஆளாக நேரிட்டு விட்டது. காரணம், உணவைப்போல் தமது ஒளிமிகு மலரும் பற்றாக்குறையாக இருப்பதே.

தங்கள் அன்புள்ள,
இ. சிவராம்

நம்மிடம் அன்புள்ள திரு இ. சிவராம் மேற்கண்டவாறு எழுதியிருக்கிறார். இவரைக் காட்டிலும் அதிக பிரமாதமான அன்புள்ளவர்கள் அதிக கடுமையான மொழிகளிலேயே மலர் பற்றாக்குறையைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். பற்றாக்குறையினால் பாதிக்கப்பட்ட நேயர்களிடம் மனமார்ந்த மன்னிப்பு கோருகிறோம். இந்த ஆண்டில் நமது "கல்கி" மலருக்கு ஏற்பட்ட கிராக்கி தமிழ் மக்களின் மேலான கலை உணர்ச்சிக்கும் அறிவுப் பண்பாட்டிற்கும் சிறந்த அத்தாட்சியாகும். ஏனெனில் இப்போதெல்லாம் எங்கே பார்த்தாலும் பணமுடையைப் பற்றியே பேசப்படுகிறது. வாழ்க்கை நடத்துவதற்குரிய இன்றியமையாத பொருள்களின் விலை அளவில்லாமல் பெருகியிருக்கிறது. ஆயினும் "கல்கி" தீபாவளி மலருக்குரிய தொகையை எண்ணற்ற தமிழ் அன்பர்கள் பொருட்படுத்தாமல் எடுத்து வைத்திருந்தார்கள் என்பது எவ்வளவு பெருமைப்பட வேண்டிய காரியம்!

"கல்கி" மலர் இவ்வளவு பற்றாக்குறையானதற்குக் காரணம் உலகமெங்கும் இப்போது பரவியிருக்கும் காகிதப் பற்றாக்குறைதான் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

கிடைத்த காகிதத்தைக் கொண்டு இன்னும் அதிகமாக நாம் அச்சிட்டிருக்கலாம். அதாவது பக்கங்களைக் குறைத்துப் பிரதிகளை அதிகமாக்கியிருக்கலாம். அவ்வாறு செய்ய நாம் விரும்பவில்லை. பற்பல சுவையுள்ள "கல்கி" நேயர்கள் அனைவரையும் திருப்தி செய்யும் வகையில் நல்ல அம்சங்கள் எல்லாம் அடங்கிய மலரை உண்டாக்குவதுதான் முக்கியமானது. சொந்தமாக வாங்கமுடியாத நேயர்கள் தங்கள் நண்பர்களிடம் உள்ள மலரையாவது பார்த்து மகிழலாம். அப்படி மகிழ்வதற்கு மலர் எல்லா வகையிலும் சிறந்து விளங்கவேண்டும் அல்லவா! இந்த லட்சியம் ஏறக்குறையக் கைகூடிவிட்டது. தபால் மூலமாகவும் தந்தி மூலமாகவும் டெலிபோன் மூலமாகவும் நேரில் வந்து வாய் மொழியாகவும் தீபாவளி மலருக்குப் பாராட்டுதலைப் பல தமிழன்பர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

தீபாவளி மலரில் உள்ளே பிரவேசித்து அதிலுள்ள அம்சங்களைப் பற்றி விமரிசனம் செய்யும் முயற்சியில் இறங்கிய சில அன்பர்கள் அம்முயற்சியில் வெற்றி பெற இயலாமையைத் தெரிவித்திருக்கிறார்கள். பொன் மயமான நடராஜப் பெருமானின் ஆனந்தத் தாண்டவத்தைக் குறித்து எழுத ஆரம்பித்தவர்கள் அதிலேயே பரவசப்பட்டு நின்று விட்டார்கள். ராஜாஜி அவர்களுடைய ஆழ்ந்த பொருள் பொதிந்த அற்புதமான கதையின் கருத்துக்களைச் சிலர் விளக்கப் பார்த்து அத்துடன் நிறுத்திக் கொண்டார்கள். இன்னும் சிலர் ரஸிகமணி டி. கே. சி., யோகி சுத்தானந்தர், ஆஸ்தான கவிஞர், திரு எம். ராதாகிருஷ்ணப் பிள்ளை, கனம் எம். பக்தவத்ஸலம்,—இவர்களுடைய அரிய கதை—கட்டுரைகளைப் பற்றி விவரித்து விட்டு, "இன்னோரன்ன பிற" என்று நிறுத்திக் கொண்டார்கள். உண்மையில், இந்த ஆண்டின் "கல்கி" தீபாவளி மலரைக் குறித்து விமரிசனம் செய்வது என்றால், அதுவே ஒரு பெரிய மலர் ஆகிவிடும்! எனவே, நாமும் இவ்விடத்தில் நிறுத்திக் கொண்டு விடுகிறோம்.

"கல்கி" தீபாவளி மலர் சொந்தமாகப் பெறமுடியாத நேயர்களுக்கு ஒரு நல்ல செய்தியைத் தெரிவிக்க விரும்புகிறோம். வருகிற 1951-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ம் தேதி "கல்கி" குடியரசு மலர் வெளியாகிறது. இந்த வருஷ ஆரம்பத்தில் வெளியான குடியரசு மலரைக் காட்டிலும் உள்ளுறை அம்சங்கள் பலவிதத்திலும் சிறந்து விளங்கும் என்று எதிர்பார்க்கலாம்.

* * *

உங்கள் "கல்கி" பத்திரிகையில் வெளியாகத் தொடங்கியிருக்கும் "பொன்னியின் செல்வன்" என்னும் தொடர் கதை தமிழர் வாழும் இடங்களிலெல்லாம் பெரும் பரபரப்பை உண்டாக்கியிருக்கிறதாம்! நன்றாக

உண்டாகட்டும்! பர பரப்புக்கு என்ன, காசா பணமா, பற்றாக் குறையா, விலைக் கட்டுப் 'பாடா,—ஒன்றும் இல்லையாதுதானே !

முதல் அத்தியாயத்தில் வரும் வீரநாராயண ஏரியின் கோலாகலக் காட்சியைக் கண்டு பல நேயர்கள் பிரமித்துப் போய்விட்டதாகக் கேள்வி. (அப்படிப் பிரமித்துப் போகாவிட்டால் தயவு செய்து நமக்காகக் கொஞ்சம் பிரமிக்கும்படி கோருகிறோம்.) பிரமிப்புக்கும் பற்றாக்குறை, விலைக் கட்டுப்பாடு, அதன் பயனாக கள்ள மார்க்கெட் முதலியவை இல்லைதானே ! எனவே, கொஞ்சம் தாராளமாகவே பிரமித்து வைத்தால் போகிறது !

தமிழ் நாட்டின் சரித்திரத்தில் ஒப்புயர்வற்ற மகோன்னதமான காலத்தில் "பொன்னியின் செல்வன்" என்னும் கதை நிகழ்கிறது. பாடலிபுரத்து மௌரிய சாம்ராஜ்யத்தையும், உஜ்ஜயினியின் குப்த ஏகாதிபத்தியத்தையும், கன்னோசியின் ஹர்ஷவர்த்தன மகாராஜ்யத்தையும், பின்னால் வரப்போகும் அக்பரின் பேரரசையும் நிகர்த்த சோழ மகா ராஜ்யம் அப்போது உருவாகிக்கொண்டு வந்தது. அப்படி உருவாகி வந்த சமயத்தில் உட் பகையினாலும் வெளிப் பகையினாலும் சில பெரும் அபாயங்கள் தோன்றின. அந்த அபாயங்களை எப்படி நமது முன்னோர்கள் கடந்து சோழப் பேரரசை நிலை நாட்டினார்கள் என்பதைப் "பொன்னியின் செல்வன்" கதை சொல்லப் போகிறது. இத்தகைய கதையைப் படிப்பதில் புத்துயிர் பெற்ற தமிழர் சமூகம் ஆர்வம் காட்டுவது இயல்புதானே !

புத்துயிர் பெற்ற தமிழர் சமூகத்தில் சரித்திர ஆராய்ச்சி ஆர்வம் உள்ளவர்களும் இருக்கிறார்கள். "அந்த நிகழ்ச்சிக்கு ஆதாரம் என்ன?" "இந்தப் பெயருக்கு அத்தாட்சி என்ன?" "கல் வெட்டு சிலாசாஸனம் ஏதாவது உண்டா?" என்று சரித்திர ஆராய்ச்சியாளர் கேட்கக்கூடும். இப்படிப்பட்ட நேயர்களை முன்னிட்டு நாம் இங்கே தெரிவித்துக்கொள்ள விரும்புவது, "பொன்னியின் செல்வன் சரித்திரம் அல்ல; சரித்திரக் கதை" என்பது தான். ஆனால் இதில் வரும் சில கதாபாத்திரங்கள் சரித்திர புருஷர்கள்; கல் வெட்டுக்களிலும் தாமிரப்பட்டயங்களிலும்பெயர்பொறிக்கப்பட்டவர்கள். சில முக்கிய நிகழ்ச்சிகளும் சரித்திர ஆதாரம் உள்ளவை. எனவே, 'பழுவேட்டரையர்' என்பது போன்ற சில பெயர்கள் பல்லுடைக்கும் பெயர்களாயிருப்பது பற்றிக் கதை ஆசிரியர் பேரில் குறை சொல்லிப் பயனில்லை. இந்த மாதிரி பெயர்களை வைத்துக் கொண்ட தமிழ் நாட்டு வீரப் பெரியோர்களையும் அவர்களுடைய பெயர்களைக் கல்வெட்டில் பொறித்து வைத்தவர்களையுமே குறை சொல்ல வேண்டும். எனினும், கதை கொஞ்ச தூரம் போவதற்குள் 'பழுவேட்டரையர்' முதலிய பெயர்கள் நேயர்களுக்கு நன்கு பழக்கப் போய்விடும் என்று எதிர்பார்க்கலாம்.

ருஷ்யக் கதைகளில் வரும் 'அலெக்ஸாண்ட்ரியாகியாவிட்ச்' 'டாஸ்டாவ்ஸ்யாஸ்கி' முதலிய கடுமையான பெயர்களையே படித்து விடும் தமிழ்ப் பெரு மக்களுக்குப் 'பழுவேட்டரைய'ரின் பெயர் ஒரு பிரமாதமாகுமா !

ஆஸ்திரேலியா தேசத்துக் கடல்களில் உள்ள மீன்களைக் குறித்து ஏழு பிரம்மாண்டமான புத்தகங்கள் ஆங்கிலத்தில் வெளியாகியிருக்கின்றன என்றால் நேயர்களில் சிலருக்கு வியப்பாயிருக்கலாம். ஆங்கில நாட்டிலுள்ள பறவைகளைப்பற்றிக் குறைந்த பட்சம் ஆயிரம் புத்தகங்கள் வெளியாகி யிருக்கின்றன. இம்மாதிரியே மேனாட்டார் பிராணி சாஸ்திரம்—பறவை சாஸ்திரம் முதலியவற்றைப் பேணி வளர்த்திருக்கிறார்கள்.

ஆனால், தமிழ் நாட்டில் உள்ள பறவைகளின் பெயர்கள் இன்னின்னவென்று நமக்குத் தெரியுமா ! இதோ, எதிரேயுள்ள வேப்ப மரத்தின் மீது உட்கார்ந்து கூவும் பட்சியின் பெயரை நம்மால் நிச்சயம் செய்ய முடியுமா ! முடியாது.

"கல்கி" யில் சில காலமாகத் தமிழ் நாட்டுப் பறவை இனங்களைப்பற்றி வரும் அழகிய கட்டுரைகளை நேயர்கள் களிப்புடன் படித்து வருகிறார்கள் என்று நம்புகிறோம். இதுவரை, "குயில்" "மைனா" "கொண்டலாத்தி" "வால் நீண்ட கருங் குருவி" "வல்லூறு" "மடையான்" "காக்கை" முதலியவை குறித்து நயமான கட்டுரைகள் பிரசுரமாகி யிருக்கின்றன. இவற்றை எழுதி வரும் ஸ்ரீ மா. கிருஷ்ணன் காலஞ்சென்ற பிரசித்தி பெற்ற தமிழ் நூல் ஆசிரியர் ஸ்ரீ அ. மாதவையா அவர்களின் புதல்வர் ஆவர். தமிழ் நாட்டுப் பிராணிகள், பறவைகளைக் குறித்து ஆராய்ச்சி நடத்தியிருக்கிறார். அழகிய தமிழ் நடையும் எழுதி வருகிறார். அத்துடன் தாம் எழுதும் பறவை, மிருக இனங்களைப் பற்றிய கட்டுரைகளுக்குத் தாமே சித்திரங்களும் எழுதி வருகிறார். இவர் இக்கட்டுரைகளின் மூலம் தமிழுக்குச் செய்து வரும் தொண்டு ஒப்பற்றது என்று சொல்லவேண்டும். இவருடைய கட்டுரை எப்போது வரும் என்று நாம் ஆவலுடனிருப்பது போலவே நேயர்களும் ஆர்வத்துடன் எதிர்பார்த்துப் படித்து ரஸிப்பார்கள் என்று நம்புகிறோம்.

*   *   *

உங்கள் "கல்கி" பத்திரிகை தோன்றிய வேளை மிக நல்ல வேளை என்பதில் ஐயமில்லை. தமிழர்களுக்கு எத்தனையோ அரிய தொண்டுகளைக் "கல்கி" புரிந்திருக்கிறது. ஆனாலும் அத் தொண்டுகளில் எல்லாம் தலைசிறந்த தொண்டு, ராஜாஜி அவர்கள் எழுதியிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷத்தை வெளியிட்டது தான் என்று கருதுகிறோம். மனிதர்களுக்குப் பூர்வ ஜன்மம் உண்டு என்பது போல், பத்திரிகைகளுக்கும் உண்டு என்றால், "கல்கி" பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தினாலேயே ஸ்ரீ ராமகிருஷ்ண உபநிஷத்தை வெளியிடும் பாக்கியம் நமக்குக் கிடைத்தது என்போம். ஒரு மகா புருஷரின் போதனைகளை இன்னொரு மகான் தொகுத்து எழுதிய இந்த அற்புதமான கட்டுரைகள் விரைவில் புத்தக வடிவில் வரப் போகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தார் வெளியிடுகிறார்கள். புத்தகம் அச்சாகி முடிந்துவிட்டது என்று அறிகிறோம். வேண்டுவோர் மானேஜர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், பிராடிஸ் ரோடு, மயிலாப்பூர், சென்னை என்ற விலாசத்துக்கு எழுதிக் கொள்ளலாம்.



காசினோ, கிரௌன், சாந்தி ஆகிய மூன்று தியேட்டர்களிலும் பொது ஜனங்களின் அமோகமான ஆதர வுடன் மிகவும் வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருக்கிறது.

கதையின் பிரதான பாத்திரமாக ஸ்ரீ நாகையாவும், பிறரை ஏமாற்றிப் பிழைக்கும் ராமகோபாலாக ஸ்ரீ பாலையா வும், சட்டத்தைக் காப்பாற்றும் இன்ஸ்பெக்டராக ஸ்ரீ சீதாராமனும், அவனைப் போதிக்கும் பாத்திரமாக ஸ்ரீ சாமாவும் தோன்றி நன்கு நடித்து ரசிகர்களின் பாராட்டுதலைப் பெறுகின்றனர். லலிதா - பத்மினி இருவ ரும் நாட்டியமாடி இருப்பதுடன் சிறப்பாக நடித்தும் இருக்கின்றனர். படத்தில் பல இடங்களில் டைரக்டர் ஸ்ரீ ராம்நாத் அவர்களின் திறமை சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றது.

# பொன்னியின்

## ஏழாம் அத்தியாயம்

# சிரிப்பும் கொதிப்பும்

அரசுரிமையைப்பற்றிப் பழுவேட்டரையரின் வார்த்தைகளைக் கேட்டதும் வந்தியத்தேவன் உடனே ஒரு முடிவுக்கு வந்தான். அரசுரிமையைப் பற்றி இவர்கள் என்ன பேசப் போகிறார்கள்? இவர்கள் யார் பேசுவதற்கு? இந்தக் கூட்டத்தில் நடக்கப்போவதை அறிந்து கொண்டே தீரவேண்டும்! இங்கேயே உட்கார வேண்டியதுதான். இதைக் காட்டிலும் வசதியான இடம் வேறு கிடைக்காது. ஆழ்வார்க்கடியான் எப்படியாவது போகட்டும். அவனைப் பற்றி நமக்கு என்ன கவலை?

இன்றைக்கு இங்கு ஏதோ மர்மமான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது என்ற எண்ணம் வந்தியத்தேவன் மனதில் முன்னமே உண்டாகியிருந்தது. ஆழ்வார்க்கடியானின் விபரீதமான பொருள் தரும் வார்த்தைகள், கோட்டை வாசற் காவலர்களின் துடுக்கான நடத்தை, சம்புவரையரின் அரைமனதான வரவேற்பு, வெறியாட்டம் ஆடிய சந்நதக்காரனின் ஆவேச மொழிகள்,—இவையெல்லாம் அவனுக்கு ஏதேதோ சந்தேகங்களை உண்டாக்கியிருந்தன. அந்தச் சந்தேகங்களையெல்லாம் நீக்கிக் கொள்ளவும் உண்மையை அறிந்து கொள்ளவும் இதோ ஒரு சந்தர்ப்பம் தெய்வாதீனமாகக் கிடைத்திருக்கிறது. அதை ஏன் நழுவவிட வேண்டும்?

ஆகா! தன்னுடைய உயிருக்குயிரான நண்பன் என்று கருதி வந்த கந்தமாறன் கூடத் தன்னிடம் உண்மையைச் சொல்லவில்லை. தன்னைத் தூங்க வைத்துவிட்டு இந்த இரகசிய நள்ளிரவுக் கூட்டத்துக்கு வந்திருக்கிறான்! அவனை நாளைக்கு ஒரு கை பார்க்க வேண்டியதுதான்!

இதற்குள் கீழே பழுவேட்டரையர் பேசத் தொடங்கிவிட்டார். வந்தியத்தேவன் காது கொடுத்துக் கவனமாகக் கேட்கலானான்.

"உங்களுக்கெல்லாம் மிக முக்கியமான ஒரு செய்தியை அறிவிக்கவே நான் வந்திருக்கிறேன். அதற்காகவே இந்தக் கூட்டத்தைச் சம்புவரையர் கூட்டியிருக்கிறார். சுந்தர சோழ மகாராஜாவின் உடல் நிலை மிகக் கவலைக்கிடமாயிருக்கிறது. அரண்மனை வைத்தியர்களிடம் அந்தரங்கமாகக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள் 'இனிமேல் நம்பிக்கைக்கு இடமில்லை. அதிக காலம் உயிரோடிருக்க மாட்டார்' என்று சொல்லி விட்டார்கள். ஆகவே, இனிமேல் நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றி நாம் இப்போது யோசித்தாக வேண்டும்!" என்று கூறிப் பழுவேட்டரையர் நிறுத்தினார்.

"ஜோசியர்கள் என்ன சொல்லுகிறார்கள்?" என்று கேட்டார் கூட்டத்தில் ஒருவர்.

"ஜோசியர்களைப் போய்க் கேட்பானேன்? சில நாளாகப் பின் மாலை நேரத்தில் வானத்தில் வால் நட்சத்திரம் தெரிகிறதே! அது போதாதா?" என்றார் ஒருவர்.

பின்னர் பழுவேட்டரையர் கூறினார்:- "ஜோசியர்களையும் கேட்டாகிவிட்டது. அவர்கள் சில காலம் தள்ளிப் போடுகிறார்கள், அவ்வளவுதான். எப்படியிருந்தாலும், அடுத்தாற்போல் பட்டத்துக்கு உரியவர் யார் என்பதை நாம் யோசித்தாக வேண்டும்......?"

# செல்வன்



"அதைப் பற்றி இனி யோசித்து என்ன ஆவது? ஆதித்த கரிகாலருக்குத்தான் இளவரசுப் பட்டம் இரண்டு வருஷத்துக்கு முன்பே கட்டியாகி விட்டதே!" என்று இன்னொரு கம்மலான குரல் கூறியது.

"உண்மைதான். ஆனால் அப்படி இளவரசுப் பட்டம் கட்டுவதற்கு முன்னால் நம்மில் யாருடைய யோசனை யாவது கேட்கப்பட்டதா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். இங்கே கூடியுள்ள நாம் ஒவ்வொருவரும் நூறு ஆண்டுக்கு மேலாக, நாலு தலைமுறையாக, சோழ ராஜ்யத்தின் மேன்மைக்காகப் பாடுபட்ட பழங்குடியைச் சேர்ந்தவர்கள். என் பாட்டனுக்குத் தந்தை திருப்புறம்பியம் போரில் இறந்தார். என் பாட்டனார் வெளூரில் நடந்த போரில் உயிர் விட்டார். என் தந்தை தக்கோலத்தில் உயிர்த் தியாகம் செய்தார். அம்மாதிரியே உங்கள் ஒவ்வொருவரின் மூதாதையரும் இந்தச் சோழ நாட்டின் மேன்மையை நிலை நாட்டுவதற்காக உயிரைக் கொடுத்திருக்கிறார்கள். நம் ஒவ்வொருவருடைய குடும்பத்திலும் இளம் பிள்ளைகள் யுத்த களத்தில் செத்திருக்கிறார்கள். இன்றைக்கும் ஈழ நாட்டில் நம்முடைய குலத்தையும் குடும்பத்தையும் சேர்ந்த பிள்ளைகள் போர் செய்து வருகிறார்கள். ஆனால் அடுத்தபடியாகப் பட்டத்துக்கு வர வேண்டியவர் யார் என்பது பற்றித் தீர்மானிப்பதில் நம்முடைய அபிப்பிராயத்தை மகாராஜா கேட்கவில்லை. தாராதர்கூட இராமருக்குப் பட்டம் கட்டுவது பற்றி மந்திராலோசனை சபை கூட்டி யோசனை செய்தார். மந்திரிகளையும், சாமந்தகர்களையும், சேனைத் தலைவர்களையும், சிற்றரசர்களையும் ஆலோசனை கேட்டார். ஆனால் சுந்தர சோழ மகாராஜா யாருடைய யோசனையையும் கேட்பது அவசியம் என்று கருதவில்லை......"

"நம்மை யோசனை கேட்கவில்லையென்பது சரிதான். ஆனால் யாரையுமே யோசனை கேட்கவில்லையென்று இறை விதிக்கும் தேவர் கூறுவது சரியன்று. பெரிய பிராட்டியாரான செம்பியன் மகாதேவியின் யோசனையும் இளைய பிராட்டியாரான குந்தவை தேவியின் யோசனையும் கேட்கப்பட்டன. இல்லையென்று பழுவேட்டு அரையர் கூற முடியுமா?" என்று கேலியான தொனியில் ஒருவர் கூறவும், கூட்டத்தில் ஒரு சிலர் சிரித்தார்கள்.

"ஆகா! நீங்கள் சிரிக்கிறீர்கள்! எப்படித்தான் உங்களுக்குச் சிரிக்கத் தோன்றுகிறதோ, நான் அறியேன். நினைக்க நினைக்க எனக்கு வயிறு பற்றி எரிகிறது; இரத்தம் கொதிக்கிறது. எதற்காக இந்த உயிரை வைத்துக் கொண்டு வெட்கங்கெட்டு வாழவேண்டும் என்று தோன்றுகிறது. இன்று சங்கதம்வந்து ஆடிய 'தேவராளன்' துர்க்கை பலி கேட்பதாகச் சொன்னான். ஆயிரம் வருஷத்துப் பரம்பரை ராஜ வம்சத்தில் பிறந்த நரபலி வேண்டும்



என்று சொன்னான். என்னைப் பலி கொடுத்து விடுங்கள். என்னுடைய குலம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் தொன்மையானது. நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் கத்தியினால் என் கழுத்தில் ஒரு போடு போட்டுப் பலி கொடுத்து விடுங்கள். அன்னை துர்க்கை திருப்தி அடைவாள்; என் ஆத்மாவும் சாந்தி அடையும்......"

இவ்விதம் ஆவேசம் வந்து ஆடிய சந்நதக்காரனைப் போலவே வெறி கொண்ட குரலில் சொல்லிப் பழுவேட்டரையர் நிறுத்தினார்.

சற்று நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. மேற்குத் திசைக் காற்று 'விர்' என்று அடிக்கும் சத்தமும், அந்தக் காற்றில் கோட்டைச் சுவருக்கு வெளியேயுள்ள மரங்கள் ஆடி அலையும் 'மர்மர' சத்தமும் கேட்டன.

"ஏதோ தெரியாத்தனமாகப் பேசிவிட்ட பரிகாசப் பேச்சையும், அதனால் விளைந்த சிரிப்பையும் பழுவூர் மன்னர் பொறுத்தருள வேண்டும். தாங்கள் எங்களுடைய இணையில்லாத் தலைவர். தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்ற இங்குள்ளவர் அனைவரும் சித்தமாயிருக்கிறோம். தாங்கள் காட்டிய வழியில் நடக்கிறோம். தயவு செய்து மன்னித்துக்கொள்ள வேண்டும்!" என்று சம்புவரையர் உணர்ச்சியுடனே கூறினார்.

"நானும் கொஞ்சம் பொறுமை இழந்து விட்டேன். அதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். ஒரு விஷயத்தை எண்ணிப் பாருங்கள். சரியாக இன்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்னால் விஜயாலய சோழர் முத்தரையர்களை முறியடித்துத் தஞ்சாவூரைக் கைப்பற்றினார். திருப்புறம்பியம் போரில் பல்லவ சைன்யத்துக்குத் துணையாக நின்று மதுரைப் பாண்டியரின் படையை நிர்மூலமாக்கினார். அதுமுதல் சோழ ராஜ்யம் நாளுக்கு நாள் பெருகி விஸ்தரித்து வந்திருக்கிறது. காவேரி நதிக்குக் கரையெடுத்த கரிகால் வளவர் காலத்திலேகூடச் சோழ ராஜ்யம் இவ்வளவு மகோந்நதத்தை அடைந்தது இல்லை. இன்றைக்குத் தெற்கே குமரி முனையிலிருந்து வடக்கே துங்கபத்திரை - கிருஷ்ணை வரையில் சோழ சாம்ராஜ்யம் பரந்து விரிந்து கிடக்கிறது. பாண்டிய நாடு, நாஞ்சில் நாடு, யாருக்கும் இதுவரையில் வணங்காத சேரநாடு, தொண்டை மண்டலம், பாகி நாடு, கங்கபாடி, நுளம்பபாடி, வைதும்பர் நாடு, சீட்புலிநாடு, பெரும்பாணப்பாடி, பொன்னி நதி உற்பத்தியாகும் குடகு நாடு, — ஆகிய இத்தனை நாடுகளும் சோழ சாம்ராஜ்யத்துக்கு அடங்கிக் கப்பம் செலுத்தி வருகின்றன. இவ்வளவு நாடுகளிலும் நம் சோழநாட்டுப் புலிக்கொடி பறக்கிறது. தெற்கே ஈழமும் வடக்கே இரட்டை மண்டலமும் வேங்கியும் கூட இதற்குள் நமக்குப் பணிந்திருக்க வேண்டும். அப்படிப் பணியாததற்குக் காரணங்களை நான் சொல்ல வேண்டியதில்லை; அவைகள் எல்லாம் உங்களுக்குத் தெரிந்ததுதான்!......"

"ஆம்; எல்லாருக்கும் தெரியும். ஈழமும் இரட்டைபாடியும் வேங்கியும் கலிங்கமும் பணியாததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒரு காரணம் வடதிசை மாதண்ட நாயகராகிய இளவரசர் ஆதித்த கரிகாலர்; இன்னொரு காரணம் தென்திசைப் படைத் தலைவரான அருள்மொழி வர்மர்......"

"மழவரையர் கூறும் காரணத்தை நான் ஒப்புக் கொள்கிறேன். சென்ற நூறாண்டு காலமாக இந்தச் சோழ நாட்டில் சேனாபதி நியமிக்கும் மரபு வேறாயிருந்தது. பல யுத்தங்களில் ஈடுபட்டு அநுபவம் பெற்ற வீராதி வீரர்களையே படைத் தலைவர்களாகவும் மாதண்ட நாயகர்களாகவும் நியமிப்பார்கள். ஆனால் இப்போது நடந்திருப்பது என்ன? மூத்த இளவரசர் வடதிசைச் சேனையின் சேனாதிபதி. அவர் என்ன செய்கிறார்? இரட்டை மண்டலத்தின் மீதும் வேங்கி நாடு மீதும் படையெடுத்துப் போகவில்லை. காஞ்சிபுரத்தில் உட்கார்ந்து கொண்டு பொன் மாளிகை கட்டிக் கொண்டிருக்கிறார். வீரப் பெருங்குடியில் பிறந்த வீராதி வீரர்களாகிய உங்களைக் கேட்கிறேன். இதற்கு முன்னால் சரித்திரத்தில் எந்த மன்னராவது தாம் வசிப்பதற்குப் பொன்னால் மாளிகை கட்டியதுண்டா? உலகெங்கும் புகழ் பரப்பி இப்போது கைலாசவாசியாயிருக்கும்

மதுரையும் ஈழமும் கொண்ட பராந்தக சக்கரவர்த்திகூடத் தாம் வசிப்பதற்குப் பொன் மாளிகை கட்டிக் கொள்ளவில்லை. தில்லைச் சிற்றம்பலத்துக்குத் தான் பொன் கூரை வேய்ந்தார். ஆனால் இளவரசர் ஆதித்த கரிகாலர் தாம் வசிப்பதற்குக் காஞ்சிபுரத்தில் பொன்மாளிகை கட்டுகிறார்! பல்லவ சக்கரவர்த்திகள் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து ராஜ்ய பாரம் புரிந்த அரண்மனைகள் இவருடைய அந்தஸ்துக்குப் போதவில்லையாம். பொன்னிழைத்த அரண்மனை கட்டுகிறார். ரத்தினங்களையும் வைடூரியங்களையும் அப் பொன் மாளிகைச் சுவர்களில் பதிக்கிறார். கங்கபாடி, நுளம்பபாடி, குடகு முதலிய நாடுகளில் வெற்றியடைந்து கைப்பற்றிக் கொண்டு வந்த பொருளில் ஒரு செப்புக் காசாவது தலைநகரிலுள்ள பொக்கிஷ சாலைக்கு அவர் இதுவரை அனுப்பவில்லை......"

"பொன் மாளிகை கட்டி முடிந்து விட்டதா?"

"ஆம், முடிந்து விட்டது என்று என்னுடைய அந்தரங்க ஒற்றர்கள் மூலம் அறிந்தேன். அத்துடன் சுந்தர சோழ மகாராஜாவுக்கு அவருடைய அருமை மூத்த புதல்வரிடமிருந்து கடிதங்களும் வந்தன. புதிதாக நிர்மாணித்திருக்கும் பொன் மாளிகையில் வந்து சுந்தர சோழ மகாராஜா சில காலம் தங்கியிருக்க வேண்டும் என்று."

"மகாராஜா காஞ்சிக்குப் போகப் போகிறாரா?" என்று ஒருவர் கவலை ததும்பிய குரலில் கேட்டார்.

"அத்தகைய கவலை உங்களுக்கு வேண்டாம். அப்படி ஒன்றும் நேராமல் பார்த்துக் கொள்ள நான் இருக்கிறேன்; தஞ்சைக் கோட்டைக் காவலனாகிய என் சகோதரனும் இருக்கிறான். சின்னப் பழுவேட்டரையன் அனுமதி இல்லாமல் யாரும் தஞ்சைக் கோட்டைக்குள் புக முடியாது. என்னையறியாமல் யாரும் மகாராஜாவைப் பேட்டி காணவும் முடியாது; ஓலை கொடுக்கவும் முடியாது. இதுவரையில் இரண்டு மூன்று தடவை வந்த ஓலைகளை நிறுத்தி விட்டேன்."

"வாழ்க பழுவேட்டரையர்!" "வாழ்க பழுவூர் மன்னரின் சாணக்ய தந்திரம்!" "வாழ்க அவர் வீரம்!" என்னும் கோஷங்கள் எழுந்தன.

"இன்னும் கேளுங்கள். பட்டத்து இளவரசர் செய்யும் காரியங்களைக் காட்டிலும் ஈழத்தில் போர் நடத்தச் சென்றிருக்கும் இளவரசர் அருள் மொழி வர்மரின் காரியங்கள் மிக மிக விசித்திரமாயிருக்கின்றன. யுத்த தர்மத்தைப் பற்றி நாம் அறிந்திருப்பதென்ன? பரம்பரையாகப் பல நூறு ஆண்டுகளாக நம் முன்னோர்கள் கடைப் பிடித்து வந்திருப்பதென்ன? நம் நாட்டுப் படைகள் வேறு நாடுகளின் மீது படை எடுத்துச் சென்றால், நம் படைகளுக்கு வேண்டிய உணவுகளை அந்த வேற்று நாடுகளிலேயே சம்பாதித்துக் கொள்ள வேண்டும். அந்த நாடுகளில் கைப் பற்றும் பொருளைக் கொண்டே வீரர்களுக்கு ஊதியமும் கொடுக்க வேண்டும். மிகுந்த பொருளைத் தலை நகரிலுள்ள அரசாங்க பொக்கிஷத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும். ஆனால் இளவரசர் அருள் மொழி வர்மர் என்ன செய்கிறார் தெரியுமா? ஈழநாட்டிலுள்ள நம் போர் வீரர்களுக்கெல்லாம் இங்கிருந்து கப்பல்களில் உணவு அனுப்பி வைக்க வேண்டுமாம்! ஒரு வருஷகாலமாக நானும் பத்துத் தடவை பல கப்பல்களில் ஏற்றி உணவு அனுப்பி வந்திருக்கிறேன்......"

"விந்தை! விந்தை!" "இந்த அநியாயத்தைப் பொறுக்க முடியாது!" "இப்படிக் கேட்டதே இல்லை!" என்ற குரல்கள் எழுந்தன.

"இந்த அதிசயமான காரியத்துக்கு இளவரசர் அருள் மொழி வர்மர் கூறும் காரணத்தையும் கேட்டு வையுங்கள். படை எடுத்துச் சென்ற நாட்டில் நம் வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பொருளைச் சம்பாதிப்பது என்றால், அங்குள்ள குடிமக்களின் அதிருப்திக்கு உள்ளாக நேரிடுமாம். ஈழத்து அரச குலத்தாரோடு நமக்குச் சண்டையே தவிர ஈழத்து மக்களோடு எவ்விதச் சண்டையும் இல்லையாம். ஆகையால் அவர்களை எவ்விதத்திலும் கஷ்டப் படுத்தக் கூடாதாம்! அரச குலத்தாருடன் போராடி வென்ற பிறகு மக்களின் மனமார்ந்த விருப்பத்துடன் ஆட்சி நடத்த வேண்டுமாம். ஆகையால் பணமும் உணவும் இங்கிருந்து அனுப்ப வேண்டுமாம்!"

இச் சமயம் கூட்டத்தில் ஒருவர், "படையெடுத்துச் சென்ற நாடுகளில்



உள்ள ஜனங்களிடம் ஒன்றுமே கேட்கக் கூடாது; அவர்களின் காலில் விழுந்து கும்பிட வேண்டும் என்ற யுத்த தர்மத்தை இது வரை நாங்கள் கேட்டதே கிடையாது!" என்றார்.

"அதனால் விளையும் விபரீதத்தையும் கேளுங்கள். இரண்டு இளவரசர்களும் சேர்ந்து செய்யும் காரியங்களினால் தஞ்சை அரண்மனைத் தனபொக்கிஷமும் தானிய பண்டாரமும் அடிக்கடி மிக்க குறைந்து போகின்றன. உங்களுக்கெல்லாம் அதிக வரிபோட்டு வசூலிக்கும் நிர்ப்பந்தம் எனக்கு ஏற்படுகிறது. இதற்காகத்தான் என்னை இறை அதிகாரியாக நியமித்திருக்கிறார்கள்! சோழ நாட்டின் மேன்மையே முக்கியம் என்று நான் கருதியிராவிட்டால், எப்பொழுதோ இப் பதவியை விட்டுத் தொலைத்திருப்பேன்."

"ஆ! கூடவே கூடாது! தாங்கள் இப் பதவியிலிருப்பதுதான் எங்களுக்கெல்லாம் பெரிய பாதுகாப்பு. இந்த முறைகேடான காரியங்களைப் பற்றித் தாங்கள் மகாராஜாவிடம் சொல்லிப் பார்க்கவில்லையா!"

"சொல்லாமல் என்ன! பல தடவை சொல்லியாகி விட்டது. ஒவ்வொரு தடவையும் 'பெரிய பிராட்டியிடம் கேளுங்கள்; இளைய பிராட்டியிடம் கேளுங்கள்!' என்ற மறுமொழிதான் கிடைக்கிறது. முன்னமேதான் சொன்னேனே, மகாராஜாவுக்குச் சுயமாகச் சிந்தனை செய்யும் சக்தியே இப்போது இல்லாமற் போய்விட்டது! முக்கியமான காரியங்களில் நம்முடைய யோசனைகளைக் கேட்பதும் இல்லை. அவருடைய பெரியன்னை செம்பியன் மாதேவியின் வாக்குத்தான் அவருக்கு வேதவாக்கு; அடுத்த படியாக, அவருடைய செல்வக் குமாரி குந்தவைப் பிராட்டியிடம் யோசனை கேட்கச் சொல்கிறார். இராஜ்ய சேவையில் தலை நரைத்துப் போன நானும் மற்ற அமைச்சர்களும் அந்தச் சின்னஞ் சிறு பெண்ணிடம், — கொள்ளிடத்துக்கு வடக்கேயும் குடமுருட்டிக்குத் தெற்கேயும் சென்றறியாத பெண்ணிடம், — யோசனை கேட்பதற்குப் போய் நிற்கவேண்டும். எப்படியிருக்கிறது கதை! இந்தச் சோழ ராஜ்யம் ஆரம்பமான காலத்திலிருந்து இப்படி இராஜ்ய காரியங்களில் பெண்கள் தலையிட்டதாக நாம் கேள்விப்பட்டதில்லை! இத்தகைய அவமானத்தை எத்தனை நாள் நாம் பொறுத்திருக்க முடியும்? அல்லது நீங்கள் எல்லாரும் ஒரு முகமாகச் சொன்னால், நான் இந்த ராஜாங்கப் பொறுப்பையும், வரிவிதித்துப் பொக்கிஷத்தை நிரப்பும் தொல்லையையும் விட்டு விட்டு என் சொந்த ஊரோடு இருந்து விடுகிறேன்......"

"கூடாது! கூடாது! பழுவூர்த் தேவர் அப்படி எங்களைக் கை விட்டுவிடக் கூடாது. அரும்பாடுபட்டு, ஆயிரமாயிரம் வீரர்கள் நாலு தலை

முறைகளாகத் தங்கள் இரத்தத்தைச் சிந்தி ஸ்தாபித்த சோழ சாம்ராஜ்யம் ஒரு கொடியில் சின்ன பின்னமாய்ப் போய்விடும்'' என்றார் சம்புவரையர்.

"அப்படியானால் இந்த நிலைமையில் என்ன செய்வது என்று நீங்கள் தான் எனக்கு யோசனை சொல்ல வேண்டும். அல்லி ராஜ்யத்தை விடக் கேவலமாகி விட்ட இந்தப் பெண்ணரசுக்குப் பரிகாரம் என்ன என்று நீங்கள்தான் சொல்ல வேண்டும்'' என்றார் பழுவூர் மன்னர்.

# எட்டாம் அத்தியாயம்
# பல்லக்கில் யார்?

சற்று நேரம் அந்தக் கூட்டத்தில் ஒருவருக்கொருவர் ஏதோ பேசி விவாதித்துக் கொண்டிருந்தார்கள். பல குரல்கள் ஒருங்கே கலந்து ஒலித்தபடியால் வந்தியத் தேவன் காதில் ஒன்றும் தெளிவாக விழவில்லை.

சம்புவரையர் உரத்த குரலில், "பழுவூர் மன்னர் கேட்டதற்கு நாம் மறு மொழி சொல்ல வேண்டாமா? தலைக்குத்தலை பேசிக் கொண்டிருந்தால் என்ன ஆகிறது? இரவு மூன்றாம் ஜாமம் ஆரம்பமாகிவிட்டது. அதோ சந்திரனும் வந்துவிட்டது!'' என்றார்.

"எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. என்னைப்போல் இன்னும் சிலருடைய மனதிலும் அது இருக்கலாம். பழுவூர்த்தேவர் கோபித்துக் கொள்வதில்லை யென்றால், அதைப் பற்றிக் கேட்க விரும்புகிறேன்!'' என்று முன்னால் ஒரு தடவை பேசிய கம்மல் குரல் சொல்லிற்று.

"இப்போது பேசுகிறது வணங்காமுடியார்தானே? எழுந்து நன்றாக வெளிச்சத்திற்கு வரட்டும்!'' என்றார் பழுவேட்டரையர்.

"ஆமாம்; நான்தான். இதோ வெளிச்சத்துக்கு வந்துவிட்டேன்.''

"என்னுடைய கோபத்தையெல்லாம் நான் போர்க்களத்தில் காட்டுவதுதான் வழக்கம்; பகைவர்களிடம் காட்டுவது வழக்கம். என் சிநேகிதர்களிடம் காட்ட மாட்டேன். ஆகையால் எது வேண்டுமானாலும் மனம் விட்டுத் தாராளமாகக் கேட்கலாம்.''

"அப்படியானால் கேட்கிறேன். சுந்தர சோழ மகாராஜாவின் பேரில் பழுவேட்டரையர் என்ன குற்றம் சொல்கிறாரோ, அதே குற்றத்தைப் பழுவேட்டரையர் மீதும் சிலர் சுமத்துகிறார்கள்! அதை நான் நம்பாவிட்டாலும் இந்த சமயத்தில் கேட்டுத் தெளிய விரும்புகிறேன்'' என்றார் வணங்காமுடியார்.

"அது என்ன? எப்படி? விவரம் சொல்லவேணும்.''

"பழுவூர்த்தேவர் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு பெண்ணை மணம் புரிந்து கொண்டது நம் எல்லாருக்கும் தெரியும்......''

இச்சமயம், சம்புவரையரின் குரல் கோபத்தொனியில், "வணங்காமுடியார் இந்த விஷயத்தைப் பற்றிப் பேசுவதை நாங்கள் ஆட்சேபிக்கிறோம். நம் மாபெருந் தலைவரை, நமது பிரதம விருந்தாளியை, இவ்விதம் அசந்தர்ப்பமான கேள்வி கேட்பது சிறிதும் தகாத காரியம்......'' என்றார்.

"சம்புவரையரைப் பொறுமையாயிருக்கும்படி நான் ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன். வணங்காமுடியார் கேட்க விரும்புவதைத் தாராளமாகக் கேட்கட்டும். மனதில் ஒன்றை வைத்துக் கொண்டிருப்பதை விடக் கேட்டு விடுவதே நல்லது. ஐம்பத்தைந்து பிராயத்துக்கு மேல் நான் ஒரு பெண்ணை மணந்து கொண்டது உண்மைதான். அதைத் தாராளமாக ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நான் தான் கலியுக ராமாவதாரம் என்று எப்போதும் சொல்லிக் கொண்டதில்லை. ஏகபத்தினி விரதம் கொண்டவன் என்றும் சொல்லிக் கொண்டதில்லை. அந்தப் பெண்ணை நான் காதலித்தேன்; அவளும் என்னைக் காதலித்தாள். பழந்தமிழ் நாட்டு முறைப்படி இஷ்டப்பட்டு மணந்து கொண்டோம். இதில் என்ன தவறு?''

ஒரு தவறும் இல்லை!" என்று பல குரல்கள் எழுந்தன.

"மணம் புரிந்து கொண்டது தவறு என்று நானும் சொல்லவில்லை. நம்மில் யார்தான் ஒரு தார விரதம் கொண்டவர்கள்? ஆனால்......ஆனால்......"

"ஆனால் என்ன! தயங்காமல் மனத்தைத் திறந்து கேட்டு விடுங்கள்!"

"புது மணம் புரிந்து கொண்ட இளைய ராணியின் சொல்லை எல்லாக் காரியங்களிலும் பழுவேட்டரையர் கேட்டு நடப்பதாகச் சிலர் சொல்கிறார்கள். இராஜரீக காரியங்களில் கூட இளைய ராணியின் யோசனையைக் கேட்பதாகச் சொல்லுகிறார்கள். தாம் போகுமிடங்களுக்கெல்லாம் இளைய ராணியையும் அழைத்துப் போவதாகச் சொல்கிறார்கள்."

இப்போது கூட்டத்தில் ஒரு சிரிப்புச் சத்தம் எழுந்தது.

சம்புவரையர் குதித்து எழுந்து "சிரித்தது யார்? உடனே முன் வந்து சிரித்ததற்குக் காரணம் சொல்லட்டும்!" என்று கர்ஜித்துக் கத்தியை உறையிலிருந்து உருவினார்.

"நான்தான் சிரித்தேன்! பதற வேண்டாம், சம்புவரையரே!" என்றார் பழுவேட்டரையர். பிறகு, "வணங்கா முடியாரே! தாலி கட்டி மணந்த மனைவியை நான் போகுமிடத்துக்கெல்லாம் அழைத்துப் போவது குற்றமா? அவ்விதம் நான் பல இடங்களுக்கு அழைத்துப் போவது உண்மைதான். ஆனால் ராஜரீக காரியங்களில் இளைய ராணியின் யோசனையைக் கேட்கிறேன் என்று சொல்வது மட்டும் பிசகு. அவ்விதம் நான் ஒரு நாளும் செய்வதில்லை......"

"அப்படியானால், இன்னும் ஒரே ஒரு சந்தேகத்தை மட்டும் நிவர்த்தி செய்யும்படி பாழூர்த்தேவரை வேண்டிக் கொள்கிறேன். அந்தப்புரத்தில் இருந்திருக்க வேண்டிய பல்லக்கு இங்கே நாம் அந்தரங்க யோசனை செய்யும் இடத்திற்கு ஏன் வந்திருக்கிறது? பல்லக்கிற்குள்ளே யாராவது இருக்கிறார்களா, இல்லையா? இல்லையென்றால் சற்று முன்பு கேட்ட கிளைப்புச் சத்தமும், வளையல் குலுங்கும் சத்தமும் எங்கிருந்து வந்தன?"

இவ்விதம் வணங்காமுடியார் கேட்டதும் அந்தக் கூட்டத்தில் ஒரு விசித்திரமான நிச்சப்தம் நிலவிற்று. பலருடைய மனதிலும் இதேவித எண்ணமும் கேள்வியும் தோன்றியிருந்தபடியால், வணங்கா முடியாரை எதிர்த்துப் பேச யாருக்கும் உடனே துணிவு ஏற்படவில்லை. சம்புவரையரின் உதடுகள் ஏதோ முணுமுணுத்தன. ஆனால் அவர் வாயிலிருந்தும் வார்த்தை ஒன்றும் கேட்கவில்லை.

அந்த நிச்சப்தத்தைக் கிழித்துக் கொண்டு பழுவேட்டரையர் கணீர் என்று கூறினார்:—"சரியான கேள்வி; மறுமொழி சொல்ல நான் கடமைப்பட்டவன். இந்தக் கூட்டம் கலைவதற்கு முன்னால் உங்கள் சந்தேகத்தைத் தீர்த்துவைக்கிறேன். இன்னும் அரை நாழிகை பொறுத்திருக்கலாம் அல்லவா? அவ்வளவு நம்பிக்கை என்னிடம் உங்களுக்கு இருக்கிறது அல்லவா?"

"இருக்கிறது, இருக்கிறது. பழுவேட்டரையரிடம் எங்களுக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது!" என்று பல குரல்கள் கூவின.

"மற்றவர்களைக் காட்டிலும் பழுவேட்டரையரிடம் எனக்குப் பக்தியும் மரியாதையும் குறைவு என்று யாரும் எண்ண வேண்டாம். அவர் மனதைத் திறந்து கேட்கச் சொன்னபடியால் கேட்டேன். மற்றப்படி அவர் இட்ட கட்டளையை நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன். இந்தக் கணத்தில் என் உயிரைக் கொடுக்கச் சொன்னாலும் கொடுக்கச் சித்தம்!" என்றார் வணங்காமுடி முனையரையர்.

"வணங்கா முடியாரின் மனத்தை நான் அறிவேன். நீங்கள் எல்லாரும் என்னிடம் வைத்துள்ள நம்பிக்கையையும் அறிவேன். ஆகையால், இன்று எதற்காகக் கூடினோமோ, அதைப் பற்றி முதலில் முடிவு கொள்வோம். சுந்தர சோழ மகாராஜா நீடூழி இவ்வுலகில் வாழ்ந்து இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆளட்டும். ஆனால் ஒருவேளை ஏதாவது அவருக்கு நேர்ந்து விட்டால், வைத்தியர்களுடைய வாக்குப் பலித்து விட்டால், சில நாளாகத் தோன்றி வரும் தூமகேது முதலிய உற்பாதங்கள் பலித்து விட்டால், அடுத்தபடி இந்தச் சோழ சாம்ராஜ்

யத்தின் பட்டத்துக்கு உரியவர்யார் என்பதை நாம் தீர்மானிக்கவேண்டும்.''

"அது விஷயமாகத் தங்கள் கருத்தைத் தெரிவிக்கும்படி கோருகிறோம். தங்களுடைய கருத்துக்கு மாறாகச் சொல்லக் கூடியவர் இந்தக் கூட்டத்தில் யாரும் இல்லை.''

"அது சரியல்ல. ஒவ்வொருவரும் சிந்தித்துத் தங்கள் கருத்தை வெளியிடவேண்டும். சில பழைய செய்திகளை உங்களுக்கு ஞாபகப் படுத்த விரும்புகிறேன். மகா வீரரும் மகா ஞானியும் புண்ணிய புருஷருமான **கண்டராதித்த தேவர்** யாரும் எதிர்பாராத வண்ணம் இருபத்துநாலு ஆண்டுகளுக்கு முன்னால் காலமானார். அச்சமயம் அவருடைய புதல்வர் **மதுராந்தகத் தேவர்** ஒரு வயதுக் குழந்தை. ஆகவே தமது தம்பி **அரிஞ்சயதேவர்** பட்டத்துக்கு வரவேண்டும் என்று திருவாய் மலர்ந்துவிட்டுப் போனார். இதை அவருடைய தர்மபத்தினியும் பட்ட மகிஷியுமான **செம்பியன் மாதேவி**தான் நமக்கு அறிவித்தார்கள். அந்தப்படியே அரிஞ்சய சோழருக்கு முடிசூட்டிச் சக்கரவர்த்தி பீடத்தில் அமர்த்தினோம். ஆனால் விதிவசமாக அரிஞ்சய சக்கரவர்த்தி சோழ சிம்மாசனத்தில் ஒரு ஆண்டுக்கு மேல் அமர்ந்திருக்கவில்லை. அரிஞ்சய சோழருடைய மூத்த புதல்வர் **பராந்தக சுந்தர சோழர்** இருபது வயது இளங் காளைப் பருவம் எய்தியிருந்தார். எனவே, ராஜ்யத்தின் நன்மையை முன்னிட்டு மந்திரிகளும் சாமந்தர்களும் குறுநில மன்னர்களும் நகரத் தலைவர்களும் கூற்றத் தலைவர்களும் சேர்ந்து யோசித்துப் பராந்தக சுந்தர சோழருக்கு முடிசூட்டினோம். அதைக் குறித்து யாரும் வருத்தப்பட இடமில்லை. ஏனெனில், சுந்தர சோழ மகாராஜா இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் நெறி தவறாமல் நாட்டைப் பரிபாலித்து வந்தார். நம்மையெல்லாம் நன்கு மதித்து யோசனை கேட்டு ராஜ்ய பாரம் நடத்தினார். இதனால் சோழ ராஜ்யம் மேலும் விஸ்தரித்துச் செழித்தது. இப்போது சுந்தர சோழ மகாராஜாவின் உடல்நிலை கவலைக்கிடமாகியிருக்கிறது. இந்த நிலைமையில் அடுத்தபடி பட்டத்துக்குரியவர் யார்? கண்டராதித்த தேவரின் திருக் குமாரர் **மதுராந்தகர்** இப்போது பிராயம் வந்து ராஜ்ய பரிபாலனம் செய்யக்கூடியவரா யிருக்கிறார். அறிவினாலும் கல்வியினாலும் குணத்தினாலும் பக்தி சிரத்தையினாலும் எல்லா விதத்திலும் பட்டத்துக்குத் தகுந்தவரா யிருக்கிறார். அவரிலும் ஒரு வயது இளையவரான **ஆதித்த கரிகாலர்** — சுந்தர சோழரின் புதல்வர்—காஞ்சியில் வடதிசைப் படையின் சேனாதிபதியாக இருந்து வருகிறார். இந்த இருவரில் யார் பட்டத்துக்கு வருவது நியாயம்? குல முறை என்ன? மனு நீதி என்ன? தமிழகத்தின் பழமையான மரபு என்ன? மூத்தவரின் புதல்வர் **மதுராந்தகர்** பட்டத்துக்கு வருவது நியாயமா? அல்லது இளையவரின் பேரர் பட்டத்துக்கு வருவது முறைமையா? நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் கருத்தை மனம் விட்டுச் சொல்ல வேண்டும்...''

"மூத்தவராகிய கண்டராதித்த தேவரின் புதல்வர் மதுராந்தகர்தான் பட்டத்துக்கு உரியவர். அதுதான் நியாயம், தர்மம், முறைமை'' என்றார் சம்புவரையர்.

"என் அபிப்பிராயமும் அதுவே'' "என் கருத்தும் அதுவே!'' என்று அக்கூட்டத்தில் உள்ள ஒவ்வொருவரும் சொல்லி வந்தார்கள்.

"உங்கள் அபிப்பிராயம்தான் என் அபிப்பிராயமும். மதுராந்தகருக்குத்தான் பட்டம் உரியது. ஆனால் அந்த உரிமையை நிலைநாட்டுவதற்காக நாம் ஒவ்வொருவரும் பிரயத்தனம் செய்யச் சித்தமா யிருக்கிறோமா? உடல் பொருள் ஆவியைத் தத்தம் செய்து போராடச் சித்தமா யிருக்கிறோமா? இந்த நிமிஷத்தில் துர்க்காதேவியின் பாதத்தில் ஆணையிட்டு அவ்விதம் சபதம் செய்வதற்குச் சித்தமா யிருக்கிறோமா?'' என்று பழுவேட்டரையர் கேட்டபோது அவர் குரலில் அதுவரையில் இல்லாத ஆவேசம் தொனித்தது.

கூட்டத்தில் சிறிதுநேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. பிறகு சம்புவரையர், "அவ்விதமே தெய்வ சாட்சியாகச் சபதம் கூறச் சித்தமா யிருக்கிறோம். ஆனால் சபதம் எடுத்துக் கொள்வதற்கு முன்னால் ஒரு விஷயத்தைத் தாங்கள் தெளிவுபடுத்த வேண்டும். இளவரசர் மதுராந்தகரின்

கருத்து என்ன? அவர் சிங்காதனம் ஏறி ராஜ்யபாரத்தை ஏற்கச் சித்தமா யிருக்கிருரா? கண்டராதித்தரின் தவப் புதல்வர் உலக வாழ்க்கையை வெறுத்துச் சிவபக்தியில் பூரணமாக ஈடுபட்டுள்ளார் என்று கேள்விப் படுகிருேம். இராஜ்யத்தில் அவருக்கு விருப்பமில்லை என்று பலர் சொல்லவும் கேட்டிருக்கிருேம். அவருடைய அன்னையார் செம்பியன்மாதேவியார் தமது புதல்வர் பட்டத்துக்கு வருவதற்கு முற்றும் விரோதமாயிருக்கிருர் என்றும் கேட்டிருக்கிருேம். தங்களிடமிருந்து இதைப் பற்றிய உண்மையை அறிய விரும்புகிருேம்."

"சரியான கேள்வி; தக்க சமயத்தில் கேட்டீர்கள். இதைத் தெளிவுப் படுத்தும் கடமையும் எனக்கு உண்டு. முன்னமே சொல்லி யிருக்க வேண்டும். சொல்லத் தவறியதற்காக மன்னியுங்கள்" என்று பீடிகை போட்டுக் கொண்டு பழுவேட்டரையர் கூறத் தொடங்கிஞர்:—"செம்பியன்மாதேவி தமது ஏக புதல்வரை இராஜ்யபார ஆசையிலிருந்து திருப்பிச் சிவபக்தி மார்க்கத்தில் செலுத்துவதற்குப் பிரயத்தனப்பட்டு வந்தது நாடு அறிந்த விஷயம். ஆனல் இதன் காரணம் என்னவென்பதை நாடும் அறியாது; நாட்டு மக்களும் அறியார்கள். மதுராந்தகருக்கு இராஜ்யமாளும் விருப்பம் இருப்பதாகத் தெரிந்தால் அவருடைய உயிருக்கே ஆபத்து வரலாம் என்று பெரிய பிராட்டியார் பயந்தது தான் காரணம்......"

"ஆஹா!" "அப்படியா?" என்ற குரல்கள் கூட்டத்தில் எழுந்தன.

"ஆம்; பெற்ற தாய்க்குத் தன் ஏக புதல்வன் சிம்மாசனம் ஏற வேண்டும் என்னும் ஆசையைக் காட்டிலும் பிள்ளை உயிரோடிருக்க வேண்டும் என்ற ஆசைதானே அதிகமா யிருக்கும்? அன்னையின் வாக்கே தெய்வத்தின் வாக்கு என்று மதித்து வந்த மதுராந்தகரும் மனதை விரக்தி மார்க்கத்தில் செலுத்தி யிருந்தார். சிவ பக்தியில் முழுதும் ஈடுபட்டிருந்தார். ஆனல் சிலகாலமாக அவருடைய மனது சிறிது சிறிதாக மாறி வந்திருக்கிறது. இந்தச் சோழ சாம்ராஜ்யம் தமக்கு உரியது, அதைப் பராமரிப்பது தம்முடைய கடமை என்ற எண்ணம் அவருடைய மனதில் வேரூன்றி வளர்ந்திருக்கிறது. நீங்கள் எல்லாம் அவரை ஆதரிப்பதாகத் தெரிந்தால், தக்க சமயத்தில் பகிரங்கமாக முன்வந்து சொல்லவும் சித்தமா யிருக்கிருர்......"

"இதற்கு அத்தாட்சி என்ன?"

"உங்களுக்கெல்லாம் திருப்தி தரக்கூடிய அத்தாட்சியை இப்போதே அளிக்கிறேன். அளித்தால் அனைவரும் பிரமாணம் செய்யச் சித்தமா யிருக்கிறீர்களா?"

பல குரல்கள் "இருக்கிருேம்! இருக்கிருேம்!" என்று ஒலித்தன.

"யாருடைய மனதிலும் வேறு எவ்விதச் சந்தேகமும் இல்லையே?"

"இல்லை! இல்லை!"

"அப்படியானல் இதோ அத்தாட்சி கொண்டு வருகிறேன். வணங்காமுடி முனையரையரின் சந்தேகத்தையும் இப்போதே தீர்த்து வைக்கிறேன்!" என்று கூறிக்கொண்டே பழுவேட்டரையர் எழுந்தார். கம்பீரமாக நடந்து அங்கே சமீபத்தில் வைக்கப்பட்டிருந்த மூடு பல்லக்கின் சமீபத்தில் சென்ருர்.

"இளவரசே! பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு வெளியே எழுந்தருள வேண்டும். தங்களுக்காக உடல் பொருள் ஆவியை அர்ப்பணம் செய்யச் சித்தமான இந்த வீராதி வீரர்களுக்குத் தங்கள் முக தரிசனத்தைத் தந்தருள வேண்டும்!" என்று மிகவும் பணிவான குரலில் கூறிஞர்.

மேல் மாடத்தில் தூண் மறைவில் உட்கார்ந்து ஒரு வார்த்தை விடாமல் அடங்கா ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன் இப்போது ஜாக்கிரதையாகக் கீழே பார்த்தான். பல்லக்கின் திரையை முன் போலவே ஒரு கரம் விலக்கிற்று. அது பொன் வண்ணமான கரம். முன்னே ஒரு முறை அவன் பார்த்த அதே செக்கச்சிவந்த கரந்தான். ஆனல் அவன் முன்னம் வளையல் என்று நினைத்தது உண்மையில் அரச குமாரர் அணியும் கங்கணம் என்பதை இப்போது கண்டான். அடுத்த கணம் பூரண சந்திரனை யொத்த அந்தப்

பொன் முகமும் தெரிந்தது. மன் மதனை யொத்த ஓர் அழகிய உருவம் பல்லக்கிலிருந்து வெளியே வந்து புன்னகை புரிந்து நின்றது. ஆகா! கண்டராதித்த தேவரின் புதல்வரான இளவரசர் மதுராந்தகரா இவர்! பல்லக்கினுள் இருந்த படியால் பெண்ணாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் அல்லவா அந்தத் தவறைச் செய்து விட்டோம்! தன்னைப்போல அதே தவறைச் செய்த ஆழ்வார்க்கடியான் நம்பி சுவர்மேல் தலையை நீட்டிக் கொண்டிருக்கிறானா என்று வந்தியத்தேவன் பார்த்தான். அந்த இடத்தில் மர நிழல் விழுந்து இருள் சூழ்ந்திருந்தது. ஆகையினால் அங்கு ஒன்றும் தெரியவில்லை.

இதற்குள் இடையே, "மதுராந்தகத் தேவர் வாழ்க! பட்டத்து இளவரசர் வாழ்க! வெற்றி வேல்! வீரவேல்!" என்ற ஆவேசமான முழக்கங்கள் கிளம்பின. கூட்டத்தில் இருந்தவர்கள் எல்லாரும் எழுந்து நின்று வாளையும் வேலையும் உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டு அவ்விதம் கோஷமிட்டதை வந்தியத்தேவன் கண்டான். இனிமேல் அங்கிருப்பது அபாயமாக முடியலாம் என்று எண்ணித் தான் படுத்திருந்த இடத்துக்கு விரைந்து சென்று படுத்துக் கொண்டான். (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

# சொல்லமாட்டாயா என் நோயை!

காவிரி ஆற்றின் தென் கரையில் இருக்கிறது உறையூர். — சோழனது தலைநகரம். காவிரியை விட்டுக் கொஞ்சம் வடக்கே உள்ள ஒரு ஊரில் சோழனது காதலி இருக்கிறாள்.

சோழ மன்னன் அடிக்கடி தன் காதலி இருக்கும் ஊருக்குச் சென்று அவளுடன் அளவளாவி இருந்து விட்டுத் திரும்புவது உண்டு.

சில சமயங்களில் ஒரு நாள் இரண்டு நாள் சேர்ந்தாற்போல் மன்னன் வரவில்லையானால் அவள் மிகவும் வேதனைப் பட்டுப் போய் விடுவாள்.

ஒரு சமயம் சோழ மன்னன் மாசக் கணக்கில் வரவில்லை.

காதலிக்கு ஒரே ஏக்கம்; பயமும்கூடத் தான்—சோழ மன்னன் எங்கே வராமலே இருந்து விடுவாரோ என்று.

• • •

ஒரு நாள் மாலை நேரம்: வழக்கம் போல் ஊரை அடுத்திருக்கும் தாமரைக் குளத்துக்குப் போகிறாள் பெண். குளித்து விட்டு வருவதாகப் போகிறாள். குடத்தையும் கொண்டு போகிறாள்.

குளத்தை அடைந்தாள். குடத்தைக் கீழே வைத்தாள்.

அந்த நேரம் வடதிசையிலிருந்து பறந்து வந்த ஒரு நாரை பெண்ணின் முன்பாக இறங்கித் தண்ணீர்க்குள் நிற்கிறது.

காதல் வெறிதான் இடை விடாது பெண்ணின் மனதை வேதனையில் ஆழ்த்தி வாட்டிக்கொண்டிருக்கிறதே!

நாரையைப் பார்த்த மாத்திரத்தில் அதை நோக்கிச் சொல்லுகிறாள் கெஞ்சியவாறாக:

செங்கால் மடநாராய்!
தென்உறந்தை சேறியேல்

நின்கால்மேல் வைப்பன்என்
கையிரண்டும் — வன்பால்க்

கரைஉரைஞ்சி மீன்பிறழும்
காவிரிநீர் நாடற்(கு)

உரையாயோ யான்உற்ற
நோய்!

[தென் உறந்தை: தெற்கே உள்ள உறையூர்; சேறியேல்: செல்லுவாயானால்; நின் கால்மேல் வைப்பன் என் கை இரண்டும்: உன் காலை என் கையைக் கொண்டு தொட்டுக் கும்பிடுவேன்; வன்பால்: கொழுத்துள்ள வலிமை காரணமாக: கரை உரைஞ்சி மீன் பிறழும்: தத்திப் பித்திக் கரைமேல் மீன் ஏறுகிற: காவிரி நீர் நாடற்கு: காவிரியின் அபூர்வமான நீர் வளம் கொண்ட நாட்டை உடைய சோழ மன்னனுக்கு; உரையாயோ யான் உற்ற நோய்: சொல்லமாட்டாயா; என்னைப் பாடாய்ப் படுத்துகிற இந்தக் காதல் நோயை — ஏ நாரையே!]

• • •

முத்தொள்ளாயிரச் செய்யுள் இது. காதலும் சோகமும் கலந்து வெகு அருமையாய் ஒலிக்கின்றன.

# யாழ்ப்பாணத்தில் சர்வ கலாசாலை

ரஜனி

கொழும்பு, டிஸம்பர், 9

இலங்கை இந்தியக் காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. ராஜலிங்கம் பிரதம மந்திரி ஸ்ரீ சேனநாயகாவுக்கு ஒரு முக்கியமான கடிதம் எழுதியிருக்கிறார். இலங்கை இந்தியர்களின் குறைகளையெல்லாம் அதில் சவிஸ்தாரமாக எடுத்துச் சொல்லி அவைகளைப் பற்றி விவாதித்து ஒரு சௌஜன்ய முடிவுக்கு வர விரும்புவதாயும், இலங்கை இந்திய காங்கிரஸ் தூது கோஷ்டி யொன்றைச் சந்தித்துப் பேச ஒரு தேதி குறிப்பிட வேண்டுமென்றும் ஸ்ரீ ராஜலிங்கம் கேட்டிருக்கிறார். இலங்கை இந்திய அரசாங்கங்களின் பிரதிநிதிகளும் காங்கிரஸ் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு வட்டமேஜை மகாநாடு கூட்டவேண்டும் என்று ஜனாப் ஏ. அஸீஸ் கூறினார். அவ்வித மகாநாடு கூட்டுவதினால் பிரயோசனமில்லை யென்றும் இந்தியர்களுக்கு உண்மையில் ஏதாவது குறைகள் இருக்குமானால் அவர்கள் இலங்கை அரசாங்கத்தினிடம் முறையிட வேண்டுமே தவிர இந்தியாவின் உதவியை நாடக்கூடாது என்றும் பிரதம மந்திரி சொன்னார். இலங்கை இந்தியக் காங்கிரஸ் தூது கோஷ்டி யொன்று தங்களுடன் விவாதிக்க வந்தால் அந்தத் தூது கோஷ்டியுடன் சம்பாஷிக்கத் தயாராயிருப்பீர்களா என்று கேட்டபொழுது "கண்டிப்பாகத் தயாராயிருப்பேன்!" என்றும் பிரதமர் கூறினார். இதன் பயனாகவே காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ ராஜலிங்கம் பிரதம மந்திரிக்கு அவரைப் பேட்டி காண ஒரு தேதி கேட்டு எழுதியிருக்கிறார்.

இலங்கை-இந்தியா பிணக்கு இவ்விரு நாடுகளுக்கு மட்டுமல்லாது ஆசியாவின் அமைதிக்கும், உலகத்தின் பாதுகாப்புக்குமே ஆபத்து விளைவிக்கக் கூடியது. எனவே ஸ்ரீ ராஜலிங்கம் கீட்டியுள்ள கட்புக் கரத்தைப் பற்றி விவேகத்துடனும், ராஜ தந்திரத்துடனும் தாராள மனப்பான்மையுடனும் நடந்து கொள்ளுவாராயின் இந்தியர் பிரச்னை முழுவதும் தீர்க்கப்பட்டு இந்தியர் சிங்களவரின் நட்பு உரம்பெற உறுதியான அஸ்திவாரமிடுவதாயிருக்கும்.

## யாழ்ப்பாணத்துக்கு ஒரு சர்வகலாசாலை

யாழ்ப்பாணத்துக் கல்லூரி ஸீனியர் ஹாண்டல் யூனியனின் வருஷாந்திர விருந்து இவ் வாரம் நடைபெற்ற பொழுது பரமேஸ்வராக் கல்லூரி அதிபர் ஸ்ரீ எஸ். நடேசன் "தமிழ்க் கலாசாரமும் சுதந்திர இலங்கையும்" என்னும் பொருள் பற்றி ஒரு அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார்.

சமஸ்கிருதத்தைப் போல் தமிழும் தொன்மையான பாஷைதானென்றும் தமிழ் மொழியின் கவிதா வளம் உயர்ந்திருக்க இலக்கியங்களையும் மிஞ்சியதென்றும் இந்த விலை மதிக்க முடியாத அரும் பெரும் பொக்கிஷத்தை அரசியல் பொருளாதார வாழ்வில் பரிமளிக்கச் செய்வது இலங்கைத் தமிழர்கள் ஒவ்வொருவருடைய கடமையாகு மென்றும் ஸ்ரீ நடேசன் சொல்லியபொழுது "எங்கே அந்தத் தமிழ்! அதைக் கொண்டு வாருங்கள் இப்படி! அதை முன்னுக்குக் கொண்டு போய் விட்டுத்தான் மறு வேலை!" என்பது போலக் கூட்டத்தினர் பலத்த கரகோஷமும் செய்து ஆர்ப்பரித்தனர்.

யாழ்ப்பாணக் கல்லூரி அதிபர் ஸ்ரீ வெ.எ. செல்லையா பிறகு பேசுகையில் தமிழ்ப் பெரு மக்கள் வாழும் யாழ்ப்பாணத்துக்கு ஒரு சர்வகலாசாலை அவசிய மென்றும், அதை ஸ்தாபிக்க பார்லிமெண்டிலுள்ள தமிழ் அங்கத்தினர்கள் உடனே நடவடிக்கை யெடுத்துக் கொள்ள வேண்டு மென்றும் வற்புறுத்தினார்.

## அரசாங்க மதம்

பௌத்த மதத்தை அரசாங்க மதமாகப் பிரகடனம் செய்ய வேண்டுமென்று சுகாதார மந்திரி ஸ்ரீ பண்டார நாயகா விளைப்பிய சர்ச்சை ஒரு பெரிய பிரச்னையாகிக் கொண்டிருக்கிறது. இதைப்பற்றி மந்திரிகளே முரண்பட்ட அபிப்பிராயங்களைத் தெரிவிக்க ஆரம்பித்துள்ளனர். பிரதம மந்திரியும் போக்குவரத்து மந்திரி ஸர் ஜான் கொத்தலாவலையும் இந்த யோசனையை ஆதரிக்கவில்லை யென்பதை ஏற்கெனவே பகிரங்கமாகத் தெரிவித்துவிட்டனர். இப்பொழுது அடுத்த படியாக உணவு மந்திரி ஸ்ரீ ஏ. ரத்நாயகா தம்முடைய எதிர்ப்பை வெளியிட்டிருக்கிறார். பௌத்தர்கள் பௌத்த மதக் கோட்பாடுகளைச் சரியாக அனுஷ்டிப்பார்களாயின் பௌத்த மதம் காலக்கிரமத்தில் தானாகவே அரசாங்க மதமாகிவிடுமென்றும், பிற மதத்தவர்கள் புண்படக்கூடிய முறையில் பௌத்த மதத்தை ராஜாங்க மதமாகப் பிரகடனம் செய்வது சிறிதும் விரும்பத்தக்கதல்லவென்றும் ஸ்ரீ ரத்நாயகா சொல்லி யிருக்கிறார்.

## குணசிங்காவின் சலுகை

ராஜாங்க மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்கா இலங்கை இந்தியர்களுக்கு இவ்வாரம் ஒரு முக்கியமான சலுகை காட்டியிருக்கிறார். அவருடைய இலங்கையர் மயமாக்கும் திட்டத்தில் இரண்டு நிபந்தனைகள் இந்தியர்களைக் கடுமையாகவும் நியாய மற்ற முறையிலும் பாதிப்பதாயிருந்தன. வேலை கொடுக்கும் விஷயத்தில் இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்ட இந்தியர்களைக் காட்டிலும் வம்சாவளிப் பிரஜைகளுக்கு முதல் சலுகை காட்டவேண்டுமென்பது.

இந்தக் கோரிக்கை இலங்கை அரசாங்கம் இயற்றிய பிரஜா உரிமைச் சட்டத்துக்கே விரோதமானதென்பதை உணர்ந்து அவர் வாபஸ் பெற்றார். இரண்டாவது நிபந்தனை நவம்பர் முதல் தேதிக்குப் பின்னர் எந்த வேலைக்கும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இலங்கையரல்லாதார்களை நியமிக்கப் படாதென்பதாகும். இது சமீபத்தில் இங்கு வந்த இந்தியர்களை மட்டுமல்லாமல் பல வருடங்களாக இலங்கையிலிருக்கும் இந்தியர்களையும் பாதிப்பதாயுள்ளது. இதைப்பற்றி ஸ்ரீ குணசிங்காவிடம் கேட்டபோது இந்தியர்கள் அவரவர்களுடைய வேலைகளில் தொடர்ந்திருக்கலாமென்றுதான் ஸ்ரீ சேனநாயகா பண்டித நேருவுக்கு உறுதி கூறினாரே தவிர இஷ்டப்பட்ட நேரத்தில் இந்தியர்கள் ஒரு வேலையிலிருந்து மற்றொரு வேலைக்குத் தாவுவதை அனுமதிப்பதாகச் சொல்லவில்லையென்று குதர்க்க வியாக்கியானம் செய்தார். சென்ற சனிக்கிழமை "ஹிந்து" பத்திரிகையின் கொழும்பு நிருபர் குணசிங்காவைப் பேட்டி கண்டு அவரது வியாக்கியானம் இந்தியாவில் மிக மிகக் கடுமையான எதிர்ப்பை உருவாக்குமென்பதைச் சுட்டிக் காட்டிய பொழுது, நேருவுக்கு சேனநாயகா உறுதிமொழி யளித்த 1948ம் வருட ஜூலை மாதத்துக்கு முன் இலங்கையிலிருந்த இந்தியர்கள் தொடர்ந்திருக்கவும், தற்போதைய வேலைகள் போய் விட்டால் புதிய வேலைகள் தேடிக்கொள்ளவும் அனுமதிப்பதாயும் இந்த அடிப்படையில் இலங்கை இந்திய வர்த்தகச் சங்கத்துடன் ஒரு உடன்படிக்கை செய்து கொள்ளுவதாயும் அவர் உறுதி கூறினார்.

## மற்றொரு முட்டுக்கட்டை

சாமி வரம் கொடுத்தாலும் பூசாரி வரம் கொடுத்தாகவேண்டுமென்பதுண்டு. அதே போலப் பிரதமர் உறுதிமொழி யளித்து அதைக் கௌரவிக்க ஸ்ரீ குணசிங்கா காட்டியுள்ள சலுகையை அனுசரிக்க 1948-ம் வருட ஜூலை மாதத்துக்கு முன்னால் இலங்கையிலிருந்த இந்தியர் அனைவருக்கும் இமிகிரேஷன் கண்ட்ரோலர் விசா பர்மிட் கொடுத்தாலொழிய இந்தியாவுக்கு ஒரு முறை செல்லும் இந்தியர்கள் இலங்கைக்கு மறுபடி திரும்பிவர முடியாது. 1945-ம் வருடத்திலிருந்து இலங்கையில் வசிப்பதை நம்பக்கூடிய அத்தாட்சிகளோடு ருசுப்படுத்துகிறவர்களுக்கு மட்டுமே இமிகிரேஷன் கண்ட்ரோலர் இப்பொழுது வாச பர்மிட்டு கொடுத்து வருகிறார். இந்தக் கொள்கையை அவர் தொடர்ந்து அனுஷ்டிப்பாரானால் ஸ்ரீ குணசிங்கா காட்டத் தயாராயிருக்கும் சலுகை கண்துடைப்பு வித்தைமாதிரியாயிருக்குமே தவிர அனுஷ்டானத்தில் அதற்கு அர்த்தமிருக்காது. எனவே இது விஷயமாக ஸ்ரீ குணசிங்கா இமிகிரேஷன் கண்ட்ரோலரைச் சந்தித்து தம்முடைய வார்த்தைக்கு மதிப்பு இருக்கக்கூடிய முறையில் 1948-ம் வருட ஜூன் மாதத்துக்கு முன் இலங்கையிலிருந்தவர்களுக்கெல்லாம் வாச பர்மிட்டு வழங்குமாறு செய்ய வேண்டும் என்றும் அவர் இதைச் செய்துவிட்டால் இலங்கை இந்தியர் பிரச்னை முழுவதும் தீர்ந்துபோன மாதிரியாகிவிடுமென்றும் காங்கிரஸ் வட்டாரங்கள் கூறுகின்றன.

## கொழும்பில் நடன விழா

இவ்வாரம் கொழும்பு ராயல் கல்லூரியில் நடன விழா வெகு சிறப்பாக ஆரம்பமாகி நடக்கின்றது. இந்திய ஹைகமிஷனரின் காரியதரிசி ஸ்ரீ ராகவாச்சாரியின் புதல்வி, செல்வி இந்திரா உட்பட அனேகம் தமிழ், சிங்களம், ஆங்கிலக் குழந்தைகள் இவ் விழாவில் பங்கெடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்திய நடனங்களைப் பார்வையிட்டு மதிப்பிடுவதற்காகச் சென்னையிலிருந்து ஸ்ரீ ஈ. கிருஷ்ணய்யர் இங்கு வந்திருக்கிறார். விழாவின் ஆரம்ப தினத்தன்று ஸ்ரீ கிருஷ்ணய்யர் பேசுகையில் தாம் எதிர்பார்த்ததைவிட நடனங்கள் இலங்கையில அபாரமாக முன்னேறியிருப்பதைக் கண்டு தாம் ஆச்சரியமடைவதாகக் கூறிவிட்டு, நடனம் மனதில் தீய எண்ணங்களைக் கிளப்பி விடுவதற்கு உபயோகப்படுத்தப்படாமல் உயர்ந்த பண்பாடுகளைப் பிரதிபலிப்பதாயிருக்க வேண்டும் என்றும் கூறினார். அவருக்கு யாழ்ப்பாணத்திலிருந்தும் பல அழைப்புகள் வந்திருக்கின்றன. இவ்வார முடிவு வரையில் கொழும்பிலிருந்து விட்டு யாழ்ப்பாணத்துக்குப் போகிறார்.

துணிகள்
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

துணிகள்
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன...

# ஸன்லைட் சோப்பினால்

**தான்**




துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 128-60 TM

# பட்டுப் புடவை

கிரிஜா

சிலு சிலு வென்று அடித்த காற்றினூடே, சில்லென்று விழுந்த மழைத்துளிகள் என்மேல் படவும் நான் மலர்ச்சி பெற்று நிமிர்ந்தேன். ஆஹா! என்னைச் சுற்றிலும் எத்தனை அழகான காட்சிகள்! பருவ காலப் பெண்ணைப் போல தெளிந்து, குழைந்து ஓடிக்கொண்டிருந்தது ஒரு ஆறு. ஆற்றின் தென் புறம் முற்றிலும், 'பசேல்' என்ற வயற்பரப்பு; ஆற்றின் வடபுறம் சிறு சிறு குடிசைகள் அடங்கிய சேரி. சேரிக்கு அப்பால் கீழ்வானில் அழகாகத் தன் செங்கதிர்களைப் பரப்பிக்கொண்டு, மேலேறி வந்து கொண்டிருந்தான் ஆதவன். அவன் கதிரொளி என்மேல் விழுந்த போது என் அழகைக் கண்டு நானே பெருமிதம் கொண்டு நிமிர்ந்தேன். ஆடம்பரமாக என் உடலை அப்புறமும், இப்புறமும் சாய்த்து ஆடினேன். அப்போது, 'களுக்'கென்று எழுந்த சிரிப்பொலி கேட்டுக் கண்ணிதழ்களைத் திருப்பினேன். என் பக்கத்தில் இருந்த அந்த மகிழமரம் மீண்டும், 'களுக்'கென்று சிரித்துக் 'கலகல'வென்று பேச ஆரம்பித்தது.

''ஏன், ரோஜா! உன் ஆடம்பரமும், ஆட்டமும் கன அமர்க்களமாக இருக்கிறதே! அரை நாழியில் காய்ந்து போகப் போகிற உன் வாழ்வை நினைத்தால் எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. உம்; நீ என்ன! ஆறறிவும் படைத்த மனித வர்க்கமே, அரை நாழியில் அழிந்துவிடக் கூடிய வாழ்வை மறந்து, ஆடம்பரத்தில் சிக்குண்டு தன்னை மறந்து, தன் உள் உணர்ச்சிதனை அழுக்கி விட்டுப் பேயாட்டம் ஆடுகிறது. அந்தப் பேயாட்டத்திலே சிக்குண்டு இரக்கமற்று வீழ்த்தப்பட்ட ஏழைக் குடும்பங்கள் எத்தனையோ! பாவம்; அதோ பார்! அந்தக் குடிசை வாசலிலே அயர்ந்து அசைவற்று உட்கார்ந்திருக்கிறானே ஒருவன், அவன் வாழ்வு தாழ்வு பட்டதும் இந்தப் பேயாட்டத்தினால்தான். கேள்: அவன் கதையை முற்றிலும் சொன்னால் தான் உனக்குப் புரியும்'' என்று சற்று நிறுத்தியது மகிழமரம்.

ஒரு பெருமூச்சுடன் மகிழமரம் சொல்லப் போகிற கதையைக் கேட்க ஆயத்தமானேன். அம்மரமும் சொல்ல ஆரம்பித்தது :—

மூன்று வருஷத்துக்கு முன்னால் இந்த ஆற்றோரத்திலே கையில் ஒரு அழகான புஸ்தகத்துடன் உலாவிக்கொண்டிருப்பான் காளைப் பருவத்துக் காளிமுத்து. இதோ உட்கார்ந்திருக்கிறானே இதே காளிமுத்துதான்! உனக்கு ஆச்சரியமாக இருக்கும்; 'சேரியில் பிறந்த காளிமுத்துவுக்குக் கையில் புஸ்தகம் எதற்கு!' என்று நினைப்பாய். கேள்: அதிசயத்திலும் அதிசயமாக இந்த சேரிப் பையன் பத்தாவது வகுப்புவரை படித்து விட்டான்! இன்னும் ஒரு வருஷம்; பணம் கட்டிப் பரீட்சைகூட எழுதியிருப்பான். அதற்குள்தான் அவன் அப்பன் காலராவுக்கு இரையாகி மாண்டு போனான். அதன் காரணமாகத்தான் அவன் படிப்பு பட்டம் பெறாத படிப்பாக முடிந்தது. இருந்தாலென்ன! சேரியிலே பிறந்த அவன் புஸ்தகம் புரட்டிப் படிக்கும் படிப்பாளி ஆகிவிட்டான்!

'படித்த பிள்ளை' என்பதற்காகச் சேரிவாசிகளும் அவனை மதிப்போடு நடத்தி வந்தார்கள். அதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. ஒரு சமயம் சேரிக்கு வந்த ஒரு தேச பக்தர் இந்தச் சேரிப் பையன் படித்திருப்பது கேட்டுக் கண்களில் பெருமிதம் தோன்ற, ''இனி இந்தப் பையனால் உங்கள் சமூகத்திற்கே விமோசனம் பிறக்கப்போகிறது!'' என்று சொல்லிப் போனார். பிறகு கேட்க வேண்டுமா! காளிமுத்துவும் கன ஒய்யாரமாக உலாவிக்கொண்டே, பல மனக்கோட்டைகள் கட்டுவான். அத்துடன் நிற்காமல் பல மனுக்கள் எழுதிப் பல இடங்களுக்குப் போட்டான்.

காளிமுத்து பிறந்த இந்தச் சேரியில் அவன் பிறந்த மூன்றாவது வருஷம்தான் வள்ளி பிறந்தாள். 'மவராசா வீட்டிலே பிறந்து, மச்சு மெத்தையிலே வளரவேண்டிய பொண்ணு!' என்று அவள் தாய் அவளைக் கொண்டாடுவாள்-வாஸ்தவமாகவே, 'சேற்றிலே செந்தாமரை முளைப்பதுபோல' இந்தச் சேரியிலே வந்து பிறந்தாள் வள்ளி. அவள் நிறம்கூடச் சேரிவாசிகளுக்கு ஒத்துக்கொள்ளாத நிறம். காளிமுத்துவும், வள்ளியும் குழந்தைப் பருவத்தில் என் நிழலில், என் மலர்களை அள்ளி விளையாடி வளர்ந்த குழந்தைகள். அதனால் அவர்கள் அன்பும் என் மலரைப்போல மணம் குன்றாததாக அமைந்தது.

அன்று பதினெட்டாம் பெருக்கு. பதினெட்டுப் படிகளும் நிரம்பி வழிந்து ஓடிக்கொண்டிருந்தது இந்த ஆறு. அன்று இவ்வூர்ப் பெண்கள் அனைவரும் விதவிதமான பட்டாடை உடுத்தி இந்த ஆற்றின் கரையிலே வந்து கூடியிருந்தார்கள். அந்த வேடிக்கையைப் பார்த்த வண்ணம் சற்றுத் தொலைவில் நின்றிருந்தான் காளிமுத்து. அவனுக்கு அப்பால் சற்று விலகி நின்று, பெரும் வியப்பால் விரிந்த கண்களுடன் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தாள் வள்ளி. பெரும் வியப்பினால் அவளை யறியாமலே அவள் வாயினின்றும் வார்த்தைகள் வெளி வந்தன :—

''நம்ம சனங்க இந்த மாதிரிப் பட்டுச் சேலையை என்னிக்குமே கட்ட முடியாதல்லவா!'' என்றாள்.

இதைக் கேட்ட காளிமுத்து அலக்ஷியமாகச் சிரித்தான். பிறகு, ''ஏன் கட்ட முடியாது! நம்ம சனங்களும் படித்துப் பல பெரிய வேலைகளுக்கு வந்து விட்டால் இந்த மாதிரி எத்தனையோ சேலைகள் எடுத்துக் கட்டலாம்'' என்றான்.

அவன் பதிலைக் கேட்டதும் வள்ளியின் வாய், 'ஆ' வென்று திறந்தது. அவள் கண்கள் பின்னும் அகன்று விரிந்தன. ''அப்ப, ஆயி! அப்படியானால் நீ உன் பெண்சாதிக்கு இந்த மாதிரிப் பட்டுச் சேலை எடுத்துடுவாயாக்கும்!'' என்று கேட்டாள்.

''அதிலே உனக்குச் சந்தேகம் வேறேயா, வள்ளி!'' என்றொரு குரல் பின்புறம் கேட்கவே,

இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். காசிமகன் தங்கவேலுதான் அப்படிச் சொல்லிக்கொண்டு வந்தது. நான் சொல்ல மறந்து விட்டேன். வள்ளிக்குக் காளிமுத்து எப்படி மாமன் மகனோ அப்படியே தங்கவேலுவும் இன்னொரு மாமன் மகன்தான். வள்ளி அவனைப் பார்த்ததும் அவள் கண்களைச் சிமிட்டி ஒரு கள்ளச் சிரிப்புச் சிரித்தாள். அவள் சிரிப்பதைக் கண்ட காளிமுத்துவுக்குக் கடுங்கோபம் வந்தது. "ஏன் அப்படிச் சிரிக்கிறாய்! என்னால் பட்டுச்சேலை எடுக்கமுடியாது என்பது உன் எண்ணமாக்கும்!" என்றான் ரோசமாக.

"என் எண்ணம் கிடக்குது தம்பி; உன் எண்ணத்திலேதான் என்னென்னவோ கோட்டைகளெல்லாம் பிறக்குது; கையில் புஸ்தகத்துடன் கனவு காணலாம்; ஆனால், 'அந்தக் கனவு பலிக்குமா!' என்பதையல்லவா பார்க்க வேண்டும்" என்று ஏளனமாகச் சொன்னான் தங்கவேலு.

இதைக் கேட்டதும் காளிமுத்துவுக்கு வந்த கோபம் கட்டுக்கு அடங்காமலே போயிருக்கும். ஆனாலும் அவன் தன் படித்த அறிவைக் கொண்டு அதை அடக்கிக் கொண்டு விட்டான். அதற்குப் பிறகும் அங்கு நிற்கப் பிடிக்காமல், 'விர்'ரென்று நடந்தான் வீட்டைப் பார்க்க.

அவன் அப்படிப் போவதைப் பார்த்துச் சிரித்த தங்கவேலு, "படிக்க விட்டால் ஆயிரெச்சா! சுத்தப் பயந்தாங்கொள்ளி; என் பேச்சுக்கு சரியானபடி 'சவாப்' சொல்ல முடியாமல் ஓடுவதைப்பார்! இப்படிப்பட்டவனை நம்பி இருக்கிறவங்க நடு ஆற்றிலே மிதக்க வேண்டியதுதான்! இன்னிவரை இந்தச் சேரியிலே உள்ளவர்கள் எல்லாரும், 'காளிமுத்து உன்னைத்தான் கட்டிக்கொள்ளப் போகிறான்' என்று நம்பி இருக்காங்க. ஏன், நீகூட அப்படித்தான் நினைத்துக் கொண்டிருப்பாய்; அதிலேதான் எல்லாரும் ஏமாந்து போகப் போறீங்க!" என்றான்.

இதைக் கேட்ட வள்ளி அவனை வெறுப்புடன் பார்த்தாள். "ஏன், எல்லாரும் ஏமாந்து போகணும்! அப்படி நீ அதனிடத்திலே என்ன தப்பைக் கண்டு விட்டாய்! சும்மா எனக்குப் பயம் காட்டுகிறாயாக்கும்!" என்றாள்.

தங்கவேலு கடகடவென்று சிரித்தான். பிறகு சாவதானமாகச் சொன்னான்:—"உன்னைப் பயம்காட்டி எனக்கு என்ன ஆகணும், வள்ளி! இன்னைக்கில்லாட்டி நாளை நீயே எல்லாம் கண்டுகொள்ளத்தான் போகிறாய். அதற்குள்ளாக, 'எனக்கு ஏன் இந்த வம்பு!' என்று இருந்துவிட மனம் வரவில்லை, வள்ளி! உன்மேல் உள்ள பிரியத்தினாலேதான் சொல்லுகிறேன். நீ நம்பினால் நம்பு; நம்பாவிட்டால் போ. அவன் படித்த அதே பள்ளிக்கூடத்திலே ஒரு பொண்ணு படித்ததாம். அந்தப் பொண்ணு ரொம்ப அழகாக இருக்குமாம். அதுவுமில்லாமல் படித்த பொண்ணு; அவனோடு சிநேகமாகப் பழகிய பொண்ணு. 'அந்தப் பொண்ணைத்தான் கட்டிக்குவேன்' என்று பிடிவாதமாக இருக்கிறான்னு அவன் ஆயா சொன்னாள். இந்த விஷயத்தை வச்சுக்கிட்டுத்தான் நான் அப்படிச் சொன்னது" என்று முடித்தான்.

இதைக் கேட்டதும் வள்ளியின் முகம் கறுத்தது. அந்த அயோக்கியன் தங்கவேலு சொன்ன அண்டப் புளுகை அவள் அப்படியே நம்பி விட்டாள் என்பதை அவள் கறுத்த முகமே எடுத்துக் காட்டியது. பாவம்; அவளுக்குத் தன்னைக் காளிமுத்து மணம் செய்துகொள்ள மாட்டான் என்பதுகூடப் பெரிதாக இல்லை. தன் காளிமுத்து; தனக்கே சொந்தமான காளிமுத்து தன் கையால் எடுக்கப்போகும் பட்டுச் சேலையை இன்னொருத்தி கட்டுவதா!—இந்த எண்ணத்தைத் தனக்குத்தானே சொல்லிக் கொண்டவள் 'கோ'வென்று கதறியும் விட்டாள்.

அதன்பின் வள்ளி, இரண்டு தினங்கள் வரை காளிமுத்துவை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. அவன் இருந்த இடத்தை விட்டு எட்டியே போய்க் கொண்டிருந்தாள். இதைக் கண்ட காளிமுத்து பெரும் வியப்படைந்தான். அதோடு, 'அவள் மனம் மாறித் தங்கவேலுவைக் கட்டிக் கொள்வதாக முடிவு செய்து விட்டாளோ!' என்ற ஐயப்பாடும் அவன் உள்ளத்திலே தோன்றியது என்பதை அவன் முகம் எடுத்துக் காட்டியது. இந்த ஐயப்பாடு எழுந்த அரை நாழிகைக்கெல்லாம் அந்த அயோக்கியன் தங்கவேலு, இன்னொரு ஆளுடன் இந்தப் பக்கமாகப் போனவன் சும்மா போகாமல், தன்னை வள்ளி கட்டிக் கொள்வதாகச் சொல்லி விட்டதாகவும், இனிச் சீக்கிரமே தங்கள் கலியாணம் நடக்குமென்றும் காளிமுத்துவின் காதுபடச் சொல்லிக் கொண்டு போனான். இதைக் கேட்டவுடன் காளிமுத்து தன் கையிலுள்ள புஸ்தகத்தைப் 'பொத்'தென்று விட்டெறிந்தான். கைகளால் முழங்காலைக் கட்டிக் கொண்டு கற்சிலையைப் போல் [illegible] உட்கார்ந்து விட்டான். பாவம், அவனைப் பார்க்கவே எனக்குப் பரிதாபமாக இருந்தது.



இன்ஸ்பெக்டர் (ஒரு பையனைப் பார்த்து):—பீங்கானைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? அதை எதிலிருந்து செய்கிறார்கள்?

பையன்:—ஒருவகைக் களிமண்ணிலிருந்து செய்கிறார்கள்.

இன்ஸ்பெக்டர்:—அந்தக் களிமண் எங்கேயிருந்து கிடைக்கிறது?

பையன் (தலையைப் பிடித்துக் கொண்டு யோசனை செய்து):—மண்டையில் இருக்கிறது, வரமாட்டேன் என்கிறது, ஸார்!

பொழுதோடு இப்படி உட்கார்ந்தவன் பொழுது சாய்ந்தும் அசையவில்லை. இப்படிப் பொழுது கழிந்து கொண்டிருக்கும் பொழுது தான் அந்த விம்மல் சத்தம் எழுந்தது. திடுக்கிட்டு எழுந்த காளிமுத்து விம்மல் சத்தம் வந்த திக்கில் பார்வையைச் செலுத்தினான். அந்தி மங்கும் அவ் வேளையில் விம்மி அழுவது யாரென்றே அவனுக்குத் தெரியவில்லை. அருகில் நெருங்கி உற்று நோக்கினான். நோக்கியவன் திடுக்கிட்டு, ''ஆ! வள்ளி! நீயா!'' என்றான். ஆம்; அப்படி அழுது கொண்டிருந்தது, வள்ளிதான்.

''வள்ளி! வள்ளி! இது என்ன! உன்னை யார் என்ன செய்தார்கள்! ஏன் இப்படி அழுகிறாய்! சொல்லமாட்டாயா!'' என்றான் பதறிப் போய். சீறி நிமிரும் பாம்பெனத் தலையைத் தூக்கிய வள்ளி, ''ஆ! நீயும் ஒரு மனுஷனுட்டம்! என்னை அழவைத்தது மல்லாமல், யாரு அழவைத்தார்கள் என்று கேள்வி வேறே கேட்டு விட்டாயாக்கும்!'' என்றாள் ஏகத்தாளமாக.

காளிமுத்துவுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டமாதிரி அவள் சொல்வது ஒன்றும் விளங்கவில்லை. சிறிது நேரம் சும்மா நின்றவன் பிறகு மெதுவாக, ''வள்ளி! நீ என்ன சொல்லுகிறாய்! நீ சொல்லுவது ஒன்றுமே எனக்கு விளங்கவில்லை'' என்றான்.

''விளங்குமா! பள்ளிக்கூடத்திலே படித்த பொண்ணைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிற உனக்கு, இந்தப் படிக்காத மூடம் சொல்வது எப்படி விளங்கும்!'' என்று சொல்லும்பொழுதே வள்ளிக்கு அழுகை வந்து விட்டது.

வள்ளியின் அழுகைக்கான காரணம் ஒருவாறு விளங்க ஆரம்பித்தது காளிமுத்துவுக்கு. ஆனாலும் அவன் சந்தேகம் முற்றிலும் தெளியவில்லை. ஆகையால் சற்று கோபமாக, ''அட, சே! அது வேறேயா! அதுதான் நீயும் படிப்பு இல்லாத தங்கவேலுவைக் கலியாணம் செய்து கொள்வதாக முடிவு செய்து விட்டாயாக்கும்!'' என்றான்.

மீண்டும் சர்ப்பமெனச் சீறி நிமிர்ந்த வள்ளி, ''நிறுத்திக்கொள்ளு. உன்னைப் போல, நன்றி கெட்ட பொம்புள்ளை என்று என்னையும் நினைச்சுட்டாயாக்கும்! அவளைக் கலியாணம் கட்டிக்கிறதாக முடிவு செய்தப்புறம், இங்கே உன் கிட்ட எனக்கு என்ன பேச்சு! இதை யோசனை பண்ணிப் பார்க்கத் துப்பில்லை! படிக்கப் பிட்டாராம் துரை, படிச்ச பொண்ணை வேறு கட்டிக்கிடப் போறாராம்!'' என்று ஏளனமாகச் சொன்ன வள்ளி தன் முகத்தைத் திருப்பி மோவாயில் தோளை மோதி அழகு காட்டினாள்.

அந்திமங்கும் நேரம் கடந்து விட்டதால் அடிவானிலிருந்து அழகாக மேலெழும்பி வரும் பௌர்ணமிச் சந்திரனின் ஒளியிலே வள்ளியின் முகம் மிக்க அழகாக இருந்தது. அந்த அழகில் சொக்கி நின்றிருந்த காளிமுத்து, அவள் தன் முகத்தைத் திருப்பி மோவாயில் மோதிக் கொண்டதும், 'களுக்'கென்று சிரித்து விட்டான். சிரித்தவன் சிறிது முன்னால் வந்து, மிகவும் கனிவாக, ''வள்ளி! நீ உன் மனதை சற்று நிதானப் படுத்திக் கொண்டு பதில் சொல்லு. நான் ஒரு படிச்ச பொண்ணைக் கட்டிக்கப் போவதாகச் சொன்னியே, அந்த அண்டப் புளுகை உன்னிடம் சொல்லி உன் மனசைக் கலக்கிய காலிப்பயல் யார்! அதைச் சொல்லு முதலில்'' என்றான்.

வள்ளியின் கண்கள் கலவரமாக விரிந்தன. 'ஆ' வென்று வாயைப் பிளந்த அவள் தன் அகன்ற பெரிய விழிகளால், அவனைக் கூர்ந்து நோக்கினாள். பிறகு பெரும் வியப்புடன், ''அப்படியானால் நீ அந்தப் பொண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லையா!'' என்று கேட்டாள்.

இதைக் கேட்டுக் கல கல வென்று சிரித்த காளிமுத்து, '''அந்தப் பொண்ணு! அந்தப் பொண்ணு!' என்று உயிரை விடுகிறியே. வள்ளி! அது எந்தப் பொண்ணு! எனக்கு, 'வள்ளி' என்ற பொண்ணைத் தவிர வேறு ஒரு பெண்ணையும் தெரியாது; வள்ளியைத் தவிர நான் வேறு எந்தப் பொண்ணையும் கல்யாணம் செய்துகொள்ளப் போவதுமில்லை! ஆனால் அந்த வள்ளி வேறொரு ஆளை...'' அவன் மேலே தொடர முடியாமல் அவள் குறுக்கிட்டாள்:—''இதோ பாரு! நீ மட்டும், 'வேறொரு ஆளு' என்கிறயே, அது எந்த ஆளு! இதோ நிற்கும் இந்த ஆளைத் தவிர வேறு ஆளை நான் கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லை'' என்றாள்.

அவன் ஆர்வத்துடன், ''வள்ளி!'' என்றான். வெட்கத்தால் சிவந்த முகத்துடன் நின்ற அவளும் மிக்க பரிவுடன், ''முத்து!'' என்றாள். உடனே இருவரும் சேர்ந்து கல கல வென்று நகைத்தனர். நானும் என் மகிழ மலர்களைப் பொல பொல வென்று அவர்கள் மேல் பொழிந்து மகிழ்ந்தேன்'' என்று நிறுத்தி விட்டு, மௌனம் கொண்டது மகிழமரம்.

'கதை முடிந்து விட்டது' என்று எண்ணிய நான் 'கதைக்கும் கருத்துக்கும் என்ன சம்பந்தம்!' என்று எண்ணிச் சிரித்தேன். என் சிரிப்பைக் கேட்டு நிமிர்ந்த மகிழமரம் தன் மௌனத்தைக் கலைத்தது. ''கதையை முடித்து விட்டேன் என்று எண்ணிச் சிரித்தாயாக்கும்! உன் புத்திக்கு எட்டியது அவ்வளவு தான். கருத்துப் பொதிந்த கதையே இனித் தான் ஆரம்பமாகிறது! கேள்'' என்று மறுபடியும் ஆரம்பித்தது.

''சீக்கிரமே வள்ளிக்கும், காளிமுத்துவுக்கும் கலியாணம் நடந்த மறுதினமே காளிமுத்துவுக்கு, 'தாசில்தார் பியூன்' உத்தியோகமும் கிடைத்து விட்டது. காளி முத்துவின் குதூகலத்திற்கு அளவே யில்லை. கைநிறைய வரும் ஐம்பத்தொன்பது ரூபாய் சம்பளத்தை வைத்துக் கொண்டு, சுகவ மார்க்கத்திலே பறந்து கூடச் செல்லலாம் என்று காளிமுத்து எண்ணினான். அதிலேதான் அவன் பெரும் ஏமாற்றம் அடைந்தான்.

அந்தப் பியூன் உத்தியோகத்துக்குத் தகுந்தபடி அவன் தனக்கு உடுப்புகள் தைத்துக் கொள்ள வேண்டியிருந்தது. அத்துடன் அவனைச் சலவை செய்து வெளுப்பாகவும் அணிந்த



கொள்ள வேண்டியிருந்தது. அவன் தம்பி யொருவன் படித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு வேண்டிய புஸ்தகம், துணி மணிகள் மற்றும் அவன், அவன் மனைவி, அவன் தாயார் தம்பி ஆகிய நால்வருக்கான சாப்பாட்டுச் செலவுகள், இவைகளைச் செய்து பார்த்தபோது தான் அவன் திணறிப் போனான்.

'தன் தகப்பன் இருந்தபோது செலவுகளுக்கு இப்படித் திணறவில்லையே!' என்று எண்ணினான். அவன் தகப்பன் நிலம் குத்தகை பார்ப்பதில் வருஷத்துக்கு வேண்டிய அளவு நெல் கிடைத்துவிடும். தீபாவளிக்குக் கோடித் துணி மணிகள் எடுத்துக் கொடுத்துத் தன் பண்ணை ஆட்களை உற்சாகமூட்டுவது என்பது அவன் பண்ணை எஜமானரின் பரம்பரையான வழக்கம். அதனால் அவனுக்குத் துணிமணிகள் எடுக்கும் கவலையும் கிடையாது. அறுப்பு, விதைப்பு இல்லாத நாளில் அவன் பல கூலி வேலைகள் செய்வான். அவன் மனைவியும் செய்வாள். அதனால் அன்றாட வருமானம், அன்றாடச் சில்லறைச் செலவுகளுக்குப் போதுமானதாகவே யிருந்தது. ஆனால் இன்று காளிமுத்து தன் கையால் மாதம் ஒரு முறை வாங்கும் ரூம் பத்தொன்பது ரூபாய் சம்பளத்தை வைத்துக் கொண்டுதான் அரிசி வாங்குவது, துணிகள் வாங்குவது உள்பட சகலச் செலவுகளையும் சமாளித்தாக வேண்டியிருந்தது. தான் ஒரு கௌரவமான வேலையில் இருக்கும் பொழுது மனைவியோ, தாயாரோ கூலி வேலை செய்வதும் முடியாது. இப்படிப்பட்ட பல இடைஞ்சல்களால் மாதம் ஒரு முறை கிடைக்கும் சம்பளத்தைக் கொண்டுதான் மாதம் முழுவதையும் கடத்த வேண்டியிருந்தது. இப்படி இருக்க அவன் எப்படிப் பட்டுச்சேலை எடுப்பான்!

பட்டுச்சேலை பற்றிய அந்தப் பகற்கனவைக் காளிமுத்துவும் அவன் மனைவி வள்ளியும் மறந்து கூட இருப்பார்கள். ஆனால் தங்கவேலு அவர்களை அப்படி மறக்க விடவில்லை. அவன் அவர்களைக் காணும் போதெல்லாம் பட்டுச்சேலை பற்றிய கேலிப்பட்டாசை வெடிக்காமல் இருப்பதில்லை.

வர வரப் பட்டுச் சேலை பற்றிய அவன் கேலிப் பேச்சுகளும், குத்தல் வார்த்தைகளும் அதிகரித்தன. தங்கவேலுவை உதறித் தள்ளித் தன்னை மணந்த வள்ளிக்கு அவள் ஆசைப்படும் பட்டுச் சேலையை எடுக்கத் தன்னால் முடியவில்லையே என்று எண்ணி எண்ணி ஏங்குவான். 'இதற்கு என்ன வழி செய்யலாம்!' என்ற சிந்தனையே அவனை ஓயாமல் அரித்து வந்தது. வரவர இச்சிந்தனையே அவனுக்குப் பெரும் தலைவேதனையாகவும் இருந்தது. இப்படி அவன் மனதிலே நிகழும் போராட்டங்களை அவன் முகத்திலே அவ்வப்பொழுது ஏற்படும் மாறுதல்களைக் கொண்டு நான் கண்டு பிடித்து விடுவேன். இப்படியே காலம் கடந்து கொண்டிருந்தது.

அவன் வேலை பார்க்கும் தாசில்தார் வீட்டிலே ஒரு விசேஷம் வந்தது. அன்று அவர்கள் சில பட்டுச் சேலைகள் எடுப்பதற்காகக் காளிமுத்துவைக் கடைக்கு அனுப்பிப் பல சேலைகள் எடுத்துவரச் சொன்னார்கள். அவன் எடுத்து வருவதும், அண்ணிமார்கள் அவைகளைப் பார்வையிட்டுப் பலவிதமான குற்றங்குறைகளைக் கண்டு பிடித்துத் திருப்பி அனுப்பி, மீண்டும் வேறு பல சேலைகள் எடுத்துவரச் சொல்லுவதுமாக இருக்கவே, காளிமுத்துவுக்கு அன்று அநேகமுறை பட்டுச்

சேலைகளைக் கையிலெடுத்துப் பார்க்கும் பாக்கியம் கிடைத்தது. இம்மாதிரி இதற்கு முன்பும் பலமுறை நடந்ததுண்டு. அப்பொழுதெல்லாம் காளிமுத்துவின் மனதிலே, 'இம்மாதிரி ஒரு சேலையைத் தான் எடுக்கக் கூடிய காலமும் வராதா?' என்று பெரும் ஆவல் எழும். ஆனால் இன்றோ அந்த ஆவல் எல்லை மீறி எழுந்ததுடன் தங்கவேலுவின் கேலிப் பேச்சுகளும் அவன் நினைவில் அடிக்கடி வந்து மோதி மனதை உருக்குலைத்தன.

'இதெல்லாம் இங்கே நின்றும் உனக்கு எப்படித் தெரியும்!' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா! அதுவும் நியாயந்தான். அவன் பின்னொரு சமயம் தன் மனைவி வள்ளியிடம் ஒன்று விடாமல் சொன்னான். அதை நானும் கேட்டேன். கதையின் கோவைக்காகவே இப்பொழுது அவைகளை முன்னால் சொல்லுகிறேன். அவ்வளவே — இவ்வாறு இடையில் சொல்லிக் கொண்ட மகிழமரம் மீண்டும் கதையை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தது.

''இதனாலெல்லாம் அவன் மனம் பெரிதும் குழப்பமடைந்து தவித்தது. கடைசியாகத் தான் எந்த நியாயமான வழியாலும் பட்டுச் சேலையொன்றை எடுக்கவே முடியாது என்ற எண்ணம் ஏற்பட்டபோது அவன் மனம் அவன் அனுமதியின்றியே அநியாயமான பல வழிகளையும் பற்றி யோசிக்க ஆரம்பித்தது. திடுக்கிட்ட காளிமுத்து மனதில் எழுந்த அந்தக் கெட்ட எண்ணங்களை அடக்கி அமுக்கிவிட்டு வேலைகளைக் கவனிக்கத் தொடங்கினான்.

சேலை பொறுக்கி எடுக்கப்பட்ட மறுதினம் தான் விசேஷத்துக்கு முக்கிய காரணமான தாசில்தாரின் மகள் வந்து சேர்ந்தாள். வந்தவள் தனக்கெனப் பொறுக்கி எடுக்கப் பட்ட சேலைகளைப் பார்த்தாள். எடுக்கப்பட்ட சேலைகளில் ஒன்றைப் போலவே தானும் ஒன்று வாங்கி வந்திருப்பதால், அச்சேலையை மட்டும் திருப்பிக் கொடுத்துவிடும்படி காளிமுத்துவிடம் கொடுத்தாள். 'சேலை விலை கூடக் கணக்கில் பதிவாகிவிட்டதம்மா' என்று தயங்கினான் காளிமுத்து. ''பதிவானால் என்ன! சேலை விலையைக் கணக்கில் வரவு வைத்துவிடச் சொல்'' என்று சொல்லிவிட்டாள் அப்பெண். காளிமுத்து கையில் புடவையுடன் கடையை நோக்கிக் கிளம்பினான்.

இம்மாதிரி புடவை திருப்பப் படுவது அவ்வீட்டில் சகஜந்தான். ஆனால் இன்று காளிமுத்து தன் கையிலுள்ள அந்தப் புடவையைத் திருப்பி விடுவார்கள் என்று கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை. காரணம், புடவை அவ்வளவு அழகாக இருந்தது!

காளிமுத்து கையிலுள்ள புடவையைத் திருப்பித் திருப்பிப் பலமுறை பார்த்தான். 'தன் ஆயுளில் அம்மாதிரிப் புடவை யொன்றை எடுக்க முடியுமா!' என்று எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டான். ஏனோ அன்று அவன் மனம் பல விபரீதமான யோசனைகளில் இறங்கியது! அவன் எஜமானனுக்குப் புடவைக் கடையில் 'பத்து வரவு' இருந்தது. அதிகம் கடன் ஏறிய பிறகே அவர் கடைக்குக் காளிமுத்துவின் மூலம் பணம் அனுப்புவார். இதுவரை அவர் கணக்கைப் பார்த்ததோ கேட்டதோ கிடையாது. ஆகையால் இந்தப் புடவையை 'வரவு' வைப்பதும் வைக்காததும் அவருக்கு எப்படித் தெரியும்! இந்த விபரீத யோசனைதான் அவன் மனதை ஆட்டி வைத்தது. முடிவில் அவன் அசாத்தியத் துணிவுடன் புடவையை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான்.

வள்ளியின் சந்தோஷத்திற்கு ஒரு எல்லையே யில்லை. 'உன்னால் முடிந்த பொழுது பத்து, ஐந்தாகப் பணம் கொடு' என்று சொல்லித் தன் எஜமான் அந்தப் பட்டுச் சேலையை எடுத்துக் கொடுத்ததாகப் புனைந்த கட்டுக் கதையைக் காளிமுத்து சொல்ல, வள்ளி அதை அப்படியே நம்பினாள். அந்தத் தங்கவேலுவும் தகதக வென்று மின்னும் பட்டுப் புடவையை வள்ளி அணிந்து நிற்பதைக் கண்டு அசந்து போனான். அந்தச் சேரிவாசிகளும், ''அடி! ஆத்தே!'' என்று அதிசயித்துக் கன்னத்தில் கை வைத்து நின்றனர்.

காளிமுத்துவும் களிப்படைந்தான். ஆயினும் அக்களிப்பிற்கு அடியில் அவன் மனதிலே கொதிப்பொன்று இருந்தது. அடிக்கடி அவன் மனம் திடுக்கிடும். இரவு தூக்கத்திலும் திடும் திடும் எனத் தூக்கிப் போட்டு எழுந்து உட்காருவான். செய்யத் தகாத காரியம்— அதுவும் படித்து விஷயத்தைப் புரிந்து கொண்டுள்ள தானே அத்தகைய காரியத்தைச் செய்ததானது அவன் உள்ளத்தைப் பெரிதும் அலட்டியது. பாவம், அவன் உள்ளுக்குள் குமுறினான்.

அந்தோ! விதியின் விளையாட்டை என்னவென்பது! என்றைக்குமே கணக்கு வழக்குகளைக் கேட்டறியாத அவன் எஜமானர், அன்று மிக விபரீதமாகக் கணக்கு வழக்குகளை ஆராய்ந்தார். அத்துடன் புடவைக் கடை பாக்கியையும் கணக்கின் விவரத்தையும் கேட்டுவர ஆளும் அனுப்பிவிட்டார்! கதிகலங்கிப் போன காளிமுத்துவுக்குச் செய்யும் வகையொன்றும் புலப்படவில்லை; செயலற்று உட்கார்ந்து விட்டான்.

பூரண கர்ப்பிணியான வள்ளி அன்று புதுப் புடவையை அணிந்து, கையில் பூக்கூடையுடன் பூசாரி வீட்டுக்குக் கிளம்பினாள். கிளம்பியவள் குடிசை வாசலை அடைந்ததுமே திடுக்கிட்டு நின்றுவிட்டாள்.

கைப்பிடியாகக் காளிமுத்துவைப் பிடித்துக் கொண்டு நின்ற போலீஸ்காரனும், அவனை அடுத்து நின்ற காளிமுத்துவின் எஜமானரும் பட்டுப் புடவையுடன் நிற்கும் வள்ளியை எரித்து விடுவது போலப் பார்த்தனர். திக்பிரமை யடைந்த வள்ளி திகைத்துப் போய் நின்றாள். பாவம் 'தளதள'வென்று மெருகு ஏறியிருந்த அவள் தளிர்மேனி 'கிடுகிடு'வென்று நடுங்கியது.

புதுப்புடவையுடன், பூரண கர்ப்பிணியாகத் தம்முன் நின்ற அந்த சேரிப் பெண்ணைப் பார்த்தபோது, காளிமுத்துவின் எஜமானருக்கு 'பச்சாத்தாபம்' என்னும் உடன் பிறந்த உணர்ச்சி சற்றே தலைதூக்கியது. 'பாவம்; நம் மகளைப்போலப் பூரண கர்ப்பிணி; போனால்

போகிறது என்று.........' என்ற சிந்தனை ஒரு விநாடி அவர் உள்ளத்தை நெகிழச் செய்தது. ஆம்; அது ஒரு விநாடிதான்! நான் அவர் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டே இருந்தேன். ஆஹா! என்ன ஆச்சரியம்! அந்த மனிதர் தம் அந்தஸ்தையும், ஆடம்பரத்தையும் ஒரு விநாடி மறந்து விட்டார்! பாவம்; அடுத்த விநாடி திடுக்கிட்ட அந்த ஆடம்பர மனிதர் தம் உள்ளத்தில் எழுந்த அந்த நல்ல உணர்ச்சியை அப்படியே அமுக்கி விட்டார். அதற்கடுத்த விநாடி அவர் முகம் கோபத்தால் சிவந்தது. அனல் பறக்கும் கண்களால் அந்தச் சேரிப் பெண்ணை எரிப்பது போலப் பார்த்தார். அவள் அணிந்துள்ள அந்தப் பட்டுப் புடவையே அவருக்கு சாட்சி கூறியது. "இந்தப் புடவையே தான்; என்ன துணிச்சல்!" என்று அதட்டினார்.

ஒரு விநாடியில் சேரி முழுவதும் அங்கே வந்து கூடிவிட்டது. காளிமுத்துவின் கை மட்டும் அந்தப் போலீஸ்காரன் கையில் சிக்காமல் இருந்திருந்தால் இந்த ஆற்று வெள்ளத்தில், மதகடிச் சுழலில் குதித்து உயிரை விட்டே இருப்பான். அப்படி அவமானத்தால் அவன் உடல் குன்றியது. அவன் அதிகம் தாமதியாமலே குற்றத்தை ஒப்புக்கொண்டதுடன், விஷயத்தையும் விவரமாகச் சொல்லித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான். வள்ளியும் எஜமானரின் காலில் விழுந்து மன்றாடிக் கேட்டாள். தன் கணவன் மன்னிக்கப்பட்டால் தன் ஆயுள் முழுவதும் அவருக்கு ஏவல் செய்வதாக வாக்களித்துக் கதறினாள். ஆயினும் அந்த மனிதரின் அறிவிலே, இரக்கம் என்பது அணுவளவுகூட எழவில்லை! அவர் அந்தஸ்தும், ஆடம்பரமும் முன் நின்று அந்த ஏழைப் பெண்ணின் மீது இரக்கம் கொள்வதைத் தடுத்து விட்டதுபோலும்!

வீணே வளர்த்துவானேன்! கையும் களவுமாகப் பிடிபட்ட காளிமுத்துவுக்குக் கைமேல் ஒரு வருஷச் சிறை தண்டனை கிடைத்தது.

காளிமுத்து சிறை சென்றபின் சில தினங்களில் வள்ளி ஒரு பெண் குழந்தைக்குத் தாயானாள். அக்குழந்தையை வைத்துக்கொண்டே அவள் பலவிதமான கூலி வேலைகளைச் செய்து, தன்னையும், தன் குழந்தை, கொழுந்தன், வயது சென்ற மாமியார் முதலானவர்களையும் கால் வயிற்றுக் கஞ்சிக்குக் குறைவின்றிக் காப்பாற்றி வந்தாள்.

சிறைத் தண்டனையைக் கழித்து விட்டுக் காளிமுத்து திரும்பி வந்தபோது வள்ளி அவனை அன்புமாறாமலே வரவேற்றாள். அதுதான் அவனுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

வெளி வந்தபின் வேலை விஷயமாகப் பல முயற்சிகளைச் செய்ய ஆரம்பித்தான். ஆனால் பாவம், எல்லாம் அவன் எண்ணத்துக்கு மாறாகவே நிகழ்ந்தது. சென்ற வருஷம் நடந்த சம்பவத்தை யாரும் மறந்து விடவில்லை. அதனால், அவன் வேலை கேட்டு ஏறிய வீடுகளில் அவனை அலக்ஷியமாகவும், துச்சமாகவும் பேசி அனுப்பி விட்டார்கள். அதனால் அவன் உடைந்த உள்ளத்துடன் உட்கார்ந்து விட்டான்.



கணவன் :—சல்லடை வேண்டியிருக்கும் போதெல்லாம் பக்கத்து வீட்டுக்குப்போய் வாங்கிக்கொண்டு வருகிறாயே! இன்றைக்கு நம் வீட்டுக்கு ஒரு சல்லடை வாங்கிக் கொண்டு வரட்டுமா?

மனைவி :—வேண்டாம், வேண்டாம்! அப்புறம் அதை இரவல் கொடுத்துத் திருப்பி வாங்கத்தான் நமக்குச் சரியாயிருக்கும்!

ஆனால், வள்ளி அவனை அப்படி உட்கார விடவில்லை. அவனுக்கு வேண்டிய பல ஆறுதல் மொழிகளைச் சொன்னதுடன் இனி அவன் சர்க்கார் உத்தியோகத்தை நாடிப் போக வேண்டாமென்றும், விறகு உடைப்பது போன்ற சில்லறை வேலைகளை மேற்கொண்டால் வேண்டிய வருமானம் கிடைக்குமென்றும் சொல்லி உற்சாக மூட்டினாள். அவள் தேறுதலால் உற்சாகம் கொண்ட காளிமுத்து தன் தம்பியையும் உடன் கூட்டிக்கொண்டு பல சில்லறைக் கூலி வேலைகளைச் செய்து கணிசமாகப் பிழைக்க—ஓரளவு வாழ்க்கையை நடத்த—ஆரம்பித்தான்.

நெற்றி வேர்வை நிலத்தில் விழ, வேலை செய்த களைப்புடன் வீடு திரும்பும் காளிமுத்துவைக் களிப்போடு வரவேற்கும் வள்ளி, அவன் களையாறச் சுடு தண்ணீரும், சுடு சோறும் தயாராக வைத்திருந்து கொடுப்பாள். அப்படி அவள் காட்டும் பரிவும், அவள் குழந்தையின் மழலை மொழியுமே அவன் உள்ளத்தில் விழுந்த பெரும் புண்ணை ஓரளவுக்கு ஆற்றத் தொடங்கியது. அப்படி இருந்தும் 'விதி' அவனைச் சும்மா இருக்க விடவில்லை!

அன்று வள்ளி பேச்சுவாக்கில் குழந்தைக்கு இரண்டு மாதங்களில் இரண்டு வயது பூர்த்தியாவதைச் சொல்லி விட்டாள். அவ்வளவு தான்! காளிமுத்து கடுமையான யோசனையில் ஆழ்ந்து விட்டான். அந்த யோசனையின் முடிவில் அவன் சொன்னான் :—"இன்று முதல் கையில் கிடைக்கும் காசில் ஒரு நாலு அணாவை நம் குழந்தைக்கு என்று உண்டிப் பெட்டியில் போட்டு வருவோம். அப்படி இரண்டு மாதங்களில் சேரும் பணத்தைக்கொண்டு, ஒரு பட்டுப் பாவாடையும், ஒரு ஜோடி வெள்ளிப் பாதசரமும் வாங்கி விடுவது என்று முடிவு செய்து விட்டேன்" என்றான். 'பட்டுப் பாவாடை' என்றதும் வள்ளிக்கு 'திக்'கென்றது.

காளிமுத்து சொன்னபடியே செய்தான். இரண்டு மாதங்களில் உண்டிப் பெட்டி

நிறைந்து விட்டது. களிப்போடும் கையில் பணத்தோடும் கடைக்குச் சென்ற காளிமுத்து பட்டுப் பாவாடையும், வெள்ளிப் பாதசரமும் வாங்கிக்கொண்டு திரும்பினான். பட்டுப் பாவாடையைப் பார்த்தபோது ஏனோ அவனுக்கு அந்தப் பழைய சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன. அதனால் சிறிது வேதனையும், ஒருவிதமான அச்சமும் ஏற்படவே அவன் தயங்கித் தயங்கி நடந்தான். அத்துடன் அச்சத்தோடு நாலா புறமும் பார்த்தபடி சென்றான். அப்படி அவன் சென்றதே விபரீதமாக முடிந்தது.

முன்னர் அவனைச் சிறையில் பார்த்துள்ள ஒரு போலீஸ்காரன் தற்செயலாகக் காளி முத்துவின் எதிரில் வரவே அவன் திடுக்கிட்டு நின்றான். அவன் தயக்கம், நடுக்கம், கையிலுள்ள பட்டுப் பாவாடை இவைகளைக் கண்ட போலீஸ்காரனுக்கும் சந்தேகம் தட்டியது. அவனைக் கைப் பிடியாகப் பிடித்துக் கொண்ட போலீஸ்காரன், அவனைக் கேள்விமேல் கேள்வியாகக் கேட்டு உலுக்கியபின், 'கடையில் வாங்கியதற்கு ரசீது எங்கே!' என்றான். சற்று தைரியமடைந்த காளிமுத்து மீண்டும் திடுக்கிட்டான். காரணம் அவன் கடைக்காரனிடம் ரசீது வாங்க மறந்தே விட்டான். ஆனால் அதைப் போலீஸ்காரன் நம்ப மறுத்து விட்டான். அதனால் அவனை சப் இன்ஸ்பெக்டர் முன் அழைத்துப் போய் நிறுத்தினான்.

விஷயத்தை விசாரித்த சப் இன்ஸ்பெக்டர் காளிமுத்துவைச் சிறிது நேரம் வெளியில் இருக்கும்படி கட்டளை இட்டார். அத்துடன் அவன் கையிலுள்ள பட்டுப் பாவாடையையும் வாங்கி மேஜைமேல் வைத்துக் கொண்டார்.

வெளியில் வந்த காளிமுத்து வெகு கொதிப்புடன் அங்கு நிற்காமலே வீட்டுக்கு வந்து விட்டான். வந்தவன் விஷயத்தை வள்ளியிடம் சொன்னான். பிறகு கோபத்தால் கொதிக்கும் உள்ளத்துடன் பலவாறு பிதற்றினான்- இல்லை; இல்லை. பிதற்றினான் என்று சொல்வது பெரும் தவறு. பாவம்; பலவிதமான ஏமாற்றங்களால் அவன் உள்ளம் வெடித்துச் சொல்லும் வார்த்தைகளை எப்படிப் பிதற்றல் என்று சொல்லுவது! "வள்ளி! இனி நான் திருடனாகவே ஆகப்போகிறேன்! சுற்றிச் சூழும் ஆடம்பரத்திலே மயங்கி, இரக்கம் என்ற உணர்ச்சியையே அமுக்கிவிட்டுப் பேயாட்டம் ஆடும் இந்த பகற் கொள்ளைக் காரர்களைக் கொள்ளையடித்தே பணத்தைக் குவிக்கப் போகிறேன், பார்!" என்று குதித்தான்; குமுறினான். ஆனால் வள்ளி மிக்கப் பொறுமையோடு அவனைத் தேற்றிக் கோபத்தை ஆற்றினாள். ஆயினும் அவன் கொதிப்பு முற்றிலும் அடங்காமலே அதோ உட்கார்ந்திருக்கிறான், பார்!" என்று சுட்டிக் காட்டியது மகிழமரம்.

பாவம்; முழங்காலைக் கைகளால் கட்டியபடி உட்கார்ந்திருந்தான் காளிமுத்து. அவன் உள்ளக் குமுறலை முகமே அறிவித்தது. மிக்க பச்சாத்தாபத்துடன் நான் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே ஒரு சம்பவம் நடந்தது!

சைக்கிளில் வேகமாக வந்த கான்ஸ்டேபிள் காளிமுத்துவின் வீட்டருகில் வந்தவுடன் இறங்கி, "இந்தாப்பா, உன் பட்டுப் பாவாடை! விஷயத்தைக் கடைக்குச் சென்று விசாரித்து வருவதற்குள் ஓடி வந்து விட்டாயே! இனிக் கடையில் எந்தச் சாமான் வாங்கினாலும் ரசீது வாங்கிக் கொள்!" என்று சொல்லிப் பாவாடையைக் கொடுத்துச் சென்றான்.

காளிமுத்துவுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. பெரும் வியப்புடன், "வள்ளி! காந்தி ராஜ்யம் வந்து விட்டது, வள்ளி!" என்று கத்தினான். "வள்ளி! அன்று என் எஜமானரும் விஷயத்தை விவரமாக அறிந்த பின் சற்று இரக்கம் காட்டியிருந்தாரானால், இன்று எவ்வளவு ஆனந்தமாகவும், நன்றி மறவாமலும் இருந்திருப்போம்!" என்றான்.

இப்படி ஆனந்தத்துடன் கூவிக் கொண்டு நிற்கும் தன் கணவன் காளிமுத்துவின் கையிலுள்ள பட்டுப் பாவாடையை வாங்கிப் பார்த்துப் பூரித்தாள் வள்ளி. அந்தக் கான்ஸ்டேபிளை மனதார, வாயார வாழ்த்தினாள். பாவாடையைத் தன் மகள் இடுப்பில் உடுத்திப் பாதசரத்தையும் பூட்டினாள். பரட்டையாக இருந்த மகளது தலையைச் சீவிச் சிங்காரித்தவள் ஓடோடியும் வந்து என்னை வெடுக்கென்று பறித்துத் தன் செல்வி தலையில் சூட்டினாள். பின்னர் அந்த ஆனந்தத் தம்பதிகள் தங்கள் செல்வக் குழந்தையை வாரியணைத்து மாறி மாறி உச்சி முகர்ந்து மகிழ்ந்தனர். அவர்கள் மகிழ்ச்சியிடையே சிக்குண்ட நானும், மகிழ்ச்சியுடன் அயர்ந்து உதிர்ந்தேன்.

என் முடிவைக்கண்ட மகிழமரம், கல கல வென்று சிரித்து தன் மலர்களைப் பொல பொல வென்று என் இதழ்கள் மீது உதிர்த்தது. அம்மகிழ மலர்கள் என் காதோடு, 'இதோ பார்! ஆடம்பரம், அகம்பாவம் என்ற அழுக்காறுகள் யாவும் உன்னைப்போல சீக்கிரமே உதிர்ந்து மறைந்து போகும். அதன்பின் தான் எங்களைப்போலக் கருத்தைக் கவரும் காந்தி சகாப்தம் நிலைத்து நின்று மகிழ்விக்கும்" என்று சொல்லியது. 'அது முக்காலும் உண்மை; உண்மை' என்று ஒப்புக் கொண்ட நான் என் இதழ்களையும் சுருட்டிக் கொண்டு மண்ணுக்குள் மறைந்தேன்.





# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 14. வியாதியே வராது!

சரீரத்திலுள்ள ஒரு சிறு அவயவம் கூடக் கடவுள் சிருஷ்டியில் வீணாய் அமையவில்லை. அந்த அவயவங்களைப் பாதுகாக்க உடலுக்கு வேண்டிய ஆகாரத்தை உண்டு சுத்தமாயும், ஆரோக்கியமாயும் வைத்திருக்க வேண்டியது ஒவ்வொரு மனிதனின் முக்கியமான கடமைகளில் ஒன்று ஆகும்.

"மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு"

என்பது வள்ளுவரின் திருவாக்கு.

சாதாரணமாய் ஒரு இயந்திரத்தை வாங்குகிறோம் என்று வைத்துக் கொள்வோம். அந்த யந்திரத்தின் ஒவ்வொரு சிறு பாகமும் அதற்கு மிக அவசியம். அந்த யந்திரத்தைத் தினமும் துடைத்து, எண்ணெய் விட்டு வரவேண்டும். எண்ணெய் விடுவதிலும் ஜாக்கிரதையாய் விட வேண்டும். குறைவாய் விட்டால் எண்ணெய் போதாமல் பாகங்கள் தேய்ந்து விடும். அதிகமாய் விட்டால் கீழே ஒழுகுவதல்லாமல், சிட்டங் கட்டிக் கொள்ளும். நாம் அதை ஜாக்கிரதையாய்ப் பாதுகாத்தால், பத்து வருஷம் வேலை செய்யக் கூடிய யந்திரத்தை, இன்னும் அதிக காலமும் வேலை வாங்கலாம். ஆனால் அதைத் தினமும் துடைத்து சுத்தம் செய்யாமலும், எண்ணெயைச் சரியாய் விடாமலும், வேலையை மட்டும் வாங்கினால், பத்து வருஷம் உழைக்கக்கூடிய யந்திரம் மிகச் சீக்கிரமாய்ப் பழுதடைந்து விடும்.

இன்றுள்ள வாழ்க்கை நிலைமையைச் சற்றுக் கவனித்தால் யந்திரத்தைச் சரியாய்ப் பாதுகாக்காமல் வேலை வாங்குவதைப்போல்தான் ஓடுகிறது என்பதுதெரிய வரும். சரீரத்தைப் பாதுகாப்பதெல்லாம் சோப்புப் போட்டுக் கழுவுதல், பவுடர், ஸ்னோ, சென்ட்டுகளால் சொகுசு உண்டாக்குதல், அலங்கார ஆடைகளால் சரீரத்தை மறைத்தல் என்று அர்த்தம் செய்து கொள்ளுகிறோம். நம் உள் அவயவங்கள் சுத்தம் இல்லாமல் நோயினால் வாட, வெளி உடலை மட்டும் சுத்தப்படுத்தினால் என்ன பயன்?

உள் அவயவங்களின் சுத்தத்தை ஒழுங்கான தேகப் பயிற்சிகளினாலும் நல்ல ஆகாரப் பழக்க வழக்கங்களினாலும்தான் ஏற்படுத்திக் கொள்ள முடியும். இம்மாதிரி நடந்து வந்தால் வேதத்தில் சொல்லிய படி நூறு ஆண்டு பூரணமாய் வாழலாம். இன்னும் மேற்கொண்டும் வாழலாம். சரீரத்திற்கு வேண்டிய போஷணை குறைந்தால், சரீரம் மெலிந்து வாட்டமடையும். அதிகப்பட்டால் அஜீரணம், வயிற்று வலிகள் உண்டாகும். சிலருக்கு கொழுப்புகள் அதிகமாகித் தேகம் பருத்து மிகவும் சிரமமாக இருக்கும்.

நாம் சாப்பிடும் ஆகாரத்திற்குத் தகுந்த மாதிரிதான் சரீரம் அமையும். சில அவயவங்கள் வந்த ஆகாரத்தை ஜீரணித்து, சத்தைக் கிரகித்து ரத்தத்துடன் சேர்க்கின்றன. சில அவயவங்கள் சரீரத்திற்கு வேண்டாத அசுத்தங்களையும், கழிவுப் பதார்த்தங்களையும் வெளியில் அனுப்புகின்றன. இவைகள் ஒழுங்காய் நடைபெறும் வரை சரீரத்திற்கு யாதொரு கஷ்டமும் உண்டாகாது.

மனித சமூக வாழ்க்கையில் எல்லோரும் ஒரே விதமாய் வாழ முடிவதில்லை. சிலர் உடல் உழைப்பால், அதாவது சரீரத்தைக் கஷ்டப்படுத்தி உழைத்து வாழ்க்கை நடத்த வேண்டியிருக்கிறது. சிலர் கால்களை மட்டும் அதிகம் உபயோகிக்க வேண்டியிருக்கும். இன்னும் சிலர் கைகளால் மட்டும் வேலைசெய்ய வேண்டியிருக்கும். சிலருக்குக் குரல் மட்டும் வேலை செய்யும். சிலருக்கு மூளை மட்டும் அதிக வேலை செய்ய வேண்டியதாய் இருக்கிறது. ஆகவே எல்லோரும் எல்லா அவயவங்களையும் உபயோகித்து வருவதில்லை.

இயற்கையின் கட்டளை, எல்லா அவயவங்களையும் சரிசமமாய் உபயோகப்படுத்த வேண்டுமென்பது. ஆனால் செயல் முறையில் முடிவதில்லை. உபயோகப்படுத்தப்படும் அவயவம் மட்டும் உறுதி அடைந்து



ஒருவர் (பக்கத்திலிருந்த தோட்டத்தில் சென்று தோட்டக்காரனிடம்):- அப்பா! அந்தக் கொடியிலுள்ள நீளமான புடலங்காயை என்ன விலைக்குத் தருகிறாய்?

தோட்டக்காரன்:—நாலணா கொடுங்கள், போதும்.

வந்தவர்—என்னப்பா! அதிக விலை கேட்கிறாயே?

தோட்டக்காரன்:—அப்படியானால் இந்தச் சின்னப் புடலங்காயைப் பறித்துத் தருகிறேன். ஓரணா கொடுங்கள், போதும்.

வந்தவர்:—சரி! இந்தா ஓரணா. அந்தக் காய் அப்படியே கொடியில் இருக்கட்டும். ஒருவாரம் கழித்து வந்து அதைப் பறித்து வாங்கிக் கொள்ளுகிறேன்.

மற்றவை சற்று உறுதியில் குறைந்து தான் இருக்கும். இக்குறையை நீக்கத் தான் நமது பெரியோர்கள் யோக ஆசனங்களை சமூகத்திற்கு வழங்கி யிருக்கிறார்கள். நாம் தினசரி வாழ்க்கையில் உபயோகப் படுத்தப்படாத அவயவங்களுக்கு, யோக ஆசனத்தின் மூலம் பயிற்சி அளித்து எப்பொழுதும் ஆரோக்யமாய் வைத்திருக்கலாம். சரீர உழைப்பாளிகள் முதல், மூளை உழைப்பாளிகள் வரை ஆசனம் பழகி ஆரோக்யமாய் இருக்கலாம்.

கஷ்டப்பட்டு சரீர உழைப்புச் செய்கிறவர்களும் ஆசனம் செய்ய வேண்டுமா? அவர்கள்தான் வியர்வை பெருகக் கஷ்டப் படுகிறார்களே என்றால், அவர்களாலும் உபயோகிக்காத சில அவயவங்கள் இருக்கின்றன. பல தசைகள் இருக்கின்றன. சதைக் கோளங்கள் இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் பயிற்சி கிட்டினால்தான் எப்பொழுதும் ஆரோக்கியமாய் இருக்க முடியும். யாரும் ஒரு சிறு அவயவத்தையும் அசட்டை செய்ய முடியாது.

நாள் முழுதும் வீட்டு வேலைகளைச் செய்யும் சகோதரிகளுக்கும் இது பொருந்தும். என்னதான் நாள் முழுதும் அவர்கள் வீட்டு வேலைகளையும், குழந்தைகளின் வேலைகளையும் செய்தாலும் எல்லா அவயவங்களுக்கும் போதிய பயிற்சி ஆகாது. வேலை செய்யாமல் இருப்பவர்களைவிட வீட்டு வேலை செய்யும் இவர்கள் அதிகமாய் நோய் கொள்ளாமல் இருக்க முடியுமே தவிர, நோயே வராமல் இருப்பதில்லை. சிலர் உடலுழைப்பு அதிகமாகிக் களைத்தும் போவதுண்டு. அப்படிக் களைப்பு ஏற்பட்டாலும், எப்பொழுதும் ஆரோக்கியமாக இருக்க வேண்டுமானால் ஆசனங்கள் செய்தால்தான் முடியும்.

நம்முடைய மூத்திரக்காய் கெட்டுப் போவதினாலும், பலவீனமடைவதினாலும், அது சரியாக வேலை செய்யாது. அப்படி நேர்ந்தால் என்னென்ன விதமான நோய்கள் வரும் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு, மருந்து விளம்பரங்களைப் பார்த்தால் தெரியும். சுமார் ஐம்பது வித நோய்களாவது வரும் என்று விளம்பரப் படுத்தி யிருப்பார்கள்.

ரத்தத்திலுள்ள வேண்டாத, அசுத்த நீர்களை வடிகட்டி அனுப்புவது மூத்திரக்காயின் வேலை. அதன் வேலையைச் சரியாகச் செய்ய முடியாமல் கெட்டுப் போனாலோ, பலவீனமடைந்து போனாலோ, அசுத்தங்களை வடிகட்டும் வேலை சரியாய் நடவாது. அசுத்தங்கள் நீக்கப்படாமல் இரத்தத்திலேயே இருந்து, மறுபடியும் அந்த இரத்தத்தையே இருதயம் சரீரத்திற்குப் பாய்ச்சினால் என்ன நேரிடும்? என்ன வேண்டுமானாலும் நேரிடலாம். இருதய பலவீனம் முதற்கொண்டு, பொறுக்க முடியாத இடுப்பு வலி, நரம்பு பலஹீனம், இருதயத் துடிப்பு, மயக்கம், தலை வலி என்று இப்படியே எல்லாவற்றிற்கும் மூல காரணம் ஆகிறது. சிலருக்குச் சிறுநீர் அடைப்பு உண்டாகி உயிருக்கே ஆபத்து ஏற்பட்டு விடும்.

இப்பொழுது மேல் நாட்டில் ஒரு அபூர்வமான ஆப்பரேஷன் நடத்தி அதில் ஆரம்ப வெற்றியும் கண்டிருக்கிறார்கள். கெட்டுப் போன மூத்திரக்காயை எடுத்து விட்டு, ஆரோக்யமான மூத்திரக்காயை வைத்துப் பொருத்தி ஆப்பரேஷன் நடத்தி ஒரு மாதுக்குப் புத்துயிர் அளித்திருக்கின்றனர். அது எப்படி வேலை செய்கிறது என்பதை, அந்த ஸ்திரீ எழுந்து நடமாடி, சில நாட்கள் சென்றால்தான் தெரியுமாம். இப்பொழுது படுக்கையில் இருந்தபடி பேசவும் மூச்சு விடவும் முடிகிறதாம்.

இம்மாதிரி ஆப்பரேஷன்கள் எல்லாம் மிருகங்களுக்குச் செய்து பார்த்து, அதில் வெற்றி கண்டு, பிறகுதான் மனிதனுக்குச்

செய்வார்கள். அதைப்போல இதையும் மிருகங்களிடையே வெற்றி கண்டு மனிதனுக்குச் செய்திருக்கிறார்கள். இது விஞ்ஞானத்தின் ஒரு வெற்றி என்றே சொல்லலாம். மிருகங்களுக்கானால் ஒரு மிருகத்தினுடைய மூத்திரக் காயை இன்னொரு மிருகத்துக்கு எடுத்துப் பொருத்துவது சாத்தியமாகலாம். மனிதனுக்கு மனிதன் மூத்திரக்காய் கிடைக்க வேண்டுமே! மனித வர்க்கத்தை அவ்வளவு அலட்சியமாய் அறுத்துத் தள்ளமுடியுமா? மூத்திரக்காய் நல்ல நிலைமையில் இருந்து, வேறு ஏதோ வியாதியினால் இறந்துவிடும் நிலைமையிலுள்ள ஒரு ஸ்திரீ, தான் இறந்துவிடுவதற்கு முன், மூத்திரக்காயை எடுத்து உபயோகித்துக் கொள்ளலாம் என்று சம்மதித்தாளாம். அவள் இறந்தவுடன் இரண்டொரு நிமிஷத்திற்குள், ரத்தம் உறைவதற்குள் அறுத்து எடுத்து பக்குவப் படுத்தி, உடனே மூத்திரக் காய் கெட்டுப் போன ஸ்திரீக்கு அந்த மூத்திரக் காயை எடுத்துவிட்டு புதிதாகப் பக்குவப் படுத்திய மூத்திரக் காயை வைத்துப் பொருத்தியிருக்கிறார்கள்.

இந்த முறை விஞ்ஞான ஆப்பரேஷன் முறையில் சிறந்த முறையாக இருக்கலாம். ஆனால் கடைமுறையில் சாத்தியமா? கெட்டுப் போன மூத்திரக்காய் உடையவனைச் சுகப்படுத்த வேண்டுமானால், ஒரு நல்ல மூத்திரக்காய் உடையவன் சாக வேண்டும். இது சாத்தியமல்ல. தவிர அதே வயதுடையவனின் மூத்திரக்காயாகவும் இருக்க வேண்டும். கிழவர்களுடையது பிரயோஜனப்படாது. இந்த வைத்தியத்தையும் மேல் நாட்டில் போய்ச் செய்து கொள்ள வேண்டும். நம் டாக்டர்கள் அந்தப் புது ஆப்பரேஷனைக் கற்றுக் கொள்ளவில்லை. அதுவும் பணக்காரர்களால்தான் முடியும். இதெல்லாவற்றை விட தைரியம் வேறு வேண்டும். இவைகளெல்லாம் அபூர்வமாய் அமையக் கூடியது.

ஆனால் பெரும்பான்மையான மக்களுக்கு எப்படிச் சுகமளிப்பது? மருந்தைச் சாப்பிட்டும், ஊசியை ஏற்றிக் கொண்டும் சித்திரவதைப் படுவதுதானா கதி?

இல்லை! அப்படிக் கஷ்டப்பட வேண்டிய அவசியமில்லை!! சற்று நம்பிக்கையுடனும், திட மனதுடனும் யோக ஆசனங்களைப் பயிலுங்கள். மூத்திரக் காய் சம்பந்தமான வியாதிகளே வராது. வந்தாலும் பஸ்சிமோத்தானாசனமே அதற்கு விமோசனம் அளிக்கக் கூடியது. (தொடரும்)





மிகவும் அபூர்வமான

PEPS



இருமல், ஜலதோஷம், குளிர் ஜுரம், இன்ப்ளூவென்ஸா ஆகியவற்றைக் கண்டிக்கிறது

பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும்போதே அதன் மருந்து சத்துக்கள் சுவாஸப் பைக்கும் மார்புக்கும் செல்கின்றன. பெப்ஸில் உள்ள அபூர்வ சத்துக்கள் வெகு விரைவில் அபாயகரமான கிருமிகளை அழித்து, தொண்டை கரகரப்பை அகற்றி, நமைச்சலைப் போக்கி, ஓயாத இருமலையும் நிறுத்தி விடுகிறது. சாப்பிட இனிமையானது.

PEPS மார்பு, சுவாஸப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத கிருமி நாசன மாத்திரைகள்



# தாபம் தீர்ந்தது

ரா. வெங்கடேசுவரன்

"மூல நக்ஷத்திரமா?—அப்படியானால் பெண் மூலம் நிர்மூலம் அல்லவா?" என்றார்கள் என்னைப் பார்க்க வந்தவர்கள். எனக்கும் மனதுக்குள்ளாகச் சந்தோஷம் தான். மூல நக்ஷத்திரத்தில் பிறக்கும்படியான சந்தர்ப்பத்தை அளித்த கடவுளை நான் மனமார வாழ்த்தினேன்.

என் தந்தைக்கு மட்டும் இதில் வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. "நம் பெண் கல்யாணமே ஆகாமல் கன்னியாகவே வாழ்நாளைக் கழிக்கும்படியாக நேர்ந்துவிடுமோ?" என்று அவர் பயந்திருக்கலாம். இவ்வளவுக்கும் என்னை வந்து பார்த்து, என்னுடைய நட்சத்திரத்திற்காக என்னை நிராகரித்தவர்கள் இரண்டு மூன்று பேருக்குமேல் இராது.

ஆனால் வீட்டில் எங்களுடன் இருந்த அத்தான் இதைக் கவனித்ததாகவே தெரியவில்லை. அவர் உண்டு, அவர் மாடி அறை உண்டு, அவர் நண்பர்கள் உண்டு என்றிருப்பார் அவர். கொஞ்சம் முன் கோபமும் உண்டு. அதை அவர் தாராளமாக உபயோகிப்பார். அவருடைய நடவடிக்கைகளிலும் சாபாவமே காணப்பட்டது. மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் அவர் குரூபியோ என்று கூடத் தோன்றும். இருந்தாலும் அவர் உள்ளத்திற்கு அன்பு செலுத்தும் ஆற்றல் உண்டு என்று தான் நான் எண்ணினேன். அவர் என்னைக் கோபித்திருக்கிறார். சில வேளை அடித்துக் கூட இருக்கிறார். ஆம், நான் வயது வந்தவன் என்பதைக் கூடப் பார்க்காமல் என்னைத் தொட்டு அடித்திருக்கிறார். இருந்தும் என்னை அறியாமல் ஒரு பாசம் அவரை என்னோடு பிணித்தது. அவருடைய வாழ்க்கையோடு என்னுடைய வாழ்வை இணைத்துக் கொள்ள வேண்டுமென்ற துடிப்பு அந்தப் பாசத்தில் இருந்ததை நான் உணரத்தான் செய்தேன்.

உள்ளம் சோர்ந்திருந்த என் தந்தையிடம் என் உள்ளத்தைத் திறந்து காட்டினால் அவர் நியாயத்திற்குக் கட்டுப்படாமலா போய் விடுவார் என்று எண்ணிக் கொண்டு தான் அன்று நான் அவரோடு வாதாடினேன்.

"சாவித்திரி, நீ நல்ல இடத்தில் வாழ்க்கைப் பட்டு நல்வாழ்வு வாழப் போகிறாய் என்று எண்ணியிருந்தேன். அதையெல்லாம் தகர்த்தெறிந்துவிட்டு என் எண்ணத்தில் மண்ணைப் போடுகிறாயே?" என்றார் அவர்.

"அப்பா, அத்தானுக்கு அப்படி என்னப்பா குறைச்சல்? அவர் என்னை நன்றாக வைத்துக் கொள்ளமாட்டார் என்று நீங்கள் நினைப்பதற்கு ஒரு ஆதாரமும் இருப்பதாகத் தெரியவில்லையே!" என்றேன் நான்.

"அதற்கல்ல, சாவித்திரி! அவன் பிறக்கும் பொழுதே அப்பா அம்மாவை விழுங்கியவன். அப்பா அம்மா அன்பிலே கொஞ்ச நாளாவது இளைக்காதவனுக்கு மனசிலே எப்படி அன்பு உண்டாகும்? அவனால் பிறர் மேல் அன்பு செலுத்தத் தான் முடியுமா? அநாதையாக வாழ்ந்தவனால்

உனக்கு என்ன இன்பத்தைக் கொடுத்து விடமுடியும்? இதையெல்லாம் யோசித்துப் பார்த்துத் தான் நான் காரியங்கள் செய்கிறேன். நீ அதைப் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாய்" என்றார்.

கூடத்தின் வெளியே நிழல் தட்டுப்பட்டது. அத்தானுடைய காலடிச் சத்தம் மாதிரி இருந்தது. அத்தானுடைய முன் கோபத்தை நான் நன்றாக அறிந்தவளாதலால், அந்த வேளையில் என் தந்தை ஏதாவது தாறுமாறாகச் சொல்லி, அவர் உள்ளே வந்து, ஏதாவது ரகளை நடந்துவிடப் போகிறதே என்று அந்தச் சம்பாஷணைக்கு அப்பொழுதே முற்றுப்புள்ளி வைத்தேன் நான்.

2

அத்தான் அப்பொழுது தான் பி. ஏ., தேறிவிட்டு வேலைகளுக்கு மனுப் போட்டுக் கொண்டிருந்தார். ஏதாவது ஒரு மனு பலிதமாகி அவர் வேலையை ஏற்றுக் கொள்ளச் சென்றாரானால் அவரை மணப்பது எளிது. அப்போது அவரை மணந்தால் அப்பாவின் இஷ்டத்தையும் பூர்த்தி செய்யலாம்.

நான் நினைத்தபடி சென்னையிலிருந்து நேரே வந்து பார்க்கச் சொல்லி அத்தானுடைய மனு ஒன்றுக்குப் பதில் வந்திருந்தது. அத்தானும் புறப்படத் தயாரானார். அப்பொழுது தான் எனக்குப் புரிந்தது அத்தானை மறப்பது அவ்வளவு எளிதல்ல என்று. "சாவித்திரி, உன்னை எத்தனையோ தடவை காரணமில்லாமல் கோபித்திருக்கிறேன். அதையெல்லாம் பொருட்படுத்தாதே. ஆனால் எனக்கு மட்டும் உன் உள்ளத்தில் ஒரு மூலையிலாவது கொஞ்சம் இடம் ஒதுக்கி வைத்திரு" என்று சொல்லிவிட்டு அவர் விடைபெற்றுக் கொண்டார்.

அவர் போய்விட்டார். அவர் என் உள்ளத்தில் ஒரு ஓரத்தில் அல்லவா தனக்கு இடம் கேட்டார்? ஆனால் என் உள்ளம் முழுவதையுமே ஆக்கிரமித்திருந்ததை அவர் உணரவில்லையா? வேறு சொல்லுவானேன்? என் உள்ளத்தை மீண்டும் திறந்து காட்டித் தந்தையை வேறு முயற்சிகள் ஒன்றும் செய்ய வேண்டாம் என்று வேண்டினேன்.

என் இஷ்டப்படியே அத்தானுக்கு என்னைக் கொடுப்பதென்று ஏற்பாடாயிற்று. அதோடு அம்மாவுக்கும் உடல்நிலை மிக்க மோசமாக இருந்ததால் கல்யாணத்தை அதிசீக்கிரமாக நடத்த வேண்டியதாயிற்று. விவாகம் இனிது நடந்து முடிந்தது. ஆனால் அத்தான் மட்டும் முன்னிருந்த மாதிரியே இருந்தார். அவருக்கு இந்தக் கல்யாணத்தில் அவ்வளவு மகிழ்ச்சி இல்லையோ என்று கூட நான் சிலவேளை நினைத்தேன். ஆனால், 'அவருடைய சுபாவமே அதுதானே?' என்றெண்ணி மனத்தைத் தேற்றிக் கொண்டேன்.

அவர் கொஞ்ச நாட்களே விடுமுறை எடுத்து வந்திருந்ததால் உடனே புறப்பட ஆயத்தமானார். அவரைத் தனியே சந்திக்க எனக்குச் சந்தர்ப்பமும் கிடைத்தது. அவர் முகத்தில் கடுகடுப்பு இன்னும் இருந்து கொண்டுதானிருந்தது.

"சாவித்திரி, இனி நான் உன் அத்தான் இல்லை" என்றார்.

"நானும் உங்கள் அம்மங்காள் இல்லை" என்றேன் சற்றுச் சிரிப்பை வருவித்துக் கொண்டு.

"விளையாட்டெல்லாம் அப்புறம் இருக்கட்டும். அதோ பார், உன் கழுத்தில் ஏறியிருக்கும் சரடு. அது உனக்கு ஞாபகப்படுத்தும், நான் இனி உன் அத்தான் இல்லை என்று. இனி நான் உன் கணவன் என்பதை நினைவில் வை."

"என் திடீரென்று கணவன் உரிமை கொண்டாட வந்து விட்டீர்கள்? நான்



முனியன் :—கோபம் வராமல் என்ன செய்யும்? அண்ணே! கொடுக்க வேண்டியதை உடனே கொடுக்காமல் சும்மா ஒரு மனுசனை அலைய வைக்கிறாங்க!

கேசவன் :—யார் அது உன்னிடம் அப்படிக் கடன் வாங்கிக் கொடுக்காமல் அலைய வைக்கிறது?

முனியன் :—அடே கடன் இல்லே. தீபாவளி இனாம் கொடுப்பதற்குத்தான் அப்படி அலைய வைக்கிறாங்க!

உங்கள் மனைவி என்ற முறையில் நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்களோ அதைச் செய்யச் சற்றும் பின் வாங்கமாட்டேன். என்னிடம் என்ன அப்படி எதிர்பார்க்கிறீர்கள்?"

"எதிர்பார்ப்பதா? உன்னிடம் என்ன இருக்கிறது நான் அப்படி எதிர்பார்ப்பதற்கு? உனக்குக் கட்டளை விடுகிறேன். இன்று முதல் உன் தந்தை முதலியோரை நீ மறந்து விடவேண்டியது."

"இதென்ன அதிசயமான கட்டளை! பெற்ற தந்தையை மறப்பதா?"

"அப்படியென்றால் எனக்குச் செய்த அவமானம் உனக்கில்லையா?"

"யார் என்ன அவமானம் செய்து விட்டார்கள் உங்களை?"

"நான் அநாதையாம். அந்த நண்பர்களிடம் சொல்லிச் சிரிக்கிறார் உன் தந்தை. நான் தாய் தந்தையற்றவன் என்பது உண்மை தான். அதற்காக உங்கப்பா சொந்தப் பணம் எதையும் எனக்குச் செலவு செய்து விடவில்லையே? சொத்தை மேற்பார்த்துக் கொண்டுதானே என்னைப் படிக்க வைத்தார்?"

"இதெல்லாம் இப்பொழுது எதற்காகக் கொண்டு வருகிறீர்கள்? அவர் ஒன்றும் வித்தியாசமாகச் சொல்லியிருக்க மாட்டார்."

"ஆமாம், என் மாப்பிள்ளையின் பெயர் சிவன்—பரமசிவன்—அந்த அநாதிப் பரமசிவனுக்கும் இவனுக்கும் என்னத்தான் குறை" என்று நண்பர்களிடம் சொல்லிச் சிரித்தாரே, அதைவிட வேறென்ன வேண்டும்? இதுபோதும் எனக்கு, உன்னைக் கல்யாணம் செய்து கொண்டதற்கு."

அத்துடன் எங்கள் சம்பாஷணை முடிவடைந்தது. அதிகமாக அவரிடம் பேச்சுக் கொடுத்து மனஸ்தாபத்தை உண்டாக்கிக் கொள்ள நான் விரும்பவில்லை.

## 3

ஊருக்குப் போன பிறகு அவர் எல்லாவற்றையும் மறந்து விடுவார் என்று எண்ணினேன். ஆனால் ஏமாந்தேன். அவர் எனக்கோ அப்பாவுக்கோ கடிதமே போடவில்லை. எனக்கு வாழ்க்கை நரகமாயிருந்தது. கல்யாணமான பிறகு எத்தனை நாள் பிறந்த வீட்டில் இருப்பது? இதில், "சாவித்திரிக்கு சாந்திமுகூர்த்தம் பண்ணி எப்பொழுது அனுப்பப் போகிறீர்கள்?" என்று வேறு வந்தவர்களும் போனவர்களும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். என் ஏக்கத்தை அம்மாவும் தெரிந்து கொண்டாள் என்றே தோன்றியது. ஆனால் அப்பா, "அந்த கர்வருவனுக்குப் பெண்டாட்டியைப் பற்றிக் கவலையில்லையோ?" என்று ஏகத்தாளமாகக் கேட்டாராம். அதற்கு மேல் பிரயாசை எடுப்பதைப் பற்றி அவர் உற்சாகம் காட்டாமற் போகவே என் தாய்க்கும் அலுத்துப் போய்விட்டது. "அது ஒரு முன் கோபி மாப்பிள்ளை; இது ஒரு முன்கோபி மாமனார்; இவர்கள் இரண்டு பேரும் சேர்ந்தால் உனக்குத் துன்பந்தான்" என்றாள் சலிப்புடன்.

சரி, நம் சொந்த சாமர்த்தியத்தையாவது உபயோகப்படுத்திப் பார்ப்போமே என்று நானும் கடிதம் போட்டுப் பார்த்தேன். அதற்கும் பதில் கிடைக்க வில்லை. அம்மாவின் நிலைமை மிக்க மோசமாயிற்று. ஏற்கெனவே துர்ப்பலமாக இருந்த சரீரத்தில் என் காரணமாக ஏற்பட்ட மனக்கவலை அவளைப் பலி கொண்டுவிட்டது. சம்பிரதாயத்தை உத்தேசித்து அதற்கு மட்டும் அவரிடமிருந்து துக்கம் கேட்கிற பாவனையில் அப்பாவுக்கு ஒரு கடிதம் வந்தது. என் மனம் இடிந்து விட்டது. என் நெஞ்சிலே தனக்கு இடங்கேட்ட மனிதருக்கு நெஞ்சே கிடையாதோ என்று கூட நான் எண்ண விட்டேன்.

தாயின் மறைவும் என் கிராதாரவன நிலையும் என் தந்தையின் மனோபாவத்தை மாற்றிவிட்டன போல் தோன்றியது. "அப்பா, எப்படியானாலும் போகிறது. நானே போகிறேன் அவரிடம். என்னைப் பெண்கள் வண்டியில் ஏற்றி விடுங்கள். நான் தனியாகப் போகிறேன்" என்றேன்.

"நீ போகிறாய். 'உன்னை யார் இங்கு வரச் சொன்னது' என்று அவன் திருப்பியடித்தானானால் என்ன செய்வாயம்மா? எதற்கும் நானும் வருகிறேன்" என்றார் அவர்.

"அப்பா, நீங்கள் வர வேண்டாமப்பா, உங்களைப் பார்த்தால் அவருக்குக் கோபம் இன்னும் அதிகமாகும். அப்புறம் என் வேலை கடினமாகிவிடும். ஆகவே நானே போய்க் கொள்ளுகிறேன். ரயிலடிக்கு வந்து அழைத்துப் போகும்படி மாத்திரம் அவருக்குக் கடிதம் போட்டு விடுங்கள், போதும்" என்றேன். அவரும் அவ்விதமே கடிதம் போட்டார். குறிப்பிட்ட ஒரு நாளில் நான் புறப்பட்டேன்.

ரயில் புறப்பட ஆரம்பித்த பிறகுதான் என் தனிமையை உணரலானேன். ஒரு வேளை அவர் ரயிலுக்கு வராவிட்டால்? சென்னையில் நான் தனியே இறங்கி, அவர்

இல்லத்திற்குப் போய்விட முடியுமா? "ஐயோ! அப்பாவை அழைத்து வந்தோ வில்லையே!" என்று ஒரு வேளை எண்ணுவேன். அவர் ரயிலடிக்கு வந்தால் அவரைப் பார்ப்பதற்கு எனக்குத் தைரியம் இருக்குமா? அவருடன் முதலில் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது? இதையெல்லாம் யோசிக்கையில் அவர் என்னை அழைத்துப் போக வராவிட்டாலே தேவலை என்று ஒருவேளை தோன்றும். ஆனால் இப்பொழுது அவருடைய இருப்பிடத்தை எப்படித் தேடிச் செல்வது முன் பின் தெரியாத ஊரில்? இப்படி மாறி மாறித் திகில் என் மனத்தை ஆட்கொண்டது. தாம்பரம் தாண்டி, ரயிலின் வேகம் அதிகமாக ஆக என் இதயமும் வேகமாக அடித்துக் கொண்டது. அடுத்த ஸ்டேஷன் எழும்பூர் என்றதும் என் உடலெல்லாம் வியர்த்து விறுவிறுத்து விட்டது.

எழும்பூரில் வண்டி வரும்போதே தலையை வெளியே நீட்டி அவர் வந்திருக்கிறாரோ என்று பார்த்தேன். ஆனால் கூட்டத்தில் என்னால் ஒன்றும் சரியாகப் பார்க்க முடியவில்லை. இதற்குள் போர்ட்டர்கள் இரண்டு மூன்று பேர் உள்ளே குதித்து என்னுடைய பெட்டி படுக்கைகளை ஆளுக்கொருவராகத் தூக்க முயன்றார்கள். நான் அவர்களில் ஒருவனை மட்டும் அமர்த்திச் சாமான்களையெல்லாம் சரி பார்த்து அவனை எடுக்கச் சொல்லும்பொழுது, "மகாராணியாருக்கு இப்பொழுதுதான் வழி தெரிந்தது போலிருக்கிறது!" என்ற குரல் கேட்டுத் தலை நிமிர்ந்தேன். ஆம், என் தந்தை போட்ட கடிதம் வீண் போகவில்லை. அவர் என்னை அழைத்துப் போக வந்திருந்தார்!

என் கணவர் (ஆம், அவரை இப்பொழுது அத்தான் என்று சொல்லி அழைக்க முடியுமா?) முகத்தில் அன்றிருந்த கடுமையே இன்னும் இருந்தது. வண்டி ஏறி வீட்டை அடையும் வரை அவர் ஒன்றும் பேசவில்லை.

எனக்கு இந்த மௌனம் கொல்லுகிற மாதிரி இருந்தது. சாமான்களை எல்லாம் இறக்கி உள்ளே வைத்த பிறகு, "என் உடம்பு இவ்வளவு இளைத்திருக்கிறது?" என்று பேச்சைத் துவக்கினேன்.

"இளைத்திருப்பதற்குக் காரணமா? அநாதைதானே, யார் இருக்கிறார்கள் கவனிப்பதற்கு? அதனால்தான்" என்றார் அவர்.

அன்று தொட்டு என் வாழ்க்கை கலகலப்பின்றியே சென்றது. 'மகாராணி' யென்று குறிப்பிட்டழைத்த அந்த நாளில் அவர் மனோபாவம் எப்படியிருந்ததோ, அது மாறவேயில்லை. "கார்டு, கவர் எல்லாம் இருக்கிறது. உன் அப்பாவுக்குக் கடிதம் போடும் உரிமையை ஒன்றும் நான் பறிக்க விரும்பவில்லை" என்றார் அவர். ஆனால் நான் அந்த உரிமையை உபயோகப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. அவர் கொடுத்த சலுகையில் உண்மை துடித்தாலல்லவோ அதை நான் ஏற்றுக்கொள்ளுவதற்கு? ஆகவே நான் சும்மாயிருந்து விட்டேன். ஆனால் அப்பா மட்டும் அவருக்கும் எனக்கும் கடிதங்கள் எழுதுவதை நிறுத்தவேயில்லை. சமீபத்தில் வந்த கடிதம் ஒன்றில் அவர், தான் அடிக்கடி நோயுறுவதாகவும், ஆனால் நான் புருஷனுடன் சேர்ந்து வாழ்வது அவருக்கு ஒரு வகையில் ஆறுதல் அளிப்பதாகவும் எழுதியிருந்தார். அதைப் படித்து முடித்தவுடன் இரண்டு கண்ணீர்த் துளிகளை அதில் சிந்தினேன். ஆனால் அப்பொழுதும் அவர் அளித்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்ள நான் முயலவில்லை. அவ்வளவு கடினமாக மனதை ஆக்கிக் கொண்டேன்.

## 4

ஒரு நாள் அவர் காரியாலயத்திலிருந்து திரும்பிவரும்போது அவர் முகத்தில் ஒளியே இல்லை. முகம் அவ்வளவு வாட்டமுற்றிருந்தது. வந்தவுடனே அசந்து உட்கார்ந்தார். கொடுத்த காப்பியை ஒரே மடக்கில் சாப்பிட்டுத் தீர்த்தார். தேகமெல்லாம் வேர்த்துக் கொட்டியது. நிலைமை தெரிந்து நான் படுக்கையைப் போட்டேன். அவரும் மௌனமாக அதில் படுத்துக் கொண்டார். டாக்டரின் சொற்படி இரவு கொஞ்சம்



மனைவி (கோபத்தோடு போகும் கணவனைப் பார்த்து):— காலைத் 'திடும் திடும்' என்று வைத்துக் கொண்டு போனால் மட்டும் போதுமா? கதவைப் படேர் என்று சாத்த மறந்து விட்டீர்களே!

ஜவ்வரிசிக் கஞ்சியைப் போட்டு அவருக்குக் கொடுத்தேன். அதையும் 'மடக் மடக்' என்று அவர் குடித்து விட்டார்.

அவர் நிச்சிந்தையாகத் தூங்கினார். ஆனால் எனக்குத் தூக்கம் வரவில்லை. அங்கு அப்பாவுக்கு உடம்பு சரியாக இல்லை. இங்கு புருஷனுக்கு உடம்பு நன்றாக இல்லை. மனதில் எப்படி நிம்மதியிருக்கும்? அன்றிரவு மூன்றாம் ஜாமம் வரை நான் தூங்கவில்லை. விடிய இரண்டு நாழிகை இருக்கும்போது தான் சற்றுக் கண்ணயர்ந்தேன்.

ஆழ்ந்த தூக்கத்திலிருந்து காலையில் நான் எழுந்திருக்க வேண்டியதாயிற்று. கதவை வேகமாக யாரோ தட்டும் சத்தம் கேட்டது. கதவைத் திறந்தபோது என் கண்களையே நம்ப முடியவில்லை. "அப்பா!" என்று உணர்ச்சி வேகத்தில் கத்திவிட்டேன். என் தந்தை அத்தான் படுத்திருந்த கட்டிலருகே சென்று "எப்படி இருக்கப்பா உடம்பு?" என்று கேட்டார்.

என் கணவர் சுருட்டி மடக்கிக் கொண்டு எழுந்தார்.

"எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை, மாமா! நீங்கள் வந்தீர்களே, அதுவே போதும். அது இருக்கட்டும் உங்கள் உடம்பை இப்படிக் கெடுத்துக் கொண்டு விட்டீர்களே? காரணம் என்ன?"

"உடம்பு கெடுவதும், உள்ளம் கெடுவதும் சூழ்நிலையையும் சந்தர்ப்பங்களையும் பொறுத்தது அப்பா! நாம் அதற்கென்ன செய்ய முடியும்?"

"என்னமோ, நானும் அப்படித் தான் எண்ண வேண்டியிருக்கிறது. சிறு பிள்ளையாகிய என் மீது மனஸ்தாபப்பட்டுக் கொள்ளாமல் வந்தீர்களே, அதுவே பெரிய காரியம்" என்றார் என் கணவர்.

எனக்கு இந்த மாறுதல் மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

"என் பெண் ஒவ்வொருத்தியும் பம்பாய், கல்கத்தா என்று வெகு தூரத்தில் இருக்கிறார்கள். நீ ஒருத்தன்தான் பக்கத்தில் இருக்கிறாய். அதுவும் அம்மாமி போன பிறகு நான் அநாதையாகத்தான் ஆகிவிட்டேன். அன்று உன்னை நான் விளையாட்டாகச் சொன்னது இன்று என் விஷயத்தில் வினையாகவே பலித்திருக்கிறது. நீ பால்ய காலத்திலே அநாதை; நான் அந்திய காலத்திலே அநாதை!"

"அதெல்லாம் இப்பொழுது நினைத்துப் பயன் என்ன? ஏழு வருஷத்துக்கு முந்திய கதை அது. ஆகவே நம் இருவருடைய நிராதரவான நிலையும் இன்றுடன் மறையட்டும். நீங்கள் எங்களுடனேயே இருந்து விட்டீர்களானால் நம் இரண்டு பேருக்கும் நிம்மதி" என்றார் என் கணவர்.

எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. முன்னிருந்த மனஸ்தாபங்களெல்லாம் அவரவர் கஷ்டங்களிலே பரஸ்பரம் மறைந்து விட்டனவா? இரண்டு பேரையும் அந்த ஆனந்த நிலையிலேயே விட்டு விட்டு வெளி வாசற்படியருகே வந்து நின்றேன்.

"உன் கடிதம் எனக்குச் சற்றுத் தாமதித்தே வந்தது. ஆனாலும் எனக்கு அது ஆச்சரியம் தரவில்லை. இந்த மாதிரி சந்தர்ப்பம் ஒரு நாள் ஏற்படும் என்று என் அனுபவ அறிவு சொல்லிக் கொண்டுதானிருந்தது" என்றார் அப்பா அவரிடம்.

உண்மை எனக்கு விளங்கியது. நான் என் நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு அப்பாவுக்குக் கடிதம் போடாமலிருந்தேன். ஆனால் அவர், கடிதம் போட்டு அப்பாவை வரவழைத்திருக்கிறார்! புருஷர்கள் சுபாவமே சற்று விசித்திரமானதுதான்!

## காந்திஜி விழா

சென்னை, சேத்துப்பட்டு தேசிய வாலிபர் சங்கத்தார் காந்தி மகாத்மாவின் எண்பத்திரண்டாவது ஜனன விழாவை வெகு விமரிசையாக 22-10-50 அன்று கொண்டாடினர். இரவு காந்தி மகாத்மாவின் உருவச் சிலை அழகாக அலங்கரிக்கப்பட்ட புஷ்ப ரதத்தில் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது.



# நக்ஷத்திர நடிகை

சோமாஸ்

**வா**ணி நடித்த படம் அப்போதுதான் வெள்ளித்திரைக்கு வந்திருந்தது. அடேயப்பா, இந்தப் பத்திரிகைக்காரர்களுக்குத்தான் என்ன உற்சாகம்! அவளை வானளாவப் புகழ்ந்து எழுதிக் குவித்து விட்டார்கள்.

அந்தப் பத்திரிகை விமரிசனங்களை யெல்லாம் உற்சாகத்தோடு படித்துக் கொண்டே வந்த வாணியின் மனக்கண் கொஞ்சம் பின்னுக்குப் போயிற்று. முதல் முதல் அவள் நாடகத்தில் நடிக்க ஆரம்பித்த தினங்கள் நினைவுப் பாதையில் ஊர்வலம் வந்தன.

* * *

**வா**ணிக்குத் தாயும் தந்தையுமா யிருந்து அவளை அருமையாக வளர்த்து வந்தவன் அவள் அண்ணு ராஜப்பாதான். சங்கீதத்திலும் நடனத்திலும் வாணி நல்ல தேர்ச்சியடைந்திருந்தாள். அவளைப் பார்த்தவர்கள் பூங்கொடிக்கு ஒப்பிட்டுப் பேசினர்கள்; அவள் பார்வையை மானின் மருண்ட பார்வையோடு ஒப்பிட்டார்கள்; அவளுடைய வேகம் விழிகளுக்குச் சக்தி அபரிமிதமாகத்தான் இருந்தது.

வாணி ஒரு சங்கீத வித்தியாலயத்தில் சேர்ந்து சங்கீதம் பயின்று வந்தாள். தினம் ஒரு மைல் தூரம் நடந்துதான் வித்தியாலயத்துக்குப் போகவேண்டும்; காலையில் எழுந்ததும் தன் அழகுக்கு அழகு செய்துகொண்டு வாணி புறப்பட்டு விடுவாள்.

அன்றைய தினம் வாணி வீட்டை விட்டுப் புறப்பட்ட சில நிமிஷங்களுக் கெல்லாம் ஒரு முறை திரும்பிப் பின்னுல் பார்த்தாள். ஏன் அப்படிப் பார்த்தாள் என்று அவளுக்கே தெரியாது. ஆனல் திரும்பிப் பார்த்த பின்பு, 'ஏன் அப்படிப் பார்த்தோம்' என்று ஆகிவிட்டது அவளுக்கு. ஆம், ஒரு அழகிய வாலிபன் சைக்கிளை மெதுவாக விட்டுக்கொண்டே வந்து கொண்டிருந்தான்.

சில நிமிஷங்கள் சென்றன. வாணி மீண்டும் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள். இன்னும் அந்த வாலிபன் வந்து கொண்டிருந்தான். 'தெருவில் போகிறவர்களைப் பற்றி நமக்கு என்ன! அவரை நாம் ஏன் பார்க்க வேண்டும்!' என்று நினைத்து வாணி பழையபடி நடந்தாள்.

வித்தியாலயத்துக்குள் நுழைந்ததும் அவளை யறியாமலே வாணி திரும்பிப் பார்த்தாள். அந்த வாலிபன் சைக்கிளிலிருந்து இறங்கிப் புன்முறுவலுடன் வாணியைப் பார்த்துக் கொண்டே அந்தக் கட்டடத்தின் மேல் மாடிக்குப் போய்விட்டான். மேல் மாடியில் ஆண்கள் வகுப்பும், வித்தியாலயத் தலைவரின் அறையும் இருந்தன. அவன் புதிதாகச் சேர்ந்த மாணவன் என்று வாணி தீர்மானித்தாள்.

வழக்கம்போல் வகுப்பு முடிந்ததும் வாணி வீட்டுக்குப் புறப்பட்டாள். கொஞ்ச தூரம் வந்ததும் திரும்பிப் பார்த்தாள். அந்த சைக்கிள் மெதுவாக வந்து கொண்டிருந்தது.

மறுநாள், அதற்கு மறுநாள், தினசரி—இந்த நாடகம், வாணி தெருவில் நடந்து போவதும், அவளுக்குப் பின்னுல் பத்துப் பதினைந்து அடி தூரத்தில் அந்த வாலிபன் சைக்கிளில் தொடருவதுமாக விடாமல் நடந்து வந்தது.

தன்னை ஒரு வாலிபன் கூர்மையாகக் கவனிக்கிருன் என்னும் எண்ணத்தினுல் வாணியின் நடை இப்படியும் அப்படியுமாகக் கோணி, அலாதி அழகுடன் விளங்கியது.

இப்படி ஒரு வாரம் சென்றது. அன்றைய தினம் வாணி திடமான ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். என்ன ஆனுலும் சரி, அந்தப் போக்கிரியை நேருக்கு நேர் கேட்டு விடுவது என்பதுதான் அந்தத் தீர்மானம்.

வாணி திரும்பிப் பார்த்தபோது அந்த வாலிபன் நடுங்கிப் போய் விட்டான். அவள் மிடுக்குடன் பார்த்த பார்வை அவனை நிலைகுலையச் செய்து விட்டது.

"ஏன் ஸார், நீங்கள் செய்கிற காரியம்...!"

"...கொஞ்சங்கூட நன்ருயில்லை. அப்படித் தானே!"

"ஒரு பெண்ணைத் தொடர்ந்து தினந்தோறும் போவது......"

"...மோசம் இல்லை தான்!"

"இது என்ன, நாடக மேடையில் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறீரா! என் பாதிப் பேச்சை நீர் முடிக்கிறீரே!"

இந்தக் கேள்வி 'வெடுக்'கென்று வாணியின் வாயிலிருந்து வந்து விட்டது.

"இது நாடகமேடையில்லை என்பது எனக்குத் தெரியும். நாடகமேடையில் உங்களை நடிக்கச் செய்யவேண்டும் என்னும் ஆசையினுல் உங்களைத் தொடர்ந்து கவனிக்க நேர்ந்தது. இந்த ஊரில் இப்பொழுது புதிதாக வந்திருக்கும் குகானந்த நாடக மண்டலியின் மானேஜர் நான் நானும் ஒரு..."

கொஞ்சம் நிறுத்தினுன வாலிபன்.

வாணி உடனே இடைமறித்து, "...நடிகர் தான். இல்லையா! உம்மிடம் நான் நடிக்க விரும்புவதாக..." என்றுள்.

வாலிபன் இடைமறித்து, "...சொல்லவில்லை தான். வாஸ்தவம். ஆனல் அகத்தின் அழகு..." என்ருன்.

"...முகத்தில் தெரிந்ததாக்கும். நீர் நடந்து கொள்ளுகிற மாதிரி கொஞ்சமும் நன்ருயில்லை. நாளைக்குள்ளதாக மரியாதை யளிப்பதைக் கற்றுக் கொள்ளும்' என்று சொல்லிவிட்டு வித்தியாலயக் கட்டடத்துக்குள் நுழைந்து விட்டாள் வாணி.

வாலிபன் புன்சிரிப்போடு மாடிக்குப் போய் விட்டான்.

அன்று மாலை வாணி வீட்டுக்குப் புறப்படுகிற சமயம் வித்தியாலயத் தலைவர் அவளை அழைப்பதாக ஒரு பையன் அவளிடம் வந்து சொன்னன். உடனே 'என்னமோ, ஏதோ' என்று வாணி மாடிக்குப் போனுள்.

''வா அம்மா, வாணி! உன்னைப் பற்றித் தான் இத்தனை நேரம் சொல்லிக் கொண்டிருந்தேன். உனக்கு இவரைத் தெரியுமாமே!'' என்று தலைமை உபாத்தியாயினி அந்த வம்புக்கார வாலிபனைச் சுட்டிக் காட்டினாள்.

அவனைப் பார்த்ததும் வாணிக்கு, 'இவனை யாருக்குத் தெரியும்!' என்று சொல்லத் தோன்றியது. ஆனால் சொல்ல முடியவில்லை. ஏதோ ஒன்று அவளைத் தடுத்து விட்டது.

'' இல்லை...நான்...இவரை...''

''...இதற்கு முன் இங்கே பார்த்திருக்கிறீர்கள். இல்லையா!'' என்று வாலிபன் குறும்புத்தனமாகச் சிரித்துக்கொண்டே நாடக பாணியில் வாக்கியத்தை முடித்தான்.

உடனே வித்தியாலயத் தலைவி ''சரிதான். ஏற்கெனவே அறிமுகம் ஆனவர்கள்தான் போலிருக்கிறது!'' என்றாள்.

'' இல்லை; இல்லவே இல்லை'' என்று ஆத்திரத்துடன் கத்தவேண்டும் போலிருந்தது, வாணிக்கு ஆனால் வார்த்தைதான் எழும்ப மறுத்து விட்டது.

''வாணி, நீ ரொம்ப நாட்களாக நாடகத்தில் நடிக்க வேண்டும் என்று சொல்லுவாயே! இப்பொழுது அதற்கு ஒரு அரிய சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. இவர் பெயர் நாகநாதன். மிகவும் கண்ணியமான முறையில் நாடகக் கம்பெனியை நடத்தி வருகிறார். உன்னை சைக்கிளில் தொடர்ந்த விவரங்களை யெல்லாம் சொன்னார்!'' என்று தலைமை உபாத்தியாயினி சொல்லிக் கொண்டிருக்கும்போதே வாலிபன்—நாகநாதன்—குறுக்கிட்டான்.

''வாணி, உங்கள் நடை, உடை, பாவனை எல்லாம் கவனித்தேன். ஒவ்வொன்றிலும் நாடகத் தன்மை பரிபூரணமாகப் பிரதிபலிக்கிறது. அதுவும் இன்று காலை வித்தியாலயத்துக்கு வரும்போது கோபத்தோடு ஒரு பார்வை பார்த்தீர்களே! ஆகா! அந்தப் பார்வைக்கு இணை எதுவுமே இல்லை. அந்த மாதிரிப் பார்வையைச் சொல்லித் தர நான் நடிகர், நடிகைகளிடம் எவ்வளவு தடவை சிரமப்படுவேன் தெரியுமா! மாதக் கணக்காக, வருஷக் கணக்காகப் பயில வேண்டிய கண்ணகியின் கோபப் பார்வையும் பேச்சும் உங்களுக்குப் பயிற்சி யில்லாமலே வருகிறது. நீங்கள் நாடக மேடையில் ஏற வேண்டியதுதான் பாக்கி. மற்றதெல்லாம் .....'' என்று வாலிபன் கொஞ்சம் நிறுத்தி மூச்சு விட்டான்.

''......என்னிடம் நிரம்பி யிருக்கிறதாக்கும்!'' என்று நாசுக்காகச் சொல்லிவிட்டு வாணி மீண்டும் தொடர்ந்தாள்: ''எனக்கு நாடகத்தில் நடிக்க மிகவும் ஆசைதான். ஆனால் என் அண்ணா ராஜப்பா அதைத் துளிகூட விரும்ப மாட்டான். ஆகையினால் நான் இதற்கு இணங்குவதற்கில்லை.''

வாணியின் முகத்தில் அப்போது அழுங் காண முடியாத சோகம் பிரதிபலித்தது, கண்களின் கடையில் நல் முத்துப்போல் நீர் துளிர்த்தது.

''உங்களிடம் நான் ஒரு விஷயத்தில் மன்னிப்புக் கோர வேண்டியவனாகிறேன். உங்களுக்கு என் மீது ரொம்பக் கோபமாயிருக்கும்!'' என்று வாணியைப் பார்த்துக் கொண்டே சொல்லிவிடுத் தொண்டையை ஒரு முறை கனைத்துக் கொண்டு மீண்டும் தொடர்ந்தான், நாகநாதன்:

''நான் சைக்கிளில் உங்களைத் தினம் தொடர்ந்து வந்தது மிகவும் அநாகரிகமான செய்கை என்றுதான் உங்களுக்குத் தோன்றும். ஆனால் உண்மையை நீங்கள் அறிந்தால் என் மீது கோபிக்க மாட்டீர்கள். ஒரு நல்ல நாடகத்தில் நடிக்க ஒரு இளம் கதாநாயகி வேண்டும் என்பதற்காக நான் தேசமெல்லாம் சுற்றி வந்தேன். நந்தவனத்திலும் நதிக்கரையிலும், குளத்தங்கரையிலும் கோவில் பிராகாரங்களிலும் பெண்கள் பள்ளிக்கூட வாசல்களிலும் தேடித் தேடி நான் அலுத்துப் போனேன். கடைசியில் உங்களை நான் இந்த வித்தியாலயத்தில் கண்டேன். உங்களைப் பற்றிக் கவனித்து நன்றாய்த் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக உங்களையே தொடர்ந்தேன். உங்கள் கோபம், மகிழ்ச்சி, சம்பாஷணை முதலியவற்றில் எல்லாம் பொங்கிப் பெருகிய நடிப்புக் கலையைக் கண்டேன்......!''

நாகநாதனின் உணர்ச்சி மிகுந்த இந்தப் பேச்சு வாணியின் உள்ளத்தை ரொம்பவும் மாற்றி விட்டது.

''என்னை மன்னிக்க வேண்டும். நான் உங்கள் மீது தவறான எண்ணங் கொண்டு கோபித்துக் கொண்டது வாஸ்தவம்தான். உங்களுடைய ஆராய்ச்சிப் பார்வை எனக்கு...''

''.........விபரீதப் பார்வையாகப் பட்டு விட்டது, இல்லையா? சரி, உங்களுக்கு எங்கள் கம்பெனியில் சேர்ந்து நடிக்க......''

''......விருப்பம்தான். ஆனால் என் அண்ணா......''

''......விரும்ப மாட்டார். இல்லையா! ஆனால் அதை நான் கவனித்துக் கொள்ளுகிறேன். சரிதானே!''

அதற்குள் வித்தியாலயத் தலைவி குறுக்கிட்டு, ''வாணி, நீ தைரியமாக வந்து



விட்டுப் போகலாம். இந்த வித்தியாலயத்தில்தான் புதிய பெண் நடிகர்களுக்கு நடிப்புச் சொல்லிக் கொடுக்கலாம் என்று தீர்மானித்திருக்கிறோம். நீ நடிப்புப் பயின்று மேடையில் தோன்றும் வரையில் நான் உன் அண்ணாவுக்குத் தெரியாமல் பார்த்துக் கொள்ளுகிறேன். நீயும் அண்ணாவிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபிக்க வேண்டாம். சங்கீதப் பயிற்சிக்கு வருவதாகவே இருக்கட்டும்!" என்று கூறியதைக் கேட்டதும் வாணிக்குச் சொல்ல முடியாத சந்தோஷம் ஏற்பட்டது. முகபாவத்திலேயே தன் அபிப்பிராயத்தை வெளிப்படுத்தி விட்டாள்.

மறு தினத்திலிருந்து நாடக ஒத்திகை ஆரம்பமாயிற்று.

நாள் ஆக ஆக, வாணியின் கூச்சம், கோழைத்தனம் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக அகன்று விட்டன. இப்போது இணையற்ற நடிகை என்று சொல்லும்படி முதல்தரமாயிருந்தது அவள் நடிப்பு.

ஒத்திகையின் போதும், மற்ற சமயங்களிலும் வாணியின் மனத்தை வாட்டிக் கொண்டிருந்த விஷயம் ஒன்று இருந்தது. பயிற்சி முடிந்ததும் மேடையில் தோன்ற வேண்டுமே! அதற்கு அண்ணாவின் சம்மதத்தைப் பெற்றுத்தானே ஆக வேண்டும்! ஒரு வேளை அண்ணா கண்டிப்பாகச் சம்மதம் தர மறுத்து விட்டால்......!

ஒரு சமயம் ராஜப்பா அவளிடம் சொன்னது அவளுடைய ஞாபகத்துக்கு வந்தது: "வாணி, நாடகத்தில் நடிப்ப தென்றாலே எனக்குப் பிடிக்கிறதில்லை. அதைப்போல் மோசமானது வேறு இல்லை என்று சொல்லுவேன். முகத்திலே பவுடரை அப்பிக் கொண்டு மேடையில் நடிப்பதாவது! நான் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போது தலைமை உபாத்தியாயர் பள்ளிக்கூட ஆண்டு விழாவுக்கு ஏற்படுத்தி யிருந்த நாடகத்தில் நடிக்கத்தான் வேண்டும் என்று வற்புறுத்தினர். 'ராஜப்பா, உனக்கு இருக்கும் ராஜகளைக்கு நீ மட்டும் நாடக மேடை ஏறினால் எப்படி யிருக்கும், தெரியுமா!' என்றனர். நான் வேறு வழியில்லாமல் நாடகத்தில் நடிக்க ஒப்புக்கொண்டு விட்டேன். ஆனால் 'பவுடர் பூச மாட்டேன், மேடை ஏற மாட்டேன்' என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டேன். ஹெட் மாஸ்டர் விடவில்லை. எனக்கு அசரீரி வேஷம் கொடுத்தார். அசரீரியாக இருந்தால் யார் கண்ணிலும் படாமல் பேச வேண்டியதுதானே! ஆகவே, ஒப்புக் கொண்டு திறமையாக நடித்தேன்! மேடையில் ராஜபார்ட் எடுத்துக் கொண்டு தோன்ற வேண்டும் என்று எத்தனையோ பேர் என்னை வற்புறுத்தினார்கள்......ஊஹூம், நான் சம்மதிக்கவில்லை......!"



பையன் :—நீ எனக்கு ஒரு அணா கொடுத்த மாதிரி இராத்திரி சொப்பனம் கண்டேன், அப்பா!

செட்டியார் :—சொப்பனத்தில் வேறு எங்கேயோ ஞாபகமாக உனக்கு ஓரணா கொடுத்திருக்கிறேன் என்று நினைக்கிறேன். அதைத் திருப்பிக் கொடுத்து விடு!

வாணிக்கு இப்போது அதை நினைத்தாலும் சிரிப்பு பீறிக்கொண்டு வந்தது. தான் மேடை ஏறி நடிப்பதற்கு முன்னால் அவனிடம் உத்தரவு பெற்று விட்டால் நல்லதாயிற்றே என்று வாணி நினைத்தாள். ஆனால் எப்படிச் சொல்லுவது என்றுதான் தெரியவில்லை.

வாணியின் தோழி காஞ்சனாதான் வாணிக்குத் தைரியம் சொல்லி வந்தாள். வித்தியாலய மாணவிகளுக்குள் அவள் ஏற்கெனவே நாடக மேடையில் பயிற்சி பெற்றவள்.

"உன் அண்ணாவைப் பற்றி நீ யோசனை செய்ய வேண்டாம். ஒத்திகை யெல்லாம் முடிந்து மேடை ஏற வேண்டிய சமயத்தில் நானும் உன்னோடு வந்து உன் அண்ணாவிடம் சொல்லுகிறேன். நீ நிம்மதியாயிரு!" என்று காஞ்சனா கூறும்போது வாணியினால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

கடைசியில் 'மேக்கப்'புடன் மேடையிலேயே ஒத்திகை செய்து பார்க்க வேண்டிய தருணம் வந்தது. கதாநாயகி வேஷத்தில் வாணி ரொம்பப் பிரமாதமாக முதல் காட்சியிலேயே நடித்தாள். இரண்டாவது காட்சியில் தோன்றியதும் வாணி உருக்கத்துடன் ஒரு பாட்டுப் பாடினாள். பிறகு, அடுத்த காட்சி; தன் அண்ணா ராஜகுமாரனிடம், தன் உயிர் போவதானாலும் தனக்கு விருப்பமில்லாதவனை மணக்கமாட்டேன் என்று வீறுடன் சொல்ல வேண்டிய கட்டம். அப்பொழுது வாணி வீராங்கனையைப் போலப் பேசினாள். சம்பாஷணை முடிந்ததோ இல்லையோ, 'வீல்' என்று ஒரு சத்தம் போட்டுக் கொண்டு கீழே சாய்ந்தாள், வாணி.

"சபாஷ்! பிரமாதம்! அப்படித்தான் ஜீவனோடும் பாவத்தோடும் நடிக்க வேண்டும். ஆகா! இது அல்லவோ நடிப்பு!" என்று உற்சாகத்தோடு கரகோஷ ஆரவாரம் செய்து கொண்டு டைரக்டர் நாகநாதன் அவள் அருகில் வந்தான். அப்போதுதான் வாணி நிஜமாகவே மூர்ச்சையாகி விட்டாள் என்பது அவனுக்குத் தெரியவந்தது. உடனே காஞ்சனாவும் வித்தியாலயத் தலைவியும் அவளுக்குச் சைத்தியோபசாரங்கள் செய்து மெதுவாகப் பிரக்ஞை வரச் செய்தனர்.

வாணி விழித்து எழுந்ததும், ராஜகுமார வேஷத்தில் இருந்த அண்ணா ராஜப்பாவைப் பார்த்து, "அண்ணா, நீயும் நாடகத்தில்... சேர்ந்து..." என்று மேலே பேச முடியாமல் தவித்தாள்.

"ஆமாம், நடிக்கிறேன். உனக்கு ஒரே ஆச்சரியமாய்த்தான் இருக்கும். எல்லாம் காஞ்சனாவின் வேலை. நம் இருவரையும் சந்-

திக்க வொட்டாமல் செய்ததும் அவன்தான். உனக்கு எல்லாவற்றையும் சொல்லியிருப்பதாக என்னிடம் சொன்னானே!'' என்று ராஜப்பா சொன்னதும் வாணியினால் பேசமுடியவில்லை.

உடனே மீதியுள்ள காட்சிகளெல்லாம் ஒத்திகை நடந்தது. பிரமாதமாக வாணி நடித்து விட்டான்.

வீட்டுக்குப் போனதும் வாணி முதல் வேலையாக, ''என் அண்ணா, நீ எப்படி இந்த நாடகத்தில் நடிக்க இசைந்தாய்?'' என்று கேட்டான்.

ராஜப்பாவுக்குச் சிரிப்பு வந்தது.

''அது ஒரு சுவாரஸ்யமான கதை. நாலைந்து மாதங்களுக்கு முன்னால் இந்த நாடகக் கம்பெனியார் மதுரையில் இரண்டு ஸ்பெஷல் நாடகங்கள் போட்டார்கள் அல்லவா! அப்போது நானும் மதுரைக்குப் போயிருந்தது உனக்குத் தெரியும். அங்கேதான் இந்த நாகநாதன் நட்புக் கிடைத்தது. என்னோடு கூடவே தொடர்ந்து வந்து என்னை நடிகர்கள் தங்கியிருந்த இடத்துக்கு அழைத்து வந்து, அன்று நாடகமும் பார்க்கும்படி செய்தார். எனக்கு நல்ல முகவெட்டு இருப்பதாகவும், நான் ராஜபார்ட் நடிகனாக முடியும் என்று வற்புறுத்திக் கூறினார். உனக்குத்தான் தெரியுமே, நாடகத்தைப் பற்றிய என் அபிப்பிராயம்! மிகவும் கடுமையாக மறுத்து விட்டேன். ஆனால் நாடகத்தைப் பார்த்ததும் என் அபிப்பிராயம் கொஞ்சம் சரிந்தது. நாகநாதனின் நடிப்பு என்னை இளக்கிவிட்டது!''

''உடனே சம்மதம் தெரிவித்து விட்டாயா, அண்ணா!'' என்று குறுக்கிட்டாள் வாணி.

''இல்லை, இல்லை. இன்னும் கேள். மறுநாள் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஊருக்குப் புறப்படத் தயார் செய்து கொண்டேன். ஸ்நான அறையில் ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வெளியே வந்து பார்த்தால் என் உடைகளைக் காணோம். பெட்டியிலிருந்து வேறு உடை எடுத்துக் கொள்ளலாம் என்றால் பெட்டியையும் காணோம். என் உடைகளுக்குப் பதிலாக அங்கே ஒரு ராஜபார்ட் நடிகரின் உடைதான் இருந்தது. வேறு வழியில்லாமல் அதை அணிந்து கொண்டேன். போதாக்குறைக்கு ஒரு கிரீடமும் இருந்தது. ஆத்திரத்துடன் அதையும் தலையில் வைத்துக் கொண்டு போய் நாகநாதனைத் தேடினேன்...'' என்று ராஜப்பா கொஞ்சம் நிறுத்தினான்.

வாணி, ''ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா! அண்ணா, இது என்ன கூத்து! உண்மையாகவே நடந்ததா!'' என்று சிரித்துக்கொண்டே கேட்டாள்.

ராஜப்பாவும் சிரித்துக் கொண்டே, ''உண்மை இல்லாமல் உன்னிடம் பொய்யா சொல்லுகிறேன்! நாகநாதனே அச் சமயம் என்னைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தார். 'என்ன மிஸ்டர் நாகநாதன், என்ன அக்கிரமம் இது? என் உடைகள் எங்கே! பெட்டியையும் காணோம். அதற்கெல்லாம் பதிலாக இந்தக் கூத்தாடி உடைகளை அங்கே வைத்திருக்கிறது......!'' என்று கோபாவேசத்துடன் கத்தி அவரை விறைக்கப் பார்த்தேன். அவர் மௌனமாக என்னைப் பக்கத்திலிருந்த நிலைக்



''போண்டா சாம்பார் கொண்டு வா, அம்பி!''

''போண்டா கொஞ்சம் நேரம் ஆகும், ஸார்! அதுவரையில் வேறு ஏதாவது பலகாரம் சாப்பிடுகிறீர்களா?''

''சரி, அப்படியானால் சாம்பாரைக் கொண்டு வா, முதலிலே!''

கண்ணாடிக்கு அருகே அழைத்துச் சென்றார். நான் கோபத்துடன் என் கைகளைத் திமிறிக் கண்ணாடியில் பார்த்தேன்!'' என்றான்.

''ராஜா மாதிரியே இருந்திருக்கும்! அப்புறம் என்ன நடந்தது?''

''ஆமாம்; அப்புறம் என்ன நடக்கும்! நாகநாதனின் வேண்டுகோளைத் தட்ட முடியாமல் நடிக்க ஒப்புக் கொண்டேன்!'' என்றான் ராஜப்பா.

இதுவரையில் மௌனமாக அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்த நாகநாதன் வாணியைப் பார்த்துப் பேச ஆரம்பித்தான்: ''ராஜபார்ட் வேஷத்துக்குச் சரியான ஆள் கிடைக்காமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்த எனக்கு ராஜப்பாவைப் பார்த்ததும் 'இவர் தான் அதற்குச் சரியான பேர் வழி' என்று தோன்றியது. நாடக உடையில் அவரைப் பார்க்க வேண்டுமே! அதற்கு அவர் சம்மதிக்க மாட்டார் என்று எனக்கு நன்றாய்த் தெரியும். அதற்காக அந்தச் சூழ்ச்சியைச் செய்தேன்!''

இதைக் கேட்டதும் வாணி சிரிக்காமல் என்ன செய்வான்!

* * *

நடந்து போன இந்தப் பழைய சம்பவம் மனக்கண் முன்பு தோன்றவே, வாணி மீண்டும் 'கலீர்' என்று வாய் விட்டுச் சிரித்தான்.

''என்ன புறப்படவில்லையா! புதிய படம் ஷூட்டிங் இன்று ஆரம்பமாகிறதே!'' என்று கேட்டுக் கொண்டே நாகநாதன் உள்ளே வந்தான்.

வாணி, ''இதோ நான் தயார்! அண்ணா புறப்பட்டு விட்டாரா!'' என்று கேட்டான்.

''அண்ணா உங்களுக்காகக் காரில் காத்துக் கொண்டிருக்கிறார்!'' என்று நாகநாதன் சொன்னதும் வாணி பரபரப்புடன் ஒரு முறை கண்ணாடியைப் பார்த்துச் சுருண்டு விழும் முன் நெற்றிக் கூந்தலைச் சரிப்படுத்திக் கொண்டு வாசலை நோக்கி அழகு நடை நடந்தான்.






# III

கோணல்

ஒரு சுபயோக சுப தினத்தில் மீனுவுக்கும் சுந்தரத்துக்கும் அதி விமரிசையாக விவாகம் நடந்தேறியது. மீனுவின் கல்யாணத்திற்காக அப்பு ஒன்றும் அதிகமாகச் செலவு செய்யவில்லை. மீனுவுக்கு இரண்டொரு தங்க நகைகளையும் சில தங்க மெருகு பூசிய நகைகளையும் ஸ்ரீதனமாகச் செய்து விட்டான். மற்ற கல்யாணச் செலவுகளையெல்லாம் சுந்தரந்தான் செலவு செய்தான். எப்படியோ அப்பு தன் தங்கை மீனுவுக்குத் தன் சொந்தப் பணத்தைச் செலவு செய்து கல்யாணம் செய்துவைத்ததாகத்தான் ஊரில் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டான். ஊரிலும் எல்லோரும் அப்படித்தான் நம்பினர். சங்கரனும் மீனுவின் கல்யாணத்தைக் கூட இருந்து நடத்தி வைத்தான். தன் சகோதரி பிரேமாவின் கல்யாணத்தில்கூட சங்கரன் அவ்வளவு சிரத்தை காட்டவில்லை. மீனு, தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லையே என்ற மனக் குறை அவனுக்கு இருந்தாலும், அவள் தான் காதலித்தவனைக் கல்யாணம் செய்து கொள்வதற்காக, தான் அவளைக் காதலித்ததைக் கைவிட்டதை உலகத்தில் எவரும் செய்ய முடியாத — செய்து காட்டாத மகத்தான தியாகமாக எண்ணிப் பூரிப்படைந்திருந்தான். பாவம், அவனுக்கு அந்தப் பூரிப்பை உண்டாக்கி விட்டவன் அப்பு. அப்பு கொஞ்ச நாளில் தன்னுடைய சுய சரித்திரத்தை எழுதிப் பெரிய புத்தகமாகப் பிரசுரிக்கப் போவதாகவும் அதில் முக்கால் வாசிப் பக்கங்களைச் சங்கரனைப் பற்றியே எழுதி நிரப்பப் போவதாகவும், சங்கரனின் சமதர்ம நோக்கம், உலகத்திற்காக அவன் உழைத்த உழைப்பு, அவனுக்கு மீனுவின் பேரில் ஏற்பட்ட கரைகாணாக் காதல் — கடைசியில் சங்கரன் மீனுவின் நன்மையை உத்தேசித்து அந்தக் காதலைத் தியாகம் செய்த உருக்கமான கட்டம், முதலியவைகளை உலகறிய ஒரு நாள் எழுதி விடப் போவதாகவும் சங்கரனிடம் சொன்னான். அந்தரங்கத்தில் இது சங்கரனின் மனதிற்கு இன்னும் பெருமையைக் கொடுத்தது. மகத்தான இருபத்தொன்பது அம்சங்கள் நிறைந்த நான்கு வருட திட்டத்தை வகுத்த அப்பு, மூன்று முறை உலகச் சுற்றுப் பிரயாணம் செய்த அப்பு, தன் சுய சரிதம் எழுதும்போது அதில் சங்கரனுக்கும் ஒரு முக்கியமான இடம் கிடைக்குமென்றால் சாதாரண விஷயமா? அதற்காகச் சங்கரன் இன்னும் பத்துப் பெண்களைக் காதலித்து அந்தக் காதலைத் தியாகம் செய்யலாமே? ஆனால் இனிமேல் அவன் காதலிப்பதற்கு அப்புவின் தங்கை மீனுவைப் போல் ஒரு பெண் கிடைப்பதுதான் கடினம். மீனுவுக்கு நிகர் மீனுதான். அவள் அழகு, அவள் பேச்சு, அவள் பாட்டு, அவள் புத்திசாலித்தனம் இவைகளெல்லாம் எந்தப் பெண்ணுக்கு வரும்? மீனு தனக்குக் கிடைக்காதது பெரிய துரதிருஷ்டம்தான் என்று நினைத்தான் சங்கரன். ஆனால் எதையும் தியாகம் செய்ய வேண்டிய சந்தர்ப்பத்தில் உலகத்தில் அவதரித்த பெரிய மகான்கள் யோசித்ததுண்டா? அந்த வழி

வைத்தான் சங்கரனும் கைக்கொண்டான். போகட்டும், எப்படியோ சுந்தரத்துக்கும் மீனுவுக்கும் கல்யாணமாகி விட்டது. மீனுவும் புக்ககம் புகுந்து குடித்தனம் நடத்த ஆரம்பித்து விட்டாள்.

அப்புவுக்குத் தன் தங்கையைக் கல்யாணம் செய்து கொடுத்ததில் ஒரு பெரிய பளு குறைந்ததுபோ லிருந்தது. இனிமேல் அவன் நிறைவேற்ற வேண்டிய இன்னொரு பெரிய காரியம் அவனுடைய நான்கு வருட திட்டம். அந்தத் திட்டத்தைப் பற்றி அவன் பேச்சளவோடு நிற்கவில்லை. ஏதேதோ எழுதி வேறு வைத்திருந்தான். ஒருவர் திட்டம் வகுக்கலாம். ஆனால் அந்தத் திட்டத்தை அவரே நிறைவேற்ற வேண்டும் என்று ஏதாவது நிர்ப்பந்தம் உண்டா? உலகத்தில் எவ்வளவு பேர் திட்டம் போடுகிறார்கள்? அதில் எவ்வளவு திட்டங்கள் எழுத்தளவிலும் பேச்சளவிலுமே நிற்கின்றன? எவ்வளவு திட்டங்கள் அடியோடு மறைந்திருக்கின்றன? எவ்வளவு திட்டங்கள் உருமாறி அரை குறையாக நிறைவேறி இருக்கின்றன? எவ்வளவு திட்டங்கள் முழுதும் நிறைவேறியும் எவ்விதப் பலனும் இல்லாமல் போயிருக்கின்றன? இப்படி யிருக்கும்போது அப்புவின் திட்டம் எப்படி யானாலும் அதைப் பற்றி அவனுக்குக் கவலை இல்லை. இந்தத் திட்டத்தைப் பற்றிச் சங்கரன் அசாத்தியக் கவலை வைத்திருக்கிறானே என்பதுதான் அப்புவின் கவலை. சங்கரனின் கவலைக்காக அப்பு தன் கையில் சேர்ந்த பணத்தை ஒருவாறாவும் நிறைவேற்ற முடியாத தன் நாலு வருட திட்டத்திற்காக விரயமாக்க இஷ்டப்படவில்லை. அவன் கையில் அப்பொழுது பதினேழாயிர ரூபாய் வரையில் இருந்தது. அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு ஏதேனும் லாபகரமான காரியங்களில் உபயோகித்து ஆயுள் உள்ளளவும் சௌகரியமாய் இருக்க ஒரு வழி செய்ய நினைத்தான். எந்த விதமான லாபகரமான தொழில் செய்வதற்கும் அந்த ஊர் லாயக்கானதாக அவனுக்குத் தோன்றவில்லை. தவிர, இனிமேல் அந்த ஊரில் இருப்பதும் அவனுக்கு உசிதமாகப் படவில்லை. இதற்கு முக்கியக் காரணங்கள் இரண்டு. ஒன்று, சங்கரனிடமிருந்து தான் பதினேழாயிரம் ரூபாய்க்கு மேல் பறித்துக் கொண்டதைப் பிறர் அறிந்து கொள்வதற்கு முன்னால் அந்த ஊரை விட்டுப் போய்விட வேண்டுமென்பது — இரண்டாவது, சங்கரன் வீட்டில் நடந்த கொள்ளை விஷயமாக ஏதாவது உண்மை வெளியாகிவிடுமோ என்ற பயம். இந்த இரண்டு காரணத்தையும் தவிர வடக்கே பம்பாய், கல்கத்தா எங்காவது போய்க் கையில் உள்ள பணத்தைக்கொண்டு நிம்மதியாக ஏதேனும் தொழில் செய்து பிழைக்கலாமல்லவா? இதற்கு மேல் அவனுக்கு யோசிப்பதற்கு என்ன இருக்கிறது? உடனே பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யத் தலைப்பட்டான்.

அன்று சங்கரன் ஏதோ துடித்துக் கொண்டே அப்புவைப் பார்க்க வந்தான். அப்பு அவனை முகமலர்ச்சியோடு வரவேற்றான். "என்ன சங்கரன், இவ்வளவு பதட்டத்தோடு வருகிறாய்?" என்றான்.

"ஒன்றுமில்லை. உன்னிடம் ஒரு ஐந்து ரூபாய் இருக்கிறதா? இருந்தால் கொடு. அந்தப் பிச்சைக்காரப் பயல்கிட்டே தலையைச் சுற்றி வீசி எறிகிறேன். இதற்குத்தான் சமதர்மம் உலகத்தில் ஏற்படணும்னு சொல்லுகிறேன்" என்றான் வந்த பதட்டம் தணியாமலேயே.



அப்பு அவனைச் சமாதானப் படுத்தி உட்கார வைத்து, "என்ன விஷயம்? ஏன் இவ்வளவு பதட்டம்? யார் அந்தப் பிச்சைக்காரப் பயல்? எதற்காக ஐந்து ரூபாய்?" என்றான் சாவதானமாக.

"தெருக்கோடியில் வெற்றிலைப் பாக்குக் கடை வைத்திருக்கிறான், பார்! அவனுக்கு நான் சிகரெட் வாங்கின பாக்கி ஐந்து ரூபாய் தரணும். நாளைக்குத் தருகிறேன் என்றேன்; வாயில் வந்தபடி திட்டுகிறான். என் கைக்கடிகாரத்தைப் பிடுங்கி வைத்துக் கொண்டு பணம் கொடுத்தால்தான் தருவேன் என்கிறான். அவனுக்குச் சமதர்மநோக்கம் தெரிந்தால் இப்படி நடப்பானா?" என்று குதித்தான் சங்கரன்.

"அப்பா! இவ்வளவுதானே விஷயம்? இதற்கு இப்படி ஏன்

பதட்டப்பட்டு உடம்பைக் கெடுத்துக்கறே? இதோ பார் சங்கர், உன்னுடைய சமதர்ம நோக்கம் பிடிபட இந்தச் சாதாரண வெற்றிலைப்பாக்குக் கடைக்காரர்களுக்கெல்லாம் குறைந்த பக்ஷம் மூன்று பிறவியாவது எடுத்து வந்தால்தான் தெரிந்து கொள்ள முடியும். அல்லது இன்னும் மூன்னூறு வருஷமாவது உயிரோடு வாழ அவர்களுக்குச் சக்தி இருக்க வேண்டும். போகட்டும். அவனுக்குக் கொடுக்கவேண்டிய ஐந்து ரூபாய் கடனைத் தீர்த்து உன்னுடைய கடிகாரத்தை மீட்க வேண்டும். அவ்வளவு தானே? நான் அவனிடம் பணத்தைக் கொடுத்து அந்தக் கடிகாரத்தை என் கையில் வாங்கி வைத்துக் கொள்ளுகிறேன், பயப்படாதே! நீ மாத்திரம் அவனிடம் இன்னாரிடம் கடிகாரத்தைக் கொடுத்து விடு என்று சொல்லிவிட்டுப் போய்விடு; போதும்!" என்றான் அப்பு.

"சரி, நீ கடிகாரத்தை வாங்கி வைத்துக் கொள். ஆனால் ஐந்து ரூபாய் கடனுக்காக இருபது ரூபாய் கடிகாரத்தைப் பிடுங்கி வைத்துக் கொள்வது சமதர்ம நோக்கத்திற்கு முற்றிலும் புறம்பானது என்பதை மூளையில் ஏறும்படியாக விளக்கிச் சொல்லி விடு; போதும்."

"அதை நான் சொல்லாமலிருப்பேனா? என் உன் கையில் இப்பொழுது ஐந்து ரூபாய்கூட அகப்படவில்லையா? என்ன உனக்குக்கூட அவ்வளவு பணக் கஷ்டம்?" என்றான் அப்பு.

"எனக்கொன்றும் இப்பொழுது பணக் கஷ்டமில்லை. ஆனால் இப்பொழுது கையில் பணமில்லை. அதுதான் கஷ்டம். என் வீட்டிலேயே இப்பொழுது கொஞ்சம் பண நெருக்கடிதான். எல்லாம் என் தகப்பனார் செய்த அசட்டுத் தனம். அந்தப் பழாய்ப் போன இரும்புப் பெட்டியில் இருக்கிற பணத்தை எல்லாம் பூட்டி வைத்திருந்தால் தானே எவனோ வந்து எல்லாவற்றையும் கொள்ளையடித்துக் கொண்டு போனான்? அது போகட்டும்; எவனாவது தன் கையில் பணமில்லாத தோஷத்திற்காகத் திருடியிருக்கலாம். ஆனால் மாப்பிள்ளையாக ஒருவன் வந்து பதினாயிரம் ரூபாய் வரதக்ஷிணையாகக் கொள்ளையடித்துக் கொண்டு போனான் பாரு—அதனாலேயே எங்கள் குடும்பம் இப்பொழுது பண நெருக்கடியால் தவிக்கிறது!" என்றான் சங்கரன்.

"இதற்கெல்லாம் நீ முன்னதாகவே புத்திசாலித்தனமாக ஒரு காரியம் செய்திருக்க வேண்டும், சங்கர்! உன் தகப்பனாருக்குத் தெரியாமல் அவருடைய இரும்புப் பெட்டிக்கு இன்னொரு சாவி வைத்திருக்க வேண்டும்" என்றான் அப்பு ஒன்றுமே அறியாதவன் போல் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு.

"இன்னொரு சாவி வைத்திருந்தால் மாத்திரம் என்ன? கை கொண்ட வரையில் தானே நாம் பணம் எடுக்க முடியும்?"

"இதுதான் உன்னிடம் உள்ள பயந்தாங்கொள்ளித் தனம். உங்கள் வீட்டில் திருட வந்தவன் கை கொண்ட வரையில்தானா பணத்தை எடுத்துக் கொண்டு போனான்? இருக்கிறதெல்லா வற்றையும்தானே சுருட்டிக் கொண்டு போய் விட்டான்? அவனுக்கு ஒன்றும் வைக்காமல் முன்னதாகவே நீ எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டிருந்தால் இப்பொழுது சிகரெட் வாங்கின பாக்கிக்காகப் பெட்டிக் கடைக்காரன் கடிகாரத்தைப் பிடுங்கி வைத்துக் கொள்ள மாட்டான், பாரு...!"

"ஆமாம், அது என்னுடைய முட்டாள் தனம்தான்!"

"அப்படி பளிச்சென்று ஒப்புக் கொள்... போகட்டும். நம்முடைய நாலு வருட திட்டம் .."

"ஆமாம், அதைப் பற்றித்தான் நான் கேட்கலாமென்று வந்தேன். அதற்குள் வழியில் அந்தப் பெட்டிக் கடைக்காரன்..."

"அந்தக் கடைக்காரனிடம் நான் பேசிக் கொள்கிறேன். நீ பயப்படாதே. முதலில் நம்முடைய திட்டத்தை நிறைவேற்றுவதற்காக நான் இன்னொரு தடவை உலகப் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இது மிக அவசரமான விஷயம். நான் நாளை தினமே கிளம்பப் போகிறேன்." என்றான் அப்பு.

இதைக் கேட்டதும் சங்கரன் திடுக்கிட்டான். "மறுபடியும் உலகப் பிரயாணம் செய்யப் போகிறாயா? ஏன்? முதன் முதலில் மலபாரில் ஒரு காடு வாங்கி அதை அழித்துப் பேப்பர் மில் வைப்பதாக அல்லவா தீர்மானித்திருந்தோம்?" என்றான்.

"ஆமாம், அப்படித்தான் தீர்மானித்திருந்தோம். நம்முடைய திட்டத்தில் முதல் அம்சமே அதுதானே? ஆனால் காலம் போகிற போக்கில் இப்பொழுது பேப்பர் மில் வைப்பது அவ்வளவு லாபம் அளிக்கும் அம்சமாகப் படவில்லை. நம்முடைய நாட்டில் ஏகப்பட்ட பேப்பர் மில்கள் ஏற்பட்டு விட்டன. இப்பொழுதெல்லாம் பேப்பருக்கு அவ்வளவு பஞ்சம் இருப்பதாகவும் தெரிய

வில்லை. ஆகையால் நம்முடைய முதல் அம்சத்தையே மாற்றிக் கொள்ள வேண்டும். இப்பொழுது நம்முடைய நாட்டில் அரிசிப் பஞ்சம்தான் தலை விரித்தாடுகிறது. சமீப காலத்தில் இந்தப் பஞ்சம் தீராது போலிருக்கிறது. இனிமேல் பருவ மழையை எதிர்பார்த்து, நிலத்தைப் பண்படுத்தி உழைத்து உணவுக்கு வேண்டிய அரிசியைத் தயாரிப்பதை விட யந்திரத்தின் மூலமாக அரிசி செய்யும் நவீன சாதனம் ஒன்றைச் செய்தால் என்ன என்பது என் உத்தேசம்......"!

"சரியான யோசனைதான்!" என்றான் சங்கரன் ஆர்வத்துடன்.

"இப்பொழுது பார்; எல்லாம் ஒரே பிளாஸ்டிக் மயமாய் இருக்கிறது. என் பிளாஸ்டிக்கிலும் அரிசி கண்டு பிடிக்கக் கூடாது?"

"சபாஷ், மிஸ்டர் அப்பு!—சபாஷ்!—சரியான யோசனை!" என்று குதித்தான் சங்கரன்.

"அதற்குத்தான் நான் அமெரிக்காவுக்குப் போய் 'பிளாஸ்டிக் அரிசி' எப்படிச் செய்கிறது என்பதையெல்லாம் தெரிந்து கொண்டு வர உத்தேசிக்கிறேன்."

"அதுதான் சரி! எப்பொழுது கிளம்பப் போகிறாய்? நானும் வேண்டுமானால் உன்னோடு வரட்டுமா?"

"நீயும் வந்தால் ரொம்ப நல்லதுதான். முதலில் பம்பாய் போகவேண்டும். அங்கிருந்து நேரே விமானத்தில் அமெரிக்காவுக்குப் போக வேண்டும். ஆனால் நீயும் வருவதாய் இருந்தால் கையில் ஒரு பதினாயிர ரூபாயாவது தயார் செய்து வைத்துக் கொள்" என்றான் சாவதானமாக அப்பு.

"பதினாயிர ரூபாயா!" என்று துள்ளிக் குதித்து, "அது இப்போ என்னால் முடியாதே!" என்றான் சங்கரன் பரிதாபமாக.

"முடியாதென்றால் நீ இங்கிருந்தே நம்முடைய நாலு வருட திட்டத்தைப் பற்றியும் பிளாஸ்டிக் அரிசியைப் பற்றியும் பிரசாரம் செய்து கொண்டிரு. அதற்கும் இங்கே ஒரு ஆள் வேண்டுமல்லவா? நான் மாத்திரம் அமெரிக்கா போய்விட்டுத் திரும்பி விடுகிறேன்" என்றான் அப்பு.

சங்கரன் சிறிது நேரம் யோசித்து விட்டு, "அதுவும் சரிதான். அதிருக்கட்டும், நீ போகிற தினம் உனக்கு வழியனுப்பு உபசாரம் ஆடம்பரமான முறையில் செய்யவேண்டாமா?" என்றான் சங்கரன்.



"என்ன, ஸ்வாமி! ஒரு மாதிரி 'டிராப்' பண்ணிக் கொண்டிருக்கிறீர்களே? ஏதாவது நாடகத்தில்—சினிமாவில் நடிக்கப் போகிறீர்களா?"
"இல்லை ஸார்! நான் புதிதாகக் கிருபளானி ஆரம்பித்திருக்கும் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்திருக்கிறேன்!"

---

"அது செய்ய வேண்டியதுதான். ஆனால் ரொம்ப ஆடம்பரமாக ஒன்றும் வேண்டாம். உன் கையில் உள்ள பண வசதியையும் பார்த்துக்கொள்."

"அதற்கென்ன, பார்த்துக் கொள்ளுகிறேன். ஆடம்பரமாக ஒன்றுமில்லை. ஒரு சின்ன டீ பார்ட்டி. ரோஜாப்பூ மாலை. பிரசங்கம். ஒரு குரூப் போட்டோ. இது போதாதா?"

"அப்பா! தாராளமாகப் போதும்!" என்றான் அப்பு.

"சரி, அதற்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் இப்பொழுதே கவனிக்க வேண்டும்" என்று சொல்லி விட்டுச் சங்கரன் போனான்.

சங்கரன் மறுநாள் தன் கையில் போட்டிருந்த மோதிரத்தை விற்று அப்புவின் வழியனுப்பு உபசாரத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். சங்கரனின் நண்பர்களான பல பிரமுகர்கள் விழாவில் கலந்து கொண்டு அதைச் சிறப்பித்தார்கள். அப்பு பிளாஸ்டிக் அரிசியைப் பற்றி ஒரு மணி நேரம் பேசினான். சங்கரன் பிளாஸ்டிக் அரிசியினால் எப்படி சமதர்மம் தழைத் தோங்கும் என்பதைப் பற்றி மூன்று மணி நேரம் பேசினான்.

அப்பு, சங்கரனின் கடிகாரத்தைப் பெட்டிக் கடைக்காரனிடமிருந்து ஐந்து ரூபாய்

கொடுத்து விட்டு, சங்கரனின் ஞாபகார்த்தமாகத் தன் கையில் போட்டுக் கொண்டான்.



அன்று இரவு அப்புவை வழி யனுப்புவதற்காக ரயில்வே ஸ்டேஷனுக்குச் சங்கரன் தன் அன்பர் குழாத்துடன் வந்திருந்தான்.

அப்பு பம்பாயில் போய் ஜீவனத்திற்கான ஒரு தொழிலைக் கண்டு பிடித்த பின் தன் தாயாரை அழைத்துக் கொள்வதாகச் சொல்லி அவளைத் தன் தங்கை வசமே விட்டுச் செல்ல ஏற்பாடு செய்தான்.

ரயில்வே ஸ்டேஷனில் அப்பு, சங்கரனுடனும் மற்ற நண்பர்களுடனும் அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தான். வண்டி புறப்படும் நேரமும் நெருங்கிக் கொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் முனுசாமியும் அவன் மனைவியும் ஓடோடியும் வந்து அங்கே நின்றனர். முனுசாமியைக் கண்டதும் அப்பு திடுக்கிட்டான். முனுசாமி பதட்டத்துடன், "சாமி! நீங்க இப்படி எங்கிட்டே கூடச் சொல்லாமல் ஊருக்குக் கிளம்பலாமா?" என்றான். "அடடா! என்னுடைய பிரயாண அவசரத்தில் உன்னை மறந்தே போய் விட்டேன்!" என்றான் அப்பு.

"நீங்க என்னை மறந்து விடலாம். ஆனால் இந்த ஏழையாலே உங்களை மறந்துவிட முடியுமா? இந்த உலகத்திலே எப்படி எப்படி யெல்லாம் நடந்துகிட்டா கிரமப்படாமே பிழைக்கலாம் என்பதைக் கற்றுக் கொடுத்த குருநாதர் நீங்க! போகட்டும், இந்த ஏழையாலே முடிந்தது இவ்வளவுதான்!" என்று சொல்லி அப்பு கையில் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தான்.

அப்பு அதை வாங்கிக் கொண்டு, "இது என்ன?" என்றான்.

"ஒன்றுமில்லே. அது இடியாப்பம்—என் சம்சாரம் செய்து கொடுத்தா. எங்க பலகாரக் கடையிலேயே இடியாப்பம் ஒரு ஸ்பெஷலுங்க. வழியிலே வயிறு பசி எடுத்தா சௌகரியமா யிருக்கும்" என்றான்.

வண்டியும் புறப்படுவதற்காக ஊதியது. சங்கரன் தன் கையில் வைத்திருந்த ரோஜாப்பூ ஹாரத்தை அவன் கழுத்தில் போட்டான். மற்ற நண்பர்கள் "மிஸ்டர் அப்புவுக்கு ஜே!" என்று கோஷமிட்டனர். வண்டியும் நகர்ந்தது. (முற்றிற்று)



ஸ்டேஷன் மாஸ்டர்:—யாரப்பா அது? மிருகங்களின் வண்டியிலே ஏறி உட்கார்ந்திருக்கிறுயே, ஏன்?

பிரயாணி:—மனுஷர்கள் வண்டியிலே மிருகங்கள் மாதிரி அடைந்திருப்பதைவிடச் சௌகரியமாக இதிலே போகலாம் என்று ஏறி யிருக்கிறேன்!

# காதலின் கதை

பி. அநுமந்த ராவ்

அவள் விளக்கை ஏற்றுவதற்கும், நான் ஆபீஸிலிருந்து வந்து உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. இரவு ஒன்பது மணிக்கு மேல் புறப்படும் ரயிலுக்கு அவள் அதற்குள்ளாகவே மூட்டை முடிச்சுகளைக் கட்டித் தயாராக வைத்து விட்டாள். நான் வந்ததும் வராததுமாக, "லீவு கிடைத்ததோ இல்லையோ!" என்ற முதல் கேள்வியைக் கேட்டுக்கொண்டே காப்பி எடுத்து வர உள்ளே சென்றாள்.

"என்ன, நான் கேட்டவள் மறுமொழி இல்லையா!"

இது அவளுடைய இரண்டாம் கேள்வி.

"கிடைத்தது; ரொம்ப மன்றாடிக் கேட்டேன்" என்று நான் சொன்ன பின்பே, காப்பியின் ருசியை அனுபவிக்க முடிந்தது.

"சரி; தூங்கி வழிந்து கொண்டிருக்க வேண்டாம். எனக்குத் தேவையான துணி மணிகளை யெல்லாம் நான் எடுத்து வைத்து விட்டேன்; உங்களுக்கு என்ன வேண்டுமோ அவற்றையும் எடுத்துக் கொடுத்தால்......"

"எனக்கு என்ன வேண்டுமென்பது உனக்கே தெரியும். ஒரு பட்டு, இரண்டு அங்கவஸ்திரம், இரண்டு வேஷ்டி, சொக்காயில் மூன்று" என்று சொல்லி முடிப்பதற்குள் அவற்றை எடுத்துத் தன் பெட்டியில் அடைத்து விட்டாள். அவசர அவசரமாகச் சாப்பிட்டபின் வீட்டைப் பூட்டிக் கொண்டு இரவு எட்டு மணிக்குள்ளாகவே புறப்பட்டு எழும்பூர் ஸ்டேஷனுக்குப் போய் விட்டோம்.

என் மனைவி சுமாராகப் படித்தவள். தமிழ் எழுதப் படிக்க நன்றாகத் தெரியும். இங்கிலீஷில் முதல் இரண்டு ஏ. பி. ஸி. டி களையும் சீக்கிரம் எழுதி விடுவாள். தவிர, ஸி. ஏ. டி. 'கேட்'; ஆர். ஏ. டி. 'ரேட்' இதெல்லாம் கூடத் தெரியும்.

ஒரு சமயம் பாரதியார் மண்டபத்தின் திறப்பு விழாவிற்காக எட்டயாபுரத்திற்குத் தனி ரயில் ஒன்று புறப்பட்டதல்லவா! அதிலே பிரயாணம் செய்த பிரமுகர்களில் நானும் ஒருவன். காலேஜில் எனக்குப் பெயர் பி. ஹரன்; என் தாயார் கூப்பிடுவது பிரணதி; எனக்கு நாமகரணம் செய்தபோது வழங்கப் பட்ட திருநாமம் பிரணதார்த்தி ஹரன்.

எட்டயாபுரத்திலேதான் எனக்கு எதிர்பாராத விதமாய் இந்தக் கால் கட்டு ஏற்பட்டது. கூட்டத்திலிருந்த ஒரு கிழவர் என்னையே உற்று உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். நானும் பதிலுக்குப் பார்த்தேன். "உங்களை எங்கேயோ பார்த்தமாதிரி இருக்கிறதே!" என்று தொடங்கி, மெல்ல மோப்பம் பிடித்து நான் பிரம்மசாரிதான் என்பதைத் தெரிந்து கொண்டு விட்டார். அன்று சாப்பாட்டிற்கு நான் தமது வீட்டிற்கே வரவேண்டுமென்றும் மிகவும் கேட்டுக் கொண்டார். ஏதோ பெரியவர் அன்புடன் அழைக்கிறாரே என்று நானும் ஒப்புக்கொண்டு விட்டேன். அப்போது இந்தமாதிரி ரேஷன் கெடுபிடி இல்லாததனால்!

ஏதோ பரஸ்பரம் உண்டான அன்பினாலேயே அவர் என்னைத் தம் வீட்டிற்கு அழைக்கிறார் என்று நான் முதலில் நினைத்தேன். ஆனால், சுயநலத்தைக் கருதியேதான் கிழவர் என்பேரில் வலை வீசினார் என்பது நான் அங்கு போன பிறகுதான் எனக்குத் தெரிந்தது.

நான் போனவுடனே என்னை ஒரு நாற்காலியில் உட்காரவைத்து, "அம்மா, அம்புஜா! வந்து இவரை நமஸ்காரம் பண்ணு!" என்றார் கிழவர். உடனே உள்ளேயிருந்து நிலவைப் பூசிய தந்தப் பதுமை போன்ற இளம் பெண் ஒருத்தி பூமி அதிராமல் மெல்ல நடந்து வந்தாள். அவள் அணிந்திருந்த ஆடையாபரணங்கள் கிராமியப் பண்பை எடுத்துக் காட்டின. குனிந்த தலை நிமிராமல் வந்தாளாயினும் தன் கூரிய பார்வையால் என்னை ஒரே நொடியில் நன்றாகப் பார்த்து விட்டாள் அவள். நானோ, சாப்பிட வந்த இடத்தில் ஒரு பெண் எதற்காக வந்து என்னை நமஸ்காரம் செய்ய வேண்டும் என்னும் ஆராய்ச்சியில் மனத்தைச் செலவிட்ட வண்ணம் கபடமற்ற கண்களால் அந்தப் பெண்ணை ஏற இறங்கப் பார்த்தேன்.

"இவள் என்னுடைய ஒரே பெண்; பெயர் அலமேலு" என்றார் கிழவர்.

"அப்படியா!" என்றேன் நான் அப்போதுதான் தூக்கக் கலக்கத்திலிருந்து விழித்துக் கொண்டவனைப்போல.

"நீர் இந்த ஊருக்கு வரப் போகிறீர் என்பது எனக்கு முன்னமே தெரியும். ஒருகால் உம்முடன் உம்முடைய தமையனும் வரலாம் என்பதையும் அறிந்திருந்தேன். நான் உமது தந்தையின் பாலிய நண்பன். உமது பிதாவும், நானும் சிறு பிராயத்தில் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் இங்கே விளையாடியவர்கள். கொஞ்ச நாள் கழித்து ஏதோ மனஸ்தாபத்தினால் உன் தந்தை பட்டணம் போய்ச் சேர்ந்து விட்டார்."

"தங்கள் பெயர்!"

"கோயில் மணி அய்யர் என்பார்கள். இந்த ஊரிலுள்ள அரசமரத்துப் பிள்ளையார் கோயிலை எங்கள் முன்னோர்கள்தாம் கட்டினார்கள். அதனால் கோயில் என்பது எங்கள் குடும்பத்திற்கு ஏற்பட்ட சிறப்புப் பெயர் ஆகிவிட்டது."

"ஓ, நீங்கள்தானா அவர்! என் தந்தையார் சொல்லக் கேட்டிருக்கிறேன்."

"கேட்டதோடு மட்டுமல்ல; உன் தந்தை ஒரு கடிதம்கூட எழுதியிருக்கிறார், நீர் இங்கே வரப்போவதைப் பற்றி. அம்மா, அம்புஜா! அந்தக் கடுதாசியை இப்படிக் கொண்டு வந்து கொடு!"

மறு விநாடியே அந்த அழகுக் கொடி அன்ன நடை நடந்து வந்து ஒரு கடிதத்தைக் கிழவ



னிடம் கொடுத்தான். அவர் அதை என்னிடம் தந்தார்.

ஆம்; என் தங்கையின் கையெழுத்தேதான். உறையிலிருந்து கடிதத்தை எடுத்து வாசித்துப் பார்த்தேன். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது:

"அன்புள்ள மணியனுக்கு,

உன் கடிதம் கிடைத்தது. எனக்கு இரண்டு பிள்ளைகள். மூத்தவனுக்கு விவாகம் ஆகிவிட்டது. இளையவன் பெயர் பிரணதார்த்திஹரன். வயது 25. கலியாணம் முடிக்க இன்னும் வேளை வரவில்லை. காரணம் அவன் கலியாணமே வேண்டாமென்று பிடிவாதம் செய்கிறான். பாரதி மண்டப விழாவுக்கு நான் வர சௌகரியப்படாது; அநேகமாகப் பிரணதார்த்திஹரன் வருவான். ஒருநாள் பெரியவனும் அவனுடன் வரலாம். கூடுமானால் நீ அவர்களைச் சந்தித்து நேரில் பேசலாம். பிரணதார்த்திக்குச் சம்மதமானால் எனக்கு ஆட்சேபணையே இல்லை.

இப்படிக்கு,

சங்கர நாராயணன்."

"விஷயம் புரிந்ததல்லவா! நீ படித்த பிள்ளை; உனக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. அம்புஜத்தைப் பற்றி என் பெண் என்பதற்காக நான் சொல்லவில்லை. பூமிதேவி என்றால் அவளுக்கே தகும்" என்றார் கிழவர்.

"என் தகப்பனார்தான் என்னைப்பற்றித் தெளிவாக எழுதியிருக்கிறாரே; எனக்குக் கலியாணம் செய்து கொள்வதாக எண்ணமிருந்தால்தானே!" என்றேன் நான்.

"அதெல்லாம் உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளும் பிதற்றல்—தெரியுமா! எதையோ நினைத்துக் கொண்டு என்னவோ செய்யக் கூடாது. காலா காலத்தில் கலியாணம் செய்து கொள்ளாவிட்டால், நாளடைவில் ஏக்கம் மனசை அரித்து தின்றுவிடும். அம்புஜம் தாய் இல்லாத குழந்தை. உனக்கு எல்லா வகையிலும் ஏற்றவள். மறுத்து ஒன்றுமே சொல்லாதே!"

என்னை அறியாமல் என் கண்கள் சமையல் அறைப் பக்கம் நோக்கின. உடலை உட்பக்கம் மறைத்துக் கொண்டிருந்ததால் அவள் தலையை மட்டும்தான் நான் காண முடிந்தது. ஆ! அந்தக் கண்களில் என்ன கவர்ச்சி! என்னை உதறித் தள்ளாதே என்ற பாவனையில் தோய்ந்து கலங்கி நிற்கும் பரிதாப உணர்ச்சி!

ஒரே நொடியில் பெண்மையின் தாக்குதலால் பிடிவாதத்தைக் கோட்டை விட்டது என் உள்ளம்.

அன்று கிழவர் சொல்லியபடி பூமாதேவியா யிருந்த அவளேதான் இப்போது என்னை ஆட்டி வைக்கும் சர்வ வல்லமையுள்ள மனைவி. இத்தனை நாட்களுக்குப் பிறகும் புத்திர பாக்கியம் உண்டாகவில்லையே என்னும் ஏக்கத்தினால்தான் கிழவரின் கட்டளைப்படி நாங்கள் ராமேசுவரம் போய்வரக் கிளம்பி விட்டோம். அதற்காகத் தான் இவ்வளவு அவசரமாக வந்ததால் ரயிலடியில் காத்துக் கிடக்க நேர்ந்தது.

வானத்துக்கும் வையத்துக்கும் இடையே வேறொரு புதிய மேக மண்டலத்தைச் சிருஷ்டித்ததைப் போல, புகைப் படலங்களை அள்ளி வீசிக்கொண்டே 'குப் குப்' என்னும் ஒலியுடனும், கொடூரமான கூப்பாடுடனும் கடுகிப் பறந்தது 'போட் மெயில்.' அதனுடைய கனமான இரண்டு ஒளிக் கண்கள், இருளின் உடலைப் பிளந்து வெகு தூரம் வரையில் வெளிச்சத்தை நிரப்பின.

## 2

வண்டி போன வேகத்தில் விழுப்புரம் வந்ததே தெரியவில்லை. வண்டி நின்ற பிறகு விழித்துக்கொண்டு ஜன்னல் வழியாகப் பார்த்தேன். நாங்கள் பெட்டியிலிருந்து ஒருவர் இறங்கியதும், இரண்டே கால் பேர் உள்ளே ஏறினர். அவர்களுள் ஒருவர் ஆண்; மற்றவர் ஒரு பெண்ணும், சுமார் ஒரு வயசு உள்ள குழந்தையுமே. வந்தவர்கள் சுற்று முற்றும் பார்த்தார்கள்; இடம் ஒருவர் உட்காரலாம், இருவர் நிற்கலாம் என்றிருந்தது. அந்தப் பெண் காலியாகவிருந்த இடத்தில் தன் கணவனான அந்த ஆண் பிள்ளையை உட்கார்த்தி விட்டு, தான் கைக்குழந்தையுடன் நின்று கொண்டாள். அதுவும் மெல்ல மெல்ல என் மனைவி உட்கார்ந்திருக்கும் இடத்தின் அருகில்

வந்து நான் இருக்கும் பக்கமாகவே நின்று கொண்டு விட்டாள்.

"இது என்ன பலவா! போனால் போகட்டும் என்று எழுந்து இடம் கொடுப்பதற்கு! மேலும் தன் புருஷனைச் சௌகரியமாக உட்கார்த்திவிட்டு, குழந்தையுங் கையுமாகத் தான் நிற்கிறாளே, என்ன சாமர்த்தியம்! எப்படியாவது போகட்டும்; நான் எழுந்திருக்கப் போவதில்லை" என்று நினைத்துக்கொண்டே தூங்குகிறவனைப் போல் கண்களைக் கெட்டியாக மூடிக்கொண்டு விட்டேன். வண்டியும் தன் பழைய பல்லவியைப் பாடிக்கொண்டே கிளம்பி விட்டது.

புகை வண்டி சுமார் பத்து நிமிஷ நேரம் ஓடியிருக்கும். "ஹல்லோ! யாரோ என்றல்லவா இருந்தேன்; நீங்களா!" என்று ஒரு குரல் கேட்டது.

ஏதோ பழகின குரல் போலவே இருந்தது. "யார் யாரோடு பேசினால் நமக்கென்ன!" என்று இன்னும் இறுக மூடிக்கொண்டேன் கண்களை!

"உங்களைத்தானே; மிஸ்டர் ஹரன்! தூக்கமா!"

"யார் இது!" என்று கண்ணை விழித்துப் பார்த்தேன்.

"என்ன அடியோடு மறந்து விட்டீரே!"

"இல்லை இல்லை; எப்படி மறக்கமுடியும்! நிற்கிறீயே, உட்கார்ந்து கொள்."

நான் எழுந்தேன்: அவள் அமர்ந்தாள்.

'இவ்வளவு உரிமையோடு உறவு கொண்டாடி, உங்களை இடத்திலிருந்தும் எழுப்பி விட்டாளே; யார் இவள்!'

இந்தக் கேள்வியைப் புருவங்களைச் சுளித்த வண்ணம் என் மனைவியின் கண்கள் கேட்டன.

"மிஸ்டர் ஹரன்! நான் சொன்னபடி கடிதம் அனுப்பினேனே; சேர்ந்ததா!"

"உம்."

"ஒருவர்க்கொருவர் கடிதம் வேறு எழுதிக் கொள்ளுகிறீர்களா, என்ன!"

என் மனைவியின் அகம் அதிர்ச்சியுற்றதை அவளது முகம் வெளிப்படுத்தியது.

பிரயாணிகளைத் தாங்கி நிற்கும் பெட்டிகளை முன்னேக்கி இழுத்துச் செல்லும் அந்த எஞ்சினின் வேகத்தைவிடப் பன்மடங்கு வேகத்துடன் பின்னேக்கிப் பறந்தது என் உள்ளம்.

* * *

அவள் பெயர் புவனசுந்தரி. பெயருக்கு ஏற்ற அழகு. நான் காலேஜில் இண்டர் இரண்டாம் வகுப்பில் படிக்கும்போது அவள் முதல் வகுப்பில் சேர்ந்தாள். பிறகு நான் ஒரு வருஷம் 'கோட்' அடித்ததால் அடுத்த வருஷம் அவளும் என் வகுப்பையே எட்டிப் பிடித்து விட்டாள். இருந்தாலும் கணக்குகள் செய்வதில் இணையற்றவன் என்று வகுப்பு முழுவதிலும் பெயர் வாங்கிவிட்ட என்னிடம் அவளுக்கு மரியாதை மட்டுமே அல்ல; பக்தியும் கூடத்தான் இருந்திருக்க வேண்டும்.

அவள் வரும்போதெல்லாம் நானும் அன்புடன் வரவேற்று, கடினமான கணக்குகளை



யெல்லாம் எளிதிலே புரியும்படி விளக்கிக் காட்டுவேன். இந்தச் செய்கையால் என் பள்ளித் தோழர்களுக்கெல்லாம் என்பேரில் ஒருவகையான அசூயை பிறந்ததென்றாலும், புவனாவுக்கு மட்டும் என்னிடம் அன்பும் மதிப்பும் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே வந்தன.

அடுத்த ஆண்டு பி. ஏ. வகுப்பிலும் நாங்கள் இருவரும் ஒன்றாகவே காலை வைத்தோம். எங்கள் பழக்கம் நாளுக்கு நாள் எங்களை யறியாமலேயே வளர்ச்சி பெற்று, ஒருவர்க்கொருவர் மனம் விட்டுப் பேசும் நிலையை அடைந்து விட்டது. அவள் ஒரு பெண்; நான் ஓர் ஆடவன். பஞ்சும் நெருப்பும் ஒன்றாகப் பழகினால் அது அவற்றைச் சும்மா விடுவதில்லை என்பதெல்லாம் எனக்கு அப்போது தெரியாது. நிர்மலமான ஆகாசத்தைப் போன்று, நிம்மதியாக இருந்தது என் மனம். ஆனால் பி.ஏ யின் இரண்டாம் படியில் அடியெடுத்து வைத்தவுடனே என் உள்ளத்தில் திடீரென்று ஒரு மாற்றம் தென்பட்டது. அதுவரையில் வேற்றுமை உணர்ச்சியோ, விகல்பமோ கண்டறியாத என் மனத்தில், புவனாவின் பெண்மையும் பேரெழிலும் ஒரு புரட்சியை உண்டாக்கி விட்டன. புவனாவைக் காணாத நிமிடமெல்லாம் என் உள்ளம் ஊமைக் காயத்தால் வருந்தும் உடலைப் போல் நொந்தது. அதற்குக் காரணம் யாதாயிருக்கும்!

அடுத்த சந்திப்பிலிருந்து, சமயம் நேர்ந்த போதெல்லாம் அவளை இமை கொட்டாமல் உற்றுப் பார்க்கலானேன். மடல் மடலாய்

வாரிப் பின்னலிட்ட கார் நிறக் கூந்தலில் கற்றையாகச் சூடியிருந்த மலர்களினின்றும் எழும் மணம், எனக்கு ஒரு புதிய இன்ப போதையை உண்டாக்கியது. பரந்த முகத்தின் கண்ணாடி போன்ற கன்னங்கள் அவள் அப்படியும் இப்படியும் திரும்பும்போதெல்லாம் பொன்னிறத்தைப் பளிச்சிட்டுக் காட்டின. விரிந்து மலர்ந்த கவர்ச்சிகரமான கண்களில் அவள் மை தீட்டியிருந்த விந்தையை நான் அதுகாறும் கண்டு உணராத மடமைக்காக என்னையே நான் நிந்தித்துக் கொண்டேன்.

நாட்கள் பல கழிந்தன; ஒரு நாள் நானும் புவனாவும் வழக்கம் போல் சந்தித்தோம்.

"என்ன பலமாக யோசிக்கிறீர்கள்!" என்று கேட்டாள் புவனா.

"ஆம்; எனக்கு எப்பொழுதுமே யோசனை தான்!"

"எதைப் பற்றி! என்னிடம் சொல்லக் கூடாதா!"

"வேறொன்றுமில்லை; நாம் என்றைக்காவது பிரியும்படி நேருமே என்பதைப் பற்றித் தான்......"

"பூ! ஏன் பிரிய வேண்டும்! இரண்டு பேரும் ஒரே ஆபீசில் வேலைக்குச் சேர்ந்தால் போகிறது. எனக்கு வேலை மிகவும் சுலுவாகி விடும்."

பின்பொரு நாள்:

"மிஸ்டர் ஹரன்! நீங்கள் என்ன வரவர இப்படி அசடு மாதிரி விழிக்கிறீர்கள்! என்ன கவலை உமக்கு!"

"அடுத்த வெள்ளிக்கிழமையோடு காலேஜ் வாழ்க்கை முடிந்து விடும்; பின்பு கோடை விடுமுறை."

"காலேஜுக்கு இனிமேல் 'குட்பை'. நாம் கட்டாயம் தேர்வு பெறப் போகிறோம்; சந்தேகமே வேண்டாம்."

"புவனா! நான் ஒன்று சொன்னால் நீ ஒன்று சொல்லுகிறாய்; என் மனத்தை அறிந்து கொள்ளவில்லை இன்னும் நீ!"

"மனத்தில் புகுந்து பார்ப்பதற்கு எனக்கு மாயம் மந்திரம் ஒன்றும் தெரியாது; சொல்லித் தொலைக்கிறதுதானே!"

அவளுடைய பேச்சில் கொஞ்சம் படபடப்பு தோன்றியது.

என் உடலில் ஒரு வகையான நடுக்கம் பிறந்தது; நா தழு தழுத்தது.

"புவனா! நீ ஏன் என்னையே......"

"உம்; உங்களையே......"

முத்துப் போன்ற பற்கள்; அதரங்களின் வழியாக ஒரு புன்னகை ஆம்; அவளுக்குக் கோபம் வரவில்லை. ஆனால் என் அந்தப் பெருமூச்சு! என் முகத்தில் மட்டுமே அல்ல; அவள் முகத்திலும் கூடத்தான் இப்போது அசடு தட்டுகிறது. ஆனால் அவள் என்னையேதான் என்றுமில்லாதபடி இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அந்தப் பார்வையிலே கருத்து இருக்கிறது; காதலைக் காணோம். இரக்கம் இருக்கிறது; ஆனால் எளிமையைக் காணோம். அன்பு இருக்கிறது; ஆயினும் இன்பத்தைக் காணவில்லை. என்ன இருக்கிறதோ அவள் மனதிலும்! நான் மட்டும் என்ன மாய மந்திரமா கற்றிருக்கிறேன் ஒருவர் மனதில் உள்ளதைத் தெரிந்து கொள்ள! மௌனமாகத் தலை குனிந்தேன் நான்!

"மிஸ்டர் ஹரன்! வெள்ளிக்கிழமையோடு அல்லவா காலேஜ் முடிகிறது! அதற்கடுத்த திங்கட்கிழமை நான் உமக்கு ஒரு கடிதம் அனுப்புவேன். அதிலிருந்து எல்லா விவரங்களையும் நீங்கள் அறிந்து கொள்வீர்கள்" என்றாள் அவள்.

இந்தச் சம்பவத்திற்குப் பின்னர் நாங்கள் இருவரும் முன் போலவேதான் பழகி வந்தோமாயினும், புவனாவின் உள்ளத்தில் ஒரு வேதனை குடி கொண்டிருப்பதை நான் எளிதில் உணர்ந்து கொண்டேன். ஆனால் அதைப் பற்றி ஒன்றும் கேட்கவில்லை. திங்கட்கிழமையன்று அவள் கைப்பட எழுதிய கடிதம்தான் வரப்போகிறதே......!

வெள்ளிக்கிழமை காலேஜ் முடிய பின் அடுத்த நாளே சனிக்கிழமை வந்தது; ஞாயிறும் கழிந்தது. நான் குதூகலமாக எதிர்பார்த்த திங்கட்கிழமையும் வந்தே விட்டது. ஒவ்வொரு விநாடியும் புவனாவின் கடிதத்தை எதிர்பார்த்த வண்ணமாயிருந்தேன். அது வீண் போகவில்லை. தபால்காரன் மஞ்சள் நிறக் கவர் ஒன்றை என்னிடம் கொடுத்துப் போனான். விலாசத்தைப் பார்த்தேன். என் பெயரை அவள் தன் கைபடவே எழுதியிருக்கிறாள். உறையிலிருந்த கடிதத்தை எடுத்தேன். திருமணப் பத்திரிகை!

"யாருக்குக் கலியாணம்! எனக்குமா அவளுக்குமா!"

ஆசையின் பெருக்கால் அப்படித்தான் எண்ணியது மனம். ஆனால் மாப்பிள்ளை நான் அல்ல.

"சௌபாக்கியவதி புவனசுந்தரியை, சிரஞ்சீவி சங்கரலிங்கம், எம். ஏ.க்குக் கொடுத்து..."

என்னை அறியாமல் கடிதம் நழுவிக் கீழே விழுந்தது. என் கால்கள் நிற்க முடியாமல் வெலவெலத்துப் போயின. தலை சுழன்றது. மெல்லப் படியேறி மாடிக்குப் போய்ச் சோபாவில் சாய்ந்தேன்.

அந்தக் கலியாணப் பத்திரிகையைத்தான் அவள் திங்கட்கிழமை எதிர்பார்க்கச் சொன்னாள் என்பது எனக்கு அப்போதுதான் விளங்கியது.

"ஆ, என்ன மாயாஜால மர்ம வார்த்தைகள்! எத்தகைய கருணையற்ற கல்நெஞ்ச சுபாவம்! அராபிக் கதையின் ஆரம்பத்தில் வருவோரைப்போல, பெண்கள் எல்லோருமே பொல்லாதவர்கள்தானோ! நமக்கு ஏன் இந்த வம்பு! நம்ப முடியாத ஓர் இனத்தினிடம் நட்பு வைத்து, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதைப் போன்ற முட்டாள்தனம் வேறொன்றுமில்லை. காதலாவது, கத்திரிக்காயாவது! நமக்கு இந்த ஜன்மத்தில் கல்யாணமே வேண்டாம்."

இந்த உறுதியில் விளைந்த பிடிவாதம் நாளுக்கு நாள் வளர்ந்து என் மனத்தில் வேரூன்றி விட்டது. அதனால்தான் வந்த பெண்களையெல்லாம்

வேண்டாமென்று சொல்லி, என் தந்தையாரின் வருத்தத்துக்கும் காரணமாகினேன். ஆனால் முடிவில் அம்புஜுவின் தரிசன விசேஷத்தால், என் பிடிவாதக் குரங்கு என்னை விட்டு ஓட்டம் பிடித்தது.

## 2

"என் வாழ்நாளைத் தன் வஞ்சகத்தால் பரீக்ஷை பார்த்த அந்தப் புவன சுந்தரியா இவள்! இந்தப் பாவிக்கா இடம் கொடுத்து விட்டு எழுந்தும் நிற்கிறேன்!" என்று எனக்குள் நினைத்துக் கொண்டிருக்கையிலேயே, "நீங்கள் கொஞ்சம் எழுந்திருங்கள்; மிஸ்டர் நாரன் உட்காரட்டும்" என்றாள் புவனா. அவர் எழுந்து நின்றார். நான் வெற்றியுடன் பிடித்துக் கொண்ட அந்த இடத்தில் உட்கார்ந்து விட்டேன்.

என் மனைவி; அருகில் புவனா; அவள் பக்கத்தில் கொஞ்சம் எட்டினாற்போல் நான்; என்னை ஒட்டினாற்போல் எழுந்து நிற்கும் அவள் கணவன்.

"மிஸ்டர் நாரன்! இவர்தான் என் கணவர்!" என்று சொல்லிவிட்டு, தன் கணவனைப் பார்த்து, "இவரை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். என் காலேஜில் என்னுடன் படித்தவர் மிஸ்டர் நாரன் என்று நான் அடிக்கடி சொல்லுவேனே" என்றாள் புவனா.

"ஓ! அவரா! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்" என்று என் இரண்டு கரங்களையும் பற்றிக் கொண்டார் அந்த மனிதர்.

இந்தச் செய்கை எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தது. "நீங்கள் எதற்காக என்னிடம் மன்னிப்பு கோரவேண்டும்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்றேன் நான்.

"ஆம்; அவருக்கு ஒன்றுமே புரியாது. புதிய மனிதர் ஆகிவிட்டார். புரிய வையுங்கள், பாவம்!" என்றாள் குறும்புக் குணம் நிறைந்த புவனா அவள் கணவனைப் பார்த்து.

அவர் சொன்னார்:

"உங்களைப் பற்றி நான் எல்லாம் அறிவேன். புவனா கள்ளங்கபட மற்றவள்; அவளிடம் ஒளிவு மறைவு என்பதே கிடையாது. அவள் என்னிடம் ஒரு சம்பவத்தையும் மறைத்ததே இல்லை."

"அட பாவமே! நான் பிதற்றியதைக்கூடச் சொல்லி விட்டாளோ!"

என்னையே கேட்டுக் கொண்டேன் நான். இதற்குள் என் மனைவி தன் காதுகளை மிகவும் கூர்மையாகத் தீட்டிக் கொண்டு விட்டாள், முயல் பதுங்கி இருக்கும் புதரைக் கண்டு கொண்ட ஒரு வேட்டை நாயைப் போல.

புவனாவின் கணவர் மேலும் பேசலானார்:

"புவனா சிறு பிராயத்திலே தன் தந்தையை இழந்து விட்டாள்; அவள் என்னுடைய மாமாவின் பெண். என் தந்தை, அவளையும் அவள் தாயையும் எங்கள் வீட்டிலேயே வைத்துக் கொண்டு காப்பாற்றியதுமன்றி, புவனாவின் நுண்ணறிவையும் கல்வியிலுள்ள ஆர்வத்தையும் கண்டு பணத்தைப் பணம் என்று பாராமல் செலவு செய்து அவளைப் பி. ஏ. வரையில் படிக்கவும் செய்தார். அதற்காக



நாடக நடிகர்:—என்ன ஸார். உங்களை ரொம்ப நாட்களாகக் கண்ணிலேயே காணோமே! சௌக்கியந்தானே? — எனக்கு அடுத்த வாரம் கல்யாணம். தவறாமல் வந்துவிட வேண்டும்.

அவர்:—ஆகா, அப்படியே! கதாநாயகியாக யார் நடிக்கப் போகிறாள்?

அவர் எதிர்பார்த்த பதிலுதவி, புவனா தமக்கு நாட்டுப் பெண்ணாக வாய்த்துத் தம் வீட்டிலேயே எக்காலும் இருந்து மகிழ்விக்க வேண்டும் என்னும் ஒன்றேதான்!

"புவனா உங்களுடன் பேசிப் பழகிய நாட்களில், அடிக்கடி உங்களைப் பற்றி என்னிடம் புகழ்ந்து கூறிப் பெருமை கொள்ளுவாள். அவள் ஒன்றுவிடாமல் அனைத்தையும் என்னிடம் சொல்லுவாள். ஏனெனில் எங்கள் வீட்டிலே என்னைத் தவிர அந்தரங்கமானவர் அவளுக்கு ஒருவரும் இருக்கவில்லை. அவ்வளவு பெருந்தன்மை உடையவனாக நம்பி எல்லாவற்றையும் என்னிடம் கூறுகிறாளே என்று எனக்கு அவள் பேரில் அளவற்ற மதிப்பு உண்டாகி விட்டது.

"இவ்வாறிருக்கையில் புவனா என்னை நோக்கித் திடீரென்று ஒரு கேள்வி கேட்டாள். 'அத்தனை நல்ல மனிதராகத் தோன்றுகிறாரே; அவரையே நான் மணந்து கொண்டால் என்ன?' என்று!

"இந்தக் கேள்வியை நான் அவளிடமிருந்து எதிர்பார்க்கவே இல்லை. இதனால் என் மனம் அதிர்ச்சியுற்றது என்றே சொல்ல வேண்டும். ஆயினும் அவளுடைய ஒளித்து வைக்காத உள்ளத்தைக் கண்டு நான் வியக்காமலில்லை.

"ஆகவே நாளைக்குச் சொல்லுகிறேன்" என்று பதில் கூறி விட்டேன். அன்றெல்லாம் நன்கு ஆலோசித்துப் பார்த்தேன்; ஒரு முடிவுக்கும் வந்து விட்டேன்.

"புவனா புத்திசாலி; ஆய்ந்தோய்ந்து பாராமல் எதிலும் தலையிட மாட்டாள். அவள் நமது வீட்டில் இருந்து சாப்பிட்டுக் கல்வி பயின்றாள் என்பதற்காகவே என்னைத்தான் அவள் மணம் புரிய வேண்டும் என்னும் கட்டாயம் இல்லையல்லவா? அவள் தன் மனமாரக் காதலிக்கும் நாரனையே ஏன் விவாகம் செய்து கொள்ளக் கூடாது! எனக்குத் தகுதியுடைய

வேறு பெண் எவளும் கிடைக்காமலா போய் விடுவாள் !...ஆனால், அப்பா ஒப்ப வேண்டுமே! ஆ!...இப்படிச் செய்கிறேன் என்று தீர்மானித்துக்கொண்டே என் தந்தையிடம் போய்ப் பணிவுடன் நின்றேன்.

"அப்பா 'என்ன சங்கரா !' என்றார் கனிந்த குரலில்.

"நான் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, 'அப்பா, தாங்கள் கல்யாணத்துக்கு முகூர்த்தம் பார்த்துக் கொண்டிருப்பதாகக் கேள்விப் பட்டேன். அதைப் பற்றி நான் ஒன்று உங்களிடம் சொல்லியாக வேண்டும்' என்றேன்.

"அப்பா பதற்றத்துடன் 'என்ன அது ! சொல் !' என்றார்.

"புவனுவுக்குத் தகுதியுள்ள வேறு ஒரு வரனையும், எனக்குத் தாங்களே வேறு பெண் ஒருத்தியையும் பார்த்து மணமுடித்தால் நலமாயிருக்கும். புவனு நம்ம வீட்டிலேயே வளர்ந்து விட்டாள் ; எங்களுக்குள் சகோதர பாசந்தான் வேரூன்றி விட்டதேயன்றி......

"அப்பாவுக்குக் கோபம் வந்து விட்டது. 'போதும், உனது தத்துவ வியாக்கியானம். உனது ஆங்கிலப் படிப்பின் லட்சணத்தை வெளியில் மட்டும் வைத்துக் கொள் ; குடும்பத்திலேயும் கலந்து குட்டிச் சுவராக்க வேண்டாம்' என்றார்.

"அப்பொழுது புவனு குறுக்கிட்டு, 'இல்லை மாமா ! அவர் சொல்வதில் அர்த்த மிருக்கிறது' என்று பளிச்சென்று கூறி விட்டாள்.

"என் தந்தை விழிகளில் கனல் பறக்க, 'இனிமேல் நீங்கள் எக்கேடாவது கெட்டுப் போங்கள். நான் நாளையே என் சுயார்ஜிதமான இந்தச் சொத்து பூராவையும் புதுச்சேரி ஆசிரமத்திற்கு எழுதி வைத்துவிட்டு, நானும் அங்கே போய்ச் சேர்ந்து விடுகிறேன்' என்றார்.

"சொத்து போனால் போகட்டும் ; அவரே போய் விடுகிறாரா !—என் உள்ளம் நடுங்கியது.

"அப்பாவின் கோபத்தையும் என் தயக்கத்தையும் கண்ட புவனுவின் கண்களில் நீர் மல்கியது. உடனே என் சம்மதத்தையும் எதிர் பார்க்காமல் 'மாமா ! எங்களை மன்னிக்க வேண்டும் ; நாங்கள் கல்யாணம் செய்து கொள்கிறோம்' என்று கணீரென்ற குரலில் சொல்லி விட்டாள். நான் ஏமாற்றத்துடன் அவள் முகத்தை உற்றுப் பார்த்தேன்.

"அப்பா, 'இருட்டுக் குழந்தைகளா ! என்னிடம் விளையாடி வேடிக்கையா பார்க்கிறீர்கள் ! போங்கள், அவரவர் வேலையைப் பார்த்துக் கொண்டு. 'அடே, சங்கரா ! இந்தா, இதைக் கொண்டு போய் அச்சாபீஸில் கொடுத்துப் பன்னீராயிரம் தாள் போடச் சொல்லு !' என்று தம் கையால் எழுதி வைத்திருந்த எங்கள் திருமணப் பத்திரிகையை எடுத்து என்னிடம் கொடுத்தார். அப்போது சந்தோஷ மிகுதியால் அவர் கண்களிலின்றும் பாஷ்பம் பெருகியது. புவனுவின் குறிப்பை உணர்ந்து நான் அதை வாங்கிக் கொண்டு போய் அச்சகத்திலும் கொடுத்து வந்தேன். மிஸ்டர் ஹரன், அந்தப் பத்திரிகையைத்தான் புவனு உமக்குத் திங்கட்கிழமையன்று கிடைக்கும் என்று சொன்னாளாம். அது கிடைத்ததல்லவா !" என்று கேட்டார் அவர்.

இதைக் கேட்கக் கேட்க என் உடல் அப்படியே நாணத்தால் குன்றிப் போய்விட்டது. தியாகமே உருவாயமைந்த அந்த மனிதர் எங்கே! தன்னலத்தையே கண்ணாய்க் கொண்ட நான் எங்கே ! இப்படிப்பட்ட பொன் மனம் படைத்த புருஷனையுடைய வொட்டாமல் புவனுவைத் தடுக்க, புல்லுருவிபோல் இடையே முனைந்து முயலவும் செய்தேனே !

"என்ன, பேசாமல் கொள்ளாமல் பலமாக யோசிக்கிறீர்கள், மிஸ்டர் ஹரன் !"

இது புவனுவின் குரல்; அதே குறும்பு குணம் நிறைந்த அன்புக் குரல்.

"ஆம் ; யோசிக்கிறேன் புவனு ! உங்கள் விஷயத்தில் நான் பெரிய அபராதியாகி விட்டேன். உன் வாழ்வின் ஜீவ ஒளியைக் குன்ற வைத்திருப்பேன், கடவுள் நம்மைக் காப்பாற்றினார். அவருக்கு என் நன்றி !"

"என்ன மிஸ்டர் ஹரன், விஷயத்தைச் சொல்லாமல் வேதாந்தத்தில் இறங்கிவிட்டீர்!"

"நான் உன்னுடன் அந்தநாள் பழகியும் உன்னுடைய பெருந்தன்மையையும், உனக்கு உறவும் உண்மையும் அன்பும் மிகுந்த துணைவர் ஒருவர் இருக்கிறார் என்பதையும் அறியாமல் போனேன். உனக்கு ஏற்ற கணவனை நீ மணந்தாய். புவனு, உண்மையில் நீ காப்பாற்றப் பட்டாய் ! உன் கணவரிடம் உள்ள தியாக உணர்ச்சியிலும், உள்ளன்பிலும் ஆயிரத்தில் ஒரு பங்குகூட என்னிடம் இல்லை."

"அது உண்மைதான் ஹரன், நீர் பத்திரிகை கிடைத்தும்கூடக் கல்யாணத்திற்கு வராமல் இருந்ததிலிருந்தே நான் அதை உணர்ந்து கொண்டேன். அது போகட்டும் ; உமது மிஸ்ஸஸ்ஸின் பெயர் என்ன !"

"அலமேலு. புது மனிதரைக் கண்டால் பேசுவதற்கு மிகவும் சங்கோஜப்படுவாள் !"

"என் கணவர்கூட அப்படித்தான்; பேசவே மாட்டார். பேச ஆரம்பித்தாலோ நிறுத்தச் செய்வது மகா கஷ்டம்."

எல்லோரும் சிரித்தோம். (என் மனைவியைத் தவிர).

"அது சரி ; இப்போது எது வரையில் உங்கள் பிரயாணம் !"

"ராமேசுவரம் போகிறோம்."

"நல்லதாய்ப் போயிற்று ; நாங்களும் அங்கேதான் வருகிறோம். இவருக்குத் தேவஸ்தானத்தில் 'எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்' வேலை. நீங்கள் நேராக எங்களுடனே வந்து எங்கள் வீட்டிலேயே தங்கியிருக்க வேண்டும்" என்றாள் புவனு.

இதுவரையில் உணர்ச்சியற்ற மரக்கட்டை போல் உட்கார்ந்திருந்த என் மனைவி, தன் திருவாயைத் திறந்து பளிச்சென்று இரண்டொரு முத்துக்களைச் சிந்த விட்டாள்.

"நாங்கள் மதுரையில் இறங்கி ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டு ராமேசுவரம் போகலாம் என்று இருந்தோம். ஆனால் இனிமேல் உங்களோடு வருவதாகத்தான் தீர்மானம் !"

இதைக் கூறும்போது அலமேலுவின் கண்களிலும் நீர் கசிந்தது.

# ராஜா தப்பினான்!




## 1. "டேய், சோனிப்பூனை!"

ஜூன் மாதம் பதினாறாம் தேதி. சென்னை பவழக்காரத் தெருவில் இருந்த ஒரு போர்டு பள்ளிக்கூடம் 'திறந்து' கொள்ளுவதற்காகக் காலண்டரில் அந்தத் தேதி வந்தது.

பத்து மணி அடிக்கச் சில நிமிஷங்களே இருந்தன. பள்ளிக்கூட வாசலிலே மாணவர்கள் கும்பலாக திரண்டு நின்றனர். ஒரே கூச்சல்; கும்மாளம். "டேய்! டேய்!" என்ற கூப்பாடும் குதியுமாக இருந்தது.

அந்தக் கூட்டத்தில் சேராமல் தனியாக ஒதுங்கி நின்று கொண்டிருந்தான் பாலன். அவன் முகம் பளிச்சென்றிருந்தது. புதிதாக அவன் அப்பா தைத்துக் கொடுத்திருந்த 'புஷ் கோட்'டைப் போட்டுக் கொண்டு வந்திருந்தான்.

அவன் முகத்தில் வட்டமிட்ட களை, களிப்பு, கம்பீரம் இவைகளைப் பார்த்தால், 'நிச்சயமாகப் 'பாஸ்'; எந்த 'சப்ஜெக்டிலும்' நூற்றுக்கு அறுபது மார்க்குக்கு மேலே வாங்கி இருப்பான்' என்று சொல்லும்படி இருந்தது.

பள்ளிக்கூடத்து 'மெயின் கேட்' எப்போது திறக்கும் என்று காத்துக் கொண்டு நின்றிருந்த பாலனை, எதிரே கூட்டத்திலிருந்து ஒரு கட்டைக் குரல் "டேய்! சோனிப்பூனை!" எனக் கூப்பிட்டது. பிறகு "நீ பாஸா, பெயிலாடா?" என்று கேலியாகக் கேட்டது. "பாலனுக்கென்னடா! வகுப்பு வாத்தியார் வீட்டுக்கு அடுத்த வீட்டில் குடியிருக்கிறான். பரீட்சை கேள்வி எல்லாம் 'அவுட்'டாக்கிக் கொண்டிருப்பான்!" என்றும் அதே குரல் அவனையே இளப்பமாகப் பேசிற்று.

பாலனுக்குக்கோபம் வந்தது; ஆத்திரம் வந்தது; உதடு துடித்தது. அப்புறம் அழுகை கூட வந்தது. இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்த்துவிட்டு மெதுவாக அங்கிருந்து நகர ஆரம்பித்தான்.

பாவம்! பாலன் உண்மையில் 'சோனி' தான்! அவனால் அவனைப் பரிகாசம் செய்த சிவராமனை எப்படி எதிர்க்க முடியும்?

சிவராமன் குண்டுப் பயல். மூன்றாம் பாரத்துக்கே பெரிய பையன்; துஷ்டன்; சப்-இன்ஸ்பெக்டர் மகன் என்பதனால் வகுப்பு வாத்தியாரே அவனை ஒன்றும் சொல்வதில்லை. இரண்டு, மூன்று தடவை பெஞ்சு மேலே ஏற்றிவிட்டு இனி சிவராமன் பெஞ்சு மேல் ஏறினால் வேறு புது பெஞ்சி வாங்க வேண்டியதுதான் என்று முடிவுக்கு வந்து, அதற்குப் பிறகு அவனுக்கு அந்தத் தண்டனை கொடுப்பதில்லை!

அப்படிப்பட்ட முரட்டுப் பையனுடன் சண்டையிட பாலனால் எப்படி முடியும்?

பரிதாபகரமாகத் தன் எதிரியை ஒரு தரம் நிமிர்ந்து பார்த்துவிட்டு வாய்க்குள் சபித்தான் பாலன்:—

"சோனிப்பூனையாம், சோனிப்பூனை! படிப்பில் நூற்றுக்குப் பத்து மார்க்கு வாங்க யோக்கியதை இல்லாத 'புளி

மூட்டை'க்கு வாய் ஒன்றுதான் கேடு! இப்போது என் 'பிரண்ட்' ராஜு பக்கத்தில் இருந்தால் சிவராமன் என்னை இப்படிச் சொல்லப் பார்த்துக் கொண்டிருப்பானா?'' என்று துக்கம் நெஞ்சில் முட்ட ராஜு வருகிறானா என்று திரும்பித் திரும்பிப் பார்த்தான் பாலன். அப்போது அவன் விழிகளில் ஏக்கம் வட்டமிட்டது.



''டேய்! சோனி! என்னடா கேட்கிறேன் பதில் சொல்ல மாட்டேன் என்கிறாய்? என்னை யார் என்று நினைத்தாய்?'' என்று 'போலீஸ் பாணி'யில் கேட்டுக் கொண்டே பாலனின் புஷ்கோட்டைப்பிடித்துச் சுண்டி இழுத்தான் சிவராமன். அவனுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த வேறு சில மாணவர்கள், 'ஹோய்' யென்று சப்தமிட்டுச் சிவராமனுக்கு ஆதரவு கொடுத்தார்கள்.

''உன் அப்பா சப்-இன்ஸ்பெக்டராக இருந்தால் உனக்கு நான் பயப்பட வேணுமா? நான் பாஸோ, பெயிலோ உனக்கு என்ன அதைப் பற்றி?'' என்று திமிறிக் கொண்டே ஆத்திரப் பட்டான் பாலன். உள்ளே ஏதோ வொன்று 'ராஜு! நீ எங்கேடா போய் விட்டாய்? சிவராமன் என்னோடு வம்புச் சண்டைக்கு வருகிறானே!' என்று முறையிட்டது.

''கிணு கிணு!''

அது சைக்கிள் மணி. பாலன் திரும்பிப் பார்த்தான். அவன்முகம் புது ஒளி பெற்றது. ''ராஜு! ராஜு!'' என்று ஆர்ப்பரித்தான்.

விர்ரென்று சைக்கிளில் வந்த ராஜு ''பாலா! பயப்படாதே!'' என்று சைக்கின் நாதம் செய்து கொண்டே தாவி இறங்கினான். அடுத்த நிமிஷம், ''டேய்! சிவா! பாலனை யார் என்று நினைத்தாய்? அவன் சோனியாக இருக்கிறான் என்றால் அடித்து விடலாம் என்று பார்த்தாயா?'' என்று உறுமிக் கொண்டே சிவராமன் மீது பாய்ந்தான். இருவரும் கடகட வென்று பள்ளிக்கூட வாசலிலே உருண்டு புரண்டார்கள்.

''சிவராமனுக்கு நன்றாக வேணும்! அவன் ஏன் வலுச் சண்டைக்குப் போனான்!''

''பாலனைச் சிவராமன் அடித்தால் ராஜுவுக்கு என்ன வந்தது?''—என்று மற்ற மாணவர்கள் பேசிக் கொண்டு பின்னால் நகர்ந்து கொடுத்தார்கள். ஒருவருக்காவது விலக்கிவிட வேண்டுமென்று தோன்றவில்லை. பரீட்சைக்கு முன்னால் 'மானிட்டராக' இருந்த மணி கூடத் தன் 'உத்வேகத்தை' மறந்து வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றான்!

நல்ல வேளையாக மணி பத்து அடித்தது. பள்ளிக்கூடம் திறந்து கொண்டது. முதல்மணி கணகண வென்றது. சண்டை அத்துடன் நின்றது. சட்டை மீது ஒட்டிக் கொண்டிருந்த மண்ணைக்கூடத் தட்டிக் கொள்ளாமல் சிவராமனும், ராஜுவும் வகுப்பிற்குள் ஓடினார்கள்.



''ராஜுவைத் தெரு ஓரத்தில் இருக்கும் முக்

குறுணி பிள்ளையார்தான் சமயசஞ்சீவியாக அனுப்பி வைத்திருக்கணும்! இல்லாவிடில் அந்த இட்டிலிக் குண்டன் என்னைச் சட்டினி ஆக்கி இருப்பானே!'' என்று அந்தப் பிள்ளையாரை வணங்கிக் கொண்டே பாலனும் வகுப்பிற்குள் நுழைந்தான். பரீட்சை முடிவை வாத்தியார் வாசித்துக் கொண்டே வரும்போது சிவராமன் பெயர் அதில் வராமல் இருக்க வேண்டும் என்றும் அவன் கடவுளை வேண்டிக் கொண்டான்.

## 2. "ஏறு காரில்!"

**பா**லனும், ராஜுவும் சிரித்துக் கொண்டே வகுப்பை விட்டு வெளியே வந்தார்கள். "ராஜு! சிவராமன் 'கோட்' அடித்தது கூட எனக்குப் பெரிய வியப்பாகப் படவில்லை. நீ சமயத்தில் வந்து என் முதுகைக் காப்பாற்றினாயே! அதற்காக இன்று மாலை 'ஐஸ் புரூட் பார்ட்டி'க்கு ஏற்பாடு பண்ணி இருக்கிறேன்'' என்று குழைவாகக் கூறினான் பாலன்.

"பார்ட்டி கிடக்குடா, பாலா! அந்தப் பயல் சிவராமனை ரொம்ப நாளாகக் கறுவிக் கொண்டிருந்தேன். இன்று தான் நல்ல சந்தர்ப்பம் வந்தது'' என்று சொல்லிவிட்டுத் தன் சைக்கிளில் ஜம்மென்று தாவினான்.

அதே சமயம் அவனுக்குப் பின்னால் "பூம்!'' மென்று ஹாரன் அடித்துக் கொண்டே மோட்டார் கார் ஒன்று வேகமாக வந்து நின்றது.

அதை ஒரு போலீஸ்காரன் விட்டுக் கொண்டு வந்தான். அவனுக்குப் பக்கத்தில் சிவராமன் 'உம்'மென்று பிளாங்கி மூஞ்சியை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அவன் சட்டென்று சைக்கிளில் ஏறிக் கொண்டிருந்த ராஜுவைச் சுட்டிக் காட்டி "இவன் தான்! என்னை அடித்தவன்'' என்றான்.

போலீஸ்காரன் இறங்கிச் சைக்கிளையும் ராஜுவையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, 'எங்க ஐயா வீட்டுப் பிள்ளையை அடிச்சவன் நீதானே? ஏறு இந்தக் காரில்!'' என்று கூறித் தன்னுடைய சிவந்த விழிகளை உருட்டியபடி உறுமினான்.



தேன் ஒன்று வெளியே வர வழி தெரியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறது. அது கொட்டாமல் இருக்க வேண்டும் அல்லவா? எப்படியாவது வழி கண்டு பிடித்து அதை வெளியே துரத்தி விடுங்கள், பார்க்கலாம்.

போலீஸ்காரனின் சிவப்பு விழிகள், பயங்கரப் பார்வை, தடியான சிவப்பு நாமம், சிவப்புக் குல்லாய், காதுவரை நீண்டிருந்த மீசை—எல்லாவற்றையும் பார்த்த ராஜு நடு நடுங்கிப் போனான். அவனுக்குப் பின்னால் வந்த பாலன் அதற்கு மேல் பயந்து போனான்.

"ராஜு என்னத்துக்காக உங்கள் காரில் ஏறணும்? அவனுக்குத்தான் வீட்டுக்குப் போக சொந்த சைக்கிள் இருக்கிறதே?'' என்று பாலன் வேறு என்னமோ, ஊகிக்காதவன் போல நடுவில் கேட்டான்.

"ஏன், ஏறணுமா? எல்லாம் அங்கே வந்தால் தன்னால் தெரியும்'' என்று இளப்பமாகச் சிரித்துவிட்டுக் கான்ஸ்டபிள், ராஜுவைப் பிடித்து அலாக்காகத் தூக்கிப் பின் சீட்டில் போட்டான். 'விர்'ரென்று வண்டியைக் கிளப்பினான்.

"ராஜு மேலே ஒரு பிசகும் இல்லை. எனக்காகத்தான் சிவராமனை அவன் அடித்தான். வேணுமானால் என்னைப் பிடித்துக்கொண்டு போ!'' என்று பாலன் சொன்னதைக் கூட அந்தப் போலீஸ்காரன் காதில் போட்டுக் கொள்ளாமல் விர்ரென்று காரை ஓட்டினான். காருக்குப் பின்னால் ஓடப் பாலன் துடித்தான். பாவம், அவனுக்

துச் சைக்கிள் விடத் தெரியாது. கீழே கிடந்த ராஜுவின் சைக்கிளைத் தூக்கி மெதுவாகத் தள்ளிக் கொண்டே பின்னால் போனான். அவனுக்குக் கையும் காலும் உதறின.

தன் ஆப்த நண்பனைப் போலீஸ்காரன் பிடித்துப் போவது அவனுக்குப் பொறுக்குமா?

“எனக்காக ராஜு உபகாரம் செய்யக் கடைசியில் இப்படி ஆயிற்றே? போலீஸ் ஸ்டேஷனில் ராஜுவை என்ன செய்வார்களோ? என்ன தண்டனையெல்லாம் கொடுப்பார்களோ? ராஜுவின் மாமி, கேள்விப்பட்டால் என்னைக் கோபித்துக் கொள்வாளே! பாவம், என்னால் அவனுக்கு எவ்வளவு இம்சை?”

என்றிவ்வாறெல்லாம் எண்ணி எண்ணி பாலன் புழுவெனத் துடித்தான். தான் நடந்து செல்வது ரோடு என்று கூட நினைவில்லை. களீர் களீரென்று போலீஸ் ஸ்டேஷனில் ராஜுவைக் கட்டி வைத்து அடிப்பது போலவும், அவன் “பாலா! பாலா!” வென்ப் பரிதாபகரமாகக் கதறுவது போலவும் தோன்றியது.

“ராஜு! எனக்காக நீ அடிபட வேண்டாம்! இதோ நான் வந்து விட்டேன். என்னையே அவர்கள் அடிக்கட்டும்” என்று துடித்துக் கொண்டே சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ஓடினான். அங்கே சிவராமன் அப்பா வேலை பார்க்கும் போலீஸ் ஸ்டேஷன் இருந்தது. (தொடரும்)

# கூடார சினிமா!

நகரத்திலிருந்து அந்தக் காட்டுக்குப் புதிதாக ஒரு எலி வந்தது. அது காட்டில் ஒரு கூடார சினிமா ஒன்றை ஆரம்பித்தது. அதைப் பார்ப்பதற்காக அந்தக் காட்டிலுள்ள எலிகளும், சுண்டெலிகளும் போட்டி போட்டுக் கொண்டு சென்றன.

அக்காட்டிலுள்ள சுண்டெலி வாலனுக்கும் அந்தச் சினிமாப் படத்தைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை. அது தன் தாயாரிடம் சென்று, “அம்மா! எல்லோரும் சினிமா பார்க்கப் போகிறார்கள். எனக்கும் காசு கொடு, அம்மா! நானும் பார்த்துவிட்டு வருகிறேன்” என்று ஆசையுடன் கேட்டது.

“கண்ணு! ஒரே ஒரு அணாத்தானே இருக்கிறது? அதைச் சினிமாவுக்குச் செலவழித்து விட்டால் இன்றையச் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்கள் வாங்க முடியாதே?” என்றது தாயார் எலி. ஆனால் வாலன் முரட்டுப் பிடிவாதம் பிடிக்கவே, தாயார் எலி அந்த ஒரணாவைக் கொடுத்து அனுப்பியது.

வாலன் குதித்துக் கொம்மாளமடித்துக்கொண்டு கூடாரத்தை நோக்கிச் சென்றது. அதற்குச் சினிமா பார்க்கப் போவதில் உள்ள ஆனந்தத்தைச் சொல்லி முடியாது.

சினிமாக் கூடாரத்திலுள்ள டிக்கெட் கொடுக்குமிடத்தில் கூட்டம் இமைக்க முடியவில்லை. வாலன் எவ்வளவோ முயற்சி செய்தும் டிக்கெட் கிடைக்கவில்லை. என்ன செய்யும் பாவம்! அது முரட்டுத்தனமாகக் கூடாரத்துக்குள் நுழைய முயன்றது. ஆனால் கூடார வாசலில் தடியுடன் நிற்கும் காவல்கார எலிகள் அதை அங்கிருந்து துரத்தித் துரத்தி யடித்தன.

கடைசியில் வாலனுக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே அது மகிழ்ச்சியுடன் கூடாரத்தின் பின் பக்கம் சென்றது. அங்கே சென்றதும் அது பலங்கொண்ட மட்டும் ‘மியாவ், மியாவ்’ என்று கத்தியது.

அவ்வளவுதான்; இந்தச் சத்தத்தைக் கேட்டதும் கூடாரத்தில் சினிமாப் பார்க்கக்கூடியிருந்த எலிகள் எல்லாம், அந்தக் காட்டிலுள்ள பயங்கரப் பூனை தான் வந்து விட்டது என்று நினைத்து ஓட்டம் பிடித்தன. கூடாரத்துக்குள்ளும், வெளியிலும் ஒரு எலிகூடக் காணப்படவில்லை.

வாலன் தனது தந்திரம் பலித்ததைக் கண்டு சந்தோஷத்துடன் கூடாரத்துக்குள் நுழைந்தது. அதை யாரும் தடை செய்யவில்லை. வாலன் அங்கிருந்த பெரிய ஆசனத்தில் போய் ‘ஜம்’ மென்று உட்கார்ந்தது. சினிமா ஆரம்பிப்பதை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஆனால் வெகு நேரம் உட்கார்ந்தது தான் மிச்சம்! சினிமா நடத்தும் எலியாரும் பூனைக்குப் பயந்து ஓடி விட்டதால் சினிமா நடைபெறவில்லை. வாலன் வெகு நேரம் கூடாரத்தில் உட்கார்ந்து விட்டு ஏமாற்றத்துடன் வீடு திரும்பியது. —பி. என். மணி

# கேட்ட லட்சணம்!

எஸ். வி. எஸ்.

**மா**லை சுமார் ஐந்து மணியிருக்கும். அடுத்த தெரு பாட்டையா இலஞ்சி ரோட்டில் ஏகாங்கியாகப் போய்க் கொண்டிருந்தார். பாட்டையாவுக்கு வயது அறுபதுக்கு மேலிருந்தாலும் நல்ல வைரம் பாய்ந்த தேகம். தடியை ஊன்றிக் கொண்டு, அந்த வயதிலும், காலையிலும் மாலையிலும் ஒன்றரை மைல் அலட்சியமாக நடப்பார்.

அவருக்குப் பின்னாலேயே வந்து கொண்டிருந்த நான், அவரை முன்னேறிப் பிடித்து "என்ன பாட்டையா! என்ன யோசிச்சுக்கிட்டே போறீக?" என்றேன்.

"யோசனை ஒன்றுமில்லை! இந்தக் காலத்துப் பிள்ளைகளைப் பற்றித்தான் நினைச்சுக்கிட்டு வந்தேன்" என்றார்.

"என்ன வந்து விட்டது அவங்க போக்குக்கு?" என்றேன்.

"பெரியவங்க என்றிருந்தால் அவங்க பேச்சை மதிப்போம், கொள்ளுவோம் என்பதே இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு இல்லாமப் போச்சே......"

"அப்படிச் சொல்லாதீக, பாட்டையா! எந்தக் காலத்திலும் இளவட்டங்கள் வயசானவகப் பேச்சைக் கேட்பது கஷ்டந்தான். ஏன், நீங்ககூட உங்க இளமையிலே பெரியவங்க பேச்சைக் கேட்டிருக்க மாட்டீக!" என்றேன். உடனே பாட்டையா வேறு ஏதோ யோசனை செய்வது போல் தோன்றியது.

"என்ன பாட்டையா நான் சொல்வதை நீங்க ஒத்துக்கலையா?" என்றேன்.

"எப்படி தம்பி, ஒத்துக்கொள்ள முடியும்? பெரியவகப் பேச்சைக் கேட்டு, அவங்க இஷ்டப்படிக் கல்யாணம் பண்ணிக் கொண்டு, சுகமாக இருந்திருக்கேன். எப்படி நான் அவர்கள் பேச்சைக் கேட்டதில்லை என்பதை ஒத்துக்கொள்வேன்" என்றார்.



இதற்குள் நாங்கள் இலஞ்சி கோவிலை யடைந்து விட்டோம். இலஞ்சி முருகப் பெருமான் கோவிலுக்கு நேரே முப்பதடி தூரத்தில் ஒரு அழகான கல் மண்டபம் இருக்கிறது. அதில் ஏறி உட்கார்ந்துகொண்டு விட்டால், குளு குளு என்று வீசும் காற்று உள்ளத்துக்கும் உடலுக்கும் புது உவகை யளிக்கும். சுற்றிலுமுள்ள வயல்களில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பசுமை பரந்திருப்பது பார்க்கப் பார்க்கப் பேரானந்தம் விளைக்கும். சற்றுத் திரும்பிப் பார்த்தால் விண்ணும் மண்ணும் அளந்து நிற்கும் நீல நிறப் பொதிகை மலைச் சாரலில், மாலைக் கதிரவன் மறையும் காட்சி மனசுக்குப் பேரின்ப மூட்டும். மேலும் போகிற போக்கில் நிமிஷத்துக் கொன்றாய்க் கதிரவன் புரியும் விசித்திர வர்ணபேத ஜால வித்தைகளைக் காணக் கண் கோடிவேண்டும் என்றும் தோன்றும். அத்தகைய இடத்துக்கு வந்ததும்பாட்டையாவும், நானும் அந்த மண்டபத்தில் ஏறி உட்கார்ந்தோம்.

"பாட்டையா! சொல்லுங்க! உங்க கல்யாணக் கதையைக்கேட்போம்" என்றேன்.

"அது எதுக்கு இந்நேரத்திலே" என்றார்.

"இல்லை; நீங்க பெரியவங்க பேச்சைக் கேட்ட லக்ஷணம் எனக்கும் தெரிய வேணுமல்ல!" என்றேன். பிறகு தான் பாட்டையா ஆரம்பித்தார்.

*

**ஊ**ருக்குப் பெரியவர் உலகநாத பிள்ளை. நல்லது பொல்லாதது யாவற்றிலும் அவருடைய தீர்ப்பே பழையபுரவாசிகள் முடிவான தீர்ப்பாகக் கொண்டிருந்தார்கள். வழக்குகள் எது வந்தாலும் ஸ்ரீமான் உலகநாதபிள்ளை சரியான மத்தியஸ்தம் கூறுவார் என்ற நம்பிக்கை அந்தச் சுற்று வட்டாரத்திலுள்ள யாருக்கும் உண்டு.

அன்று காலை, சங்கரம் பிள்ளையும், ஷண்முகம் பிள்ளையும் ஒரு புதுவிதமான வழக்கை அவரிடம் எடுத்து வந்தார்கள். சங்கரம் பிள்ளைக்கு ராமன், கிருஷ்ணன் என்று இரு புதல்வர்கள். ஷண்முகம் பிள்

ளைக்கு அலமேலு என்று ஒரு புதல்வி. அவளுக்கு வயது பதினாறு. கல்யாணம் ஆகவேண்டிய பருவம்.

ஸ்ரீமான் ஷண்முகம் பிள்ளையின் மாமனார் காலமாவதற்கு முன்னர் ஒரு உயில் எழுதி வைத்துவிட்டுச் சென்றார். அதில் ஸ்ரீமான் ஷண்முகம் பிள்ளையின் புதல்வி, அலமேலுவை சங்கரம் பிள்ளையின் மூத்த புதல்வனுக்குக் கல்யாணம் செய்துகொடுத்தால், அலமேலுவுக்கு மஞ்சள் காணியாக, தன்னுடைய ஐந்து கோட்டை விரைப்பாடுள்ள நன்செயையும் வீட்டையும் கொடுப்பது என்று கண்டிருந்தது.

ஆனால், இப்பொழுது நேர்ந்துள்ள இடைஞ்சல் என்னவென்றால், ராமனுக்கு அலமேலுவைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள விருப்பமில்லை. அலமேலுவுக்கும் ராமனைக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டமில்லை. பிடிவாதமாக இருக்கிறார்கள். ஆனால் அந்தப் பெற்றோர்களுக்கோ, காலஞ்சென்ற பெரியவர் வார்த்தையை அலக்ஷியம் செய்ய முடியவில்லை. 'கடைசி காலத்து அவர் ஆசையை நிறைவேற்றவில்லையென்றால் அவர் ஆத்மா தான் சாந்தியடையுமா?' என்று வெளிப்படக் கூறினார்கள். உள்ளூற அவ்வளவு சொத்தையும் இந்தப் பைத்தியக்காரக் குழந்தைகளின் காரணமாக விட்டு விடுவதா? அசட்டுப் பிடிவாதத்தின் காரணமாக விட்டு விடுவதா? எத்தனை எத்தனையோ சிடுக்கெடுக்க முடியாது என்று கைகழுவ விடப்பட்ட சிக்கல்களை யெல்லாம் தீர்த்துவைத்த ஸ்ரீமான் உலகநாத பிள்ளை ஆகிலும் ஏதாவது வழி சொல்லிச் சரிப்படுத்த மாட்டாரா? என்ற எண்ணத்தோடுதான் அங்கு வந்தார்கள்.

இதையெல்லாம் கேட்ட உலகநாத பிள்ளை கூறினார்: "......நீங்கள் போய் ஒருவாரம் கழித்து வாங்க. நான் என்ன பண்ணலாம் என்பதை நன்றாக யோசித்து வைக்கிறேன்."

* * *

ராமனுக்கும் வயது இருபத்திரண்டாகி விட்டது; கிருஷ்ணனுக்கும் வயது இருபத்திரண்டாகி விட்டது. வயது ஒற்றுமை மட்டுமல்ல, உயரம், முக பாவம், பேச்சு, குரல் யாவற்றிலுமே ராமனும் கிருஷ்ணனும் ஒன்றுபோல் இருப்பார்கள். இதனால் அவர்களுடைய நண்பர்கள் "என்ன கிருஷ்ணா! சௌக்கியமா?" என்றால், "நான் கிருஷ்ணன் அல்ல; கிருஷ்ணனுடைய தமையன் ராமன்" என்பான் ராமன்.

அவ்விதமே கிருஷ்ணனைப் பார்த்து அவனை ராமன் என்று சிலர் நினைத்துக் கொண்டு பேசுவார்கள். கடைசியில் கிருஷ்ணனாக மனசுவைத்துப் போய் விட்டுப் போகிறது என்று, "இத்தனை நாழிகை நீங்கள் என்னை ராமன் என்று நினைத்துப் பேசிக் கொண்டிருந்தீர்கள். நான் ராமன் அல்ல, கிருஷ்ணன்" என்பான். அப்பொழுது பார்க்கவேண்டுமே எதிராளியின் முகத்தை — எள்ளும் கொள்ளும் வெடிக்கும் அந்த முகத்தில். ஆம், அவர்கள் இருவரும் இரட்டைக் குழந்தைகள்.

மூத்தவனான ராமன் கொஞ்சம் சாது. இளையவனான கிருஷ்ணன் எப்பொழுதுமே விஷமப் பேர்வழி. அதுவும் அண்ணன்-தம்பி முக ஒற்றுமையைக் கொண்டு, வந்தவர்களை ஆள்மாறாட வைத்து, அவன் நிகழ்த்திய கூத்துகளுக்கு அளவே இல்லை. இதையெல்லாம் பற்றிப் பழையனூர் வாசிகள் கதை கதையாகச் சொல்வார்கள்.

ராமனைக் கிருஷ்ணன் என்றும் கிருஷ்ணனை ராமன் என்றும் நினைத்து யார் தவறிழைத்தாலும் அலமேலு மட்டும் என்றும் தவறிழைத்ததே கிடையாது!

பிறர் 'ராமனுக்கும் கிருஷ்ணனுக்கும் வித்தியாசமே இல்லை; ஒரே அச்சில் இருவரையும் வார்த்து எடுத்திருக்கிறது' என்று எண்ணலாம். ஆனால் அலமேலுவுக்கு மட்டும் இருவருக்குமுள்ள வித்தியாசம் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் போல் துலம்பரமாகப்பட்டது. ராமனை வார்த்த அச்சில் கிருஷ்ணனை வார்க்கவே இல்லை என்று அவள் சாதிப்பாள்.

அவளுக்கு ராமனுடைய கண்களில் வீசாத ஒரு ஒளி கிருஷ்ணனுடைய கண்களில் வீசியதாகத் தோன்றியது.

ராமனுடைய நடையில் காணாத இன்பம், கிருஷ்ணனுடைய நடையில் காணக் கிடைத்தது.

ராமனுடைய முறுவல் பயக்காத உல்லாசம், கிருஷ்ணனுடைய முறுவல் அவளுக்குப் பயத்தது.

அது மட்டுமன்றி, ராமனுக்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை; ஆனால் கிருஷ்ணனுக்கும் தனக்கும் ஒரு தொடர்பு ஜன்ம ஜன்மாந்தரங்களாக விடாமல், தொடர்ந்து வருவது போலும் தோன்றியது.

ஆம். ராம கிருஷ்ணருடைய அத்தையின் மகள்தான் அலமேலு. ஆகவே, அவள் தன் அத்தான்மார்களில் யாரை யாவது மலையிட்டு, மணந்து கொள்ள வேண்டிய முறைப் பெண்ணாகி விட்டாள். அலமேலுவுக்கு வயது ஆக ஆக, அத்தான்மார்களில் 'யாரை யாவது' என்று பேசிக் கொண்டிருந்த நிலைமை போய், "ஏன் மூத்தவனுக்கே கொடுத்து விட்டால் போச்சு" என்று அவளுடைய பெற்றோர்கள் பேச ஆரம்பித்து விட்டார்கள். அவளுடைய பெற்றோர்கள் மூத்தவனை

நினைக்க, அலமேலு இளையவனை நினைத்து ஏங்கிக் கொண்டிருந்தாள். இந்த ஏக்கத்தைத் தன் பெற்றோர்களிடம் எப்படித் தெரிவிப்பாள் அலமேலு? 'ராமனிடம் என்ன குறையைக் கண்டாய்?' என்றால் என்ன சொல்வது?-என்றெல்லாம் எண்ணி எண்ணித் தவித்துக் கொண்டிருந்தாள்.

அன்பம் ஒரு சித்தாந்தம் செய்து கொண்டிருக்கிறது. அது யார் மீதாகிலும் அன்பு செலுத்தத் தொடங்கினால், ஒரு முறையுடன் நின்று விடுவதில்லை. மேலும் மேலும் அன்பு செலுத்தப் பிரியப்படுகிறது!

அலமேலுவை ராமனுக்கு மணமுடித்து விடுவது என்று அவளுடைய பெற்றோர்கள் நினைத்தார்கள் அல்லவா? அந்த நினைவை, இன்னும் உறுதிப்படுத்தும் முறையில், அலமேலுவின் தாத்தா, ஆரம்பத்தில் கண்ட உயிலை எழுதி வைத்து விட்டு இறைவன் திருவடி நிழலையடைந்தார். இதனால் வேறு அலமேலு மனசு இடிந்து உட்கார்ந்திருந்தாள்.

ஆனால் ராமன் அலமேலுவை எக்காரணத்தினாலும் கல்யாணம் செய்து கொள்ள விரும்பவில்லை என்பதைக் கேட்டதும், சற்று மனம் ஆறுதலடைந்தாள்.

* * *

ஒரு வாரம் கழித்து உலகநாத பிள்ளை வீட்டுக்கு, சங்கரம் பிள்ளையும், ஷண்முகம் பிள்ளையும் வந்தார்கள். உலக விஷயங்களைப் பற்றிச் சற்று நேரம் பேசி விட்டு, "நான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். அது உங்கள் இரண்டு பேருக்கும் ஏற்கிறதோ, என்னமோ!" என்றார் உலகநாத பிள்ளை.

"அதென்ன அப்படிச் சொல்லீட்டிக! உங்க மனசுக்கு எது சரி என்று படுகிறதோ அதுதான் எங்களுக்கும் சரி."

"அப்படியல்ல. நான் சொல்லப் போகிற விஷயம் முதலில் மனசைக் கொஞ்சம் சங்கடப் படுத்தும், பிறகுதான் சரியாகப் போகும்."

"எதுவோ நீங்க சொல்லுங்க!"

"ஒரு ஊருக்குப் போகும்போது, ராமாயணப் புஸ்தகம் ஒன்றும் பாரதம் ஒன்றும் எடுத்துக்கொண்டு போகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். பெட்டியில் புஸ்தகங்களை ஒன்றின்மேல் ஒன்று வைத்து எடுத்தும் போயிருக்கிறோம். போன ஊரில் பெட்டி திறந்தவுடன் மேலாக இருந்த பாரதத்தை முதலில் எடுத்துக் கீழே வைக்கிறோம்; பிறகு ராமாயணம் எடுத்து வைக்கிறோம்.

"பெட்டி திறந்து, முதலில் பாரதம் எடுத்ததால், பெட்டிக்குள் முதலில் பாரதம்தான் வைத்தோமென்று ஆகுமா?

"ஆகவே, பெட்டியில் முதலில் வைக்கப் பட்டது ராமாயணம், இரண்டாவதாக வைக்கப்பட்டது பாரதம் என்று தானே ஆகிறது.

"அதேபோலத்தான் முதலில் ராமன் பிறந்ததால் ராமன் மூத்தவன் ஆக மாட்டான். கிருஷ்ணன் இரண்டாவதாகப் பிறந்ததால் கிருஷ்ணன் இளையவன் ஆக மாட்டான் — மூத்தவனாகிறான்!

"ஆகவே, தம்பி அண்ணனாகவும், அண்ணன் தம்பியாகவும் மாறுகிறான். உயில் பிரகாரம் பார்க்கப்போனால் மூத்தவனான கிருஷ்ணனுக்குத் தான் அலமேலுவைக் கல்யாணம் செய்து கொடுக்கவேண்டும். அவர்கள் இருவரும் சம்மதித்தால், நீங்கள் தாராளமாகக் கல்யாணம் செய்து கொடுக்கலாம்" என்றார்.

சங்கரம் பிள்ளையும், ஷண்முகம் பிள்ளையும், சற்று நேரம் திகைத்த வண்ணம் நின்றார்கள். இந்த வாதம் அவர்களுடைய புத்திக்குச் சரியாகப் பட்டதேயன்றி மனசுக்குச் சரியாகப் படவில்லை.

இதை உணர்ந்த உலகநாத பிள்ளை "மணந்து கொள்ளும் பிள்ளையும் பெண்ணும் இதற்குச் சம்மதித்தால், உங்களுக்கு என்ன, கல்யாணம் முடிச்சுடுங்க" என்றார்.

* * *

ஒரு மங்கல நாளில் அலமேலுவுக்கும், கிருஷ்ணனுக்கும் கல்யாணம் இனிது நிறைவேறியது. அதே பந்தலில் ராமனுக்கும் அவர்கள் சொந்தத்தில் ஒரு பெண்ணுக்கும் கல்யாணம் நடந்தது. அந்தக் கல்யாணத்துக்கு உற்றாரும் உறவினரும் வந்திருந்தார்கள். ஸ்ரீமான் உலகநாத பிள்ளையும் வந்திருந்தார்.

கிருஷ்ணனும், அலமேலுவும் உலகநாத பிள்ளையை வணங்கிவிட்டு எழுந்திருந்த போது "உங்கள் புண்ணியத்தில் நாங்கள் இன்று இந்தக் கோலம்......" என்று நன்றி பொங்கக் கூறினான்.

உலகநாத பிள்ளை "என் புண்ணியமாவது! எல்லாம் உன் தம்பி ராமன் புண்ணியம் என்று சொல். அவன் வந்து உங்கள் இருவர் சிநேகத்தைப் பற்றிச் சொல்லவில்லையென்றால் நான் என்ன செய்திருக்க முடியும்" என்றார்.

"என்ன! என் அண்ணனா அவ்வளவு சொத்தையும் எனக்காகத் தியாகம் செய்தான்......" என்று மனசுக்குள் வியப்பும் ஆச்சரியமும் மிகைப்படக் கூறினான்.

*

இதைச் சொல்லி விட்டு, "ஊருக்குப் பெரியவரான உலகநாத பிள்ளை சொற்படி நான் அலமேலுவைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை? அதனால்

எனக்கு என்ன குறைவு வந்து விட்ட தாம்" என்றார் பாட்டையா.

"ஆகா! பெரியவா பேச்சைத்தான் என்னமா கேட்டு விட்டீர்கள்? உங்கள் மனசு போல, உலகசாத பின்னேயும் சொன்னதாலே கேட்டீர்கள். இப்போ நீங்கள், இளவட்டங்கள் மனசுபோல, சொல்லுங்க, அவர்கள் உங்கள் பேச்சைக் கேட்கா விட்டால் என்னே 'ஏன்' என்று கேளுங்க!" என்றேன்.

"நீ சொல்வதும் வாஸ்தவம், தம்பி!" என்று சொல்லிவிட்டு எழுந்தார்.

## தீபாவளிப் பரிசு!




முதல் பிரமுகர்:—நம்ம மாப்பிள்ளே, 'இந்தத் தீபாவளிக்கு ஒரு வைர மோதிரம் வாங்கிக் கொடுங்கள்; இல்லாவிட்டால் ஒரு மோட்டார் கார் வாங்கிக் கொடுங்கள்' என்று கேட்டுக் கொண்டிருந்தார்......

இரண்டாவது பிரமுகர்:— வைரத்திலே போய்ப் பணத்தைப் போட வில்லையே! மோட்டார் கார்தானே வாங்கிக் கொடுத்தீர்கள்!

முதல் பிரமுகர்:—அது சாத்தியப்படவில்லை, ஸ்வாமி! மோட்டார் காரிலே 'இமிடேஷன்' கிடையாது, பாருங்கோ!




"பவானி, உன் எண்ணம் தான் என்ன? நாங்கள் இந்தக் கிராமத்தில் குடியிருக்க வேணுமா, வேண்டாமா? வயது வந்த பெண்ணைக் காலா காலத்தில் கலியாணம் செய்து கொடுக்காமல் இருக்கிறார்கள் என்று ஊரார் வேறு என்னையும் உன் அப்பாவையும் உன் காது கேட்க ஏச வேண்டுமா? வந்த வரன் ஒவ்வொருவனையும் ஏதாவது குற்றம் குறை சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தால் முடிவுதான் எப்படி? நான் தான் கேட்கிறேன், நேற்றைக்கு வந்த வரனுக்கு என்ன குறைச்சல்? நீ படித்த பெண் என்று உன் அப்பா கொடுத்த செல்லம் தான் உன்னை இப்படியெல்லாம் செய்யச் சொல்லுகிறது. உன் இஷ்டத்தை ஒட்டி உனக்குப் புருஷன் அமைவது அவ்வளவு இலகுவான காரியமா என்ன? ஏதோ சற்று ஏறத்தாழ இருந்தாலும் 'சரி' என்று சொல்வது தான் குடும்பப் பெண்களுக்கு அழகு. நான் சொல்வதைச் சொல்லி விட்டேன். பிறகு உன் இஷ்டம்" என்று மூச்சு விடாமல் பேசிக்கொண்டே போனாள் அம்மா. சமையலறையில் நான் சாப்பிடுவதற்காகத் தட்டில்போட்டிருந்த சாதத்தைக் கையால் துழாவிக் கொண்டிருந்தேன். என் மனம் ஒரு நிலையில் நில்லாமல் அலை பாய்ந்துகொண்டிருந்தது.

வீட்டு முன் வராந்தாவில் அப்பா அதற்குமுன் தினம் என்னைப் பார்த்து விட்டுப் போயிருந்த வரனுக்கு நிச்சய தார்த்த நாளைக் குறிப்பிட்டு எழுதுவதில் முனைந்திருந்தார். எங்கள் குடும்ப ஜோஸ்யர் நிச்சய தாம்பூலம் மாற்றுவதற்கும் விவாகத்திற்கும் நாள் பார்த்துக் கொடுப்பதற்காக அப்பாவைப் பேட்டி காண வந்திருந்தார். கடிதம் எழுத ஆரம்பிக்கு முன் என்னுடைய அபிப்பிராயத்தைக் கேட்பதற்காகக் காத்துக்கொண்டிருந்தார் எனது தகப்பனார்.

அதற்கு முன் தினம் நடந்த சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக என் மனத்திரையில் நிழலாடின. மதுரையிலிருந்து சில நாட்களுக்கு முன் ஒரு வரனின் ஜாதகம் வந்திருந்தது. அது அதிர்ஷ்ட ஜாதகமென்றும் என்னுடைய ஜாதகத்துக்குப் பொருத்தமுள்ளதாயிருக்கிறதென்றும் எங்கள் குடும்ப ஜோஸ்யர் அபிப்பிராயப்படவே, என் தகப்பனார் அப்பொழுது தற்காலிகமாக மதுரையில் தங்கியிருந்த வரனைப் பார்த்து வருவதற்காக அன்றைக்கே பிரயாணமாகிவிட்டார். போகும் பொழுது அம்மாவிடம் வரன் அவருடைய மனதிற்குப் பிடித்தால் ஒரு நாளைக் குறிப்பிட்டு அன்று வரனை கிராமத்துக்கு அழைத்து வந்து என்னைப் பார்க்க ஏற்பாடு செய்வதாகச் சொல்லி விட்டுச் சென்றிருந்தார்.

பின் கட்டில் அம்மாவும் நானும் திருச்சியிலிருந்து கோடை விடுமுறையைக் கழிப்பதற்காகக் கிராமத்துக்கு வந்திருந்த என்

ஒன்று விட்ட அண்ணாவுடன் பேசிக்கொண்டிருந்தோம். வாசலில் வண்டி வந்து நின்ற சத்தத்தைக் கேட்டதும் 'அப்பா வந்து விட்டார்' என்று சொல்லிக் கொண்டே வாசலை நோக்கி விரைந்தேன். அப்பாவுடன்கூட ஒரு வேற்று மனிதர் வந்திறங்கியதைப் பார்த்ததும் உள்ளே திரும்பினேன். அப்பா அவருடன் கூட வந்தவரை கூடத்து ஊஞ்சலில் உட்கார வைத்து விட்டு அம்மாவிடம் வந்து, 'சீக்கிரம் காப்பி போடு' என்றார். அப்படியே என்னைப் பார்த்து 'பவானி, காப்பி தயாரானதும் எனக்கும் வந்திருக்கிறவருக்கும் இரண்டு டம்ளர்களில் காப்பி எடுத்துக் கொண்டு வா' என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். அம்மா கொடுத்த காப்பியை எடுத்துக்கொண்டு போனேன். அப்பா, கூட இருந்தவரிடம் ஒரு டம்ளர் காப்பியை வாங்கிக் கொடுத்து விட்டு என்னை ஒரு தரம் பார்த்தார். இந்த மாதிரி சமயங்களில் நான் என்ன செய்ய வேண்டுமென்று தான் எனக்குப் பழக்கமாயிற்றே! வந்திருந்தவரை நமஸ்காரம் பண்ணிவிட்டு எழுந்திருந்தேன். வந்தவரிடம் அப்பா என்னுடைய யோக்யதாம்சங்களை எடுத்துச் சொல்லிக்கொண்டிருக்கும் போதே, அம்மா என்னிடம் உள்ளேயிருந்த வீணையை எடுத்துக்கொண்டு வரும்படி சைகை செய்தாள். வீணையில் எனக்குத் தெரிந்த ஒன்றிரண்டு பாட்டுக்களை வாசித்துக் காண்பித்ததும், வந்திருந்தவர் எழுந்திருந்து போய் வாசலில் இருந்த வண்டியில் ஏறிக்கொண்டார். அவரை ரயில்வே ஸ்டேஷன் வரை போய் அனுப்பிவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டு அப்பாவும் புறப்பட்டார். வந்திருந்தவர் எனக்குத் தீர்மானமாகவிருக்கும் 'வரனுக்கு ஏதாவது கிட்டின உறவினராக இருக்குமோ' என்று நான் நினைத்துக் கொண்டிருக்கும் போதே அப்பா, "வந்திருந்தவனை நன்றாய்ப் பார்த்துக்கொண்டாயா பவானி! அவன் தான் வரன்" என்று வெளியே கிளம்புமுன் சொன்னதைக் கேட்டதும் நான் அசந்து போனேன்.

அவருக்கு வயது இருபத்து ஐந்துக்குள் இருக்கலாம். சுமாரான உயரம், உயரத்திற்குத் தகுந்த பருமன், நல்ல நிறம், களை பொருந்திய முகம், எடுப்பான மூக்கு, தீட்சண்யமான கண்கள்—பொதுவாக அழகுள்ளவர்தான் என்று சொல்லவேண்டும். இருந்தாலும் அவருடைய கட்டுக் குடுமியும், காதுகளில் அணிந்திருந்த கடுக்கன்களும், நெற்றியில் பட்டையாகப் போட்டுக்கொண்டிருந்த அந்தச் சந்தனக்கோடும் என் பார்வைக்கு என்னமோ போலிருந்தது. என் உள்ளத் திரையில் என் கனவும் கற்பனையும் ஒன்று சேர்ந்து தீட்டியிருந்த கணவருடைய உருவத்துக்கும் நேரில் வந்த இவருக்கும் இடையே எவ்வளவு வேறுபாடு! என் மனோராஜ்யத்தில், மேல் நாட்டுப் பாணியில் தலையைச் சிங்காரித்துக்கொண்டு அலை அலையாக வாரிவிட்ட 'கிராப்' தலையுடனும் அலங்காரத்துக்கு நெற்றியில் அணிந்த சிறிய பொட்டுடனும், நாகரிகத்திற் கேற்ப வெற்றுக் காதுடனும் காட்சியளித்த கணவன் எங்கே? இதோ அதற்கு முற்றிலும் மாறுபட்ட இவர் எங்கே? இவ்வாறு நான் சிந்தனை வசப்பட்டிருந்த போதுதான் அண்ணா "பவானி, உனக்குச் சித்தப்பா, நல்ல வரனைப் பார்த்துக் கொண்டுவந்திருக்கிறார். வந்திருந்த ஆசாமிக்குக் கழுத்தில் ஒரு ருத்ராக்ஷ மாலையைப் போட்டு வலது கையில் ஒரு தீபாராதனைத் தட்டையும் இடது கையில் ஒரு மணியையும் கொடுத்து விட்டால் சாக்ஷாத் குருக்கள் வேஷத்துக்குச் சினிமாவில் வேறு 'மேக்கப்' இல்லாமலேயே எடுத்துக் கொண்டு விடுவார்கள்" என்று சொல்லி என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டான். என்னையுமறியாமல் ஏதோ விவரிக்க இயலாத வேதனை மனதில் புகுந்து கொண்டது. இந்த மாதிரிச் சமயங்களிலெல்லாம் என் பால்ய சிநேகிதி பத்மாவதி வீட்டுக்குப் போய் விடுவேன். அவள் உள்ளூரிலேயே கலியாணமாகிக் குடியும் குடித்தனமுமாக இருந்தாள்.

நான் போனதும் போகாததுமாகப் பத்மாவதி "என்ன பவானி, இன்றைக்குச் சாயங்காலம் உன் அப்பாவுடன் யாரோ ஒரு குட்டி சாஸ்திரிகள் வந்து விட்டுப் போனாரே, என்ன விசேஷம்?" என்று கேட்டதும் என்னையும் மீறி என் கண்களில் நீர் கசிந்தது. பத்மாவதி பயந்து போய்விட்டாள். என் கையைப் பிடித்துக் கொண்டு 'பவானி, உன் மனது புண்படும்படி ஏதாவது சொல்லியிருந்தால் என்னை மன்னித்துவிடு' என்றாள். அதற்கு மேலும் என் மனதிலிருந்ததை அவளிடம் சொல்லாமலிருக்க முடியவில்லை. விம்மல்களுக்கிடையே 'அவர்' தான் எனக்கு வரவிருக்கும் புருஷன் என்றும் என்னுடைய கற்பனைக் கணவருக்கும் அவருக்கும் உள்ள வேற்றுமையையும் சொல்லித் தீர்த்தேன். அதற்குப் பத்மாவதி "அடி சமர்த்தே. இதற்காகவா மனதைப் போட்டு அலட்டிக் கொள்கிறாய்? கலியாணமாகி அவருடன் நீ குடித்தனமாகப் போனதும் அவரை உன் வழிக்குக் கொண்டு வருகிறதா உன்னைப்போல படித்த பெண்ணுக்குப் பிரமாதம்?" என்றாள். ஒருவாறு மனதைத் தேற்றிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

அப்பொழுதுதான் அப்பா வரனைப் பற்றிய விவரங்களை அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தார். வரன் ஒரு எம். ஏ. பட்டதாரியாம். சென்னைக் காலேஜ் ஒன்றில் பேராசிரியராம். கை நிறையச் சம்பளம் வாங்குகிறாராம். மேலும் 'டாக்டர்' பட்டம் பெறப் படித்துக்கொண்டிருக்கிறாராம். அவருடைய ஒன்றுவிட்ட அத்தைக்கு வேறு குழந்தைகளில்லாததால், இவருடைய பெற்றோர்கள் காலமான முதல் இவரைத் தன்னுடைய குழந்தை போல் பாவித்து வளர்த்துவருவதுமின்றித் தன் சொத்திலிருந்தே இவருக்குச் சென்னையில் ஒரு பங்களா வாங்கிக் கொடுத்திருக்கிறாளாம். அதில்தான் அவருடைய அத்தையும் இவரும் சமையலுக்கு ஆள் வைத்துக் கொண்டு இருக்கிறார்களாம். எல்லாவற்றிற்கும் மேலாக அவரிடம் அவருடைய அத்தை வரதக்ஷிணையே வாங்கக்கூடாது என்று வேறு சொல்லிவிட்டாளாம். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் சந்தோஷம் பிடிபடவில்லை. ஆனால் எனக்கோ அது வேறு கேள்வி.

அப்பா என்னிடம், " நீ படித்த பெண்ணானதால் உன்னுடைய பூமுச் சம்மதத்தைத் தெரிந்து கொண்ட பின் நிச்சயதார்த்தத்துக்கு ஒருநாள் குறிப்பிட்டு நானேக்கே எழுதச் சொல்லியிருக்கிறான், அவன். பவானி, நீ இந்த வரனை வேண்டாமென்று விட்டுவிட்டால் அவனுக்கு 'இதோ நான், நீ' என்று போட்டி போட்டுக்கொண்டு பெண்ணைக் கொடுக்க எத்தனையோ பேர்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள். எதற்கும் நீ யோசனை செய்து பதில் சொல். அவசரமில்லை. நாளை மத்தியானத்திற்குள் சொன்னால் போதும் " என்றார். அந்த வரன் வேண்டாம் என்று நான் சொன்னால் அப்பா என் இஷ்டத்திற்கு விரோதமாக அந்த வரனை நிச்சயிக்க மாட்டார் என்ற தைரியம் இருந்தது. அப்பா என்னமோ அந்த வரனை மிகவும் விரும்பினர் என்பது அவர் பேச்சிலிருந்து ஊகித்துக் கொண்டேன். அப்படியிருக்கும் போது என்னுடைய பதிலினல் அப்பாவுக்கு மனக்கஷ்டம் ஏற்பட்டால்......? இந்தத் தர்மசங்கடமான நிலைமையில் வைத்து விட்டது அப்பாவின் கோரிக்கை. காலையில் எழுந்திருந்ததும் அப்பாவுக்கு என்ன பதில் சொல்வது என்று எண்ணுவதிலேயே இரவு முழுவதையும் கழித்தேன்.

விடிந்ததும் விடியாததுமாக வீட்டுக்குப் பின் புறத்தில் ஓடும் வாய்க்காலுக்குப் போய் முகத்தைக் கழுவி, பல் துலக்கிவிட்டுத் தலையை வாரிக்கொள்ளக் கூடத்திலிருந்த நிலைக் கண்ணாடியின் முன்பு போய் நின்று கொண்டேன். என்னுடைய கோண வகிடு, காதிலிருந்து தொங்கும் நவ மோஸ்தர் லோலாக்குகள், நாகரீக பாணியில் 'பப்' வைத்துத் தைத்த ஜம்பர், அதற்கு ஏற்றாற்போல் நான் அணிந்திருந்த அழகிய 'பிரிண்டட்' ஸாரி, இவ்வளவையும் எடுத்துக் காட்டியது கண்ணாடியில் தெரிந்த என்னுடைய பிரதிபிம்பம். அதற்கு முன் தினம் என்னைப் பார்க்க வந்திருந்த வரன் என் பக்கத்தில் நின்று கொண்டு அவருடைய உருவமும் கண்ணாடியில் விழுந்திருந்தால்......இந்த எண்ணம் என்னையுமறியாமல் என் மனதில் மின்னி மறைந்தது. ஒரு கணம் என் தலை சுற்றி நின்றது. அம்மா என்னைக் கூப்பிடவே அவசரமாகத் தலையை வாரிக்கொண்டு சமையல் கட்டுக்குப் போனேன். அம்மா கொடுத்த காப்பியைச் சாப்பிட்டு முடித்ததும் அவள் " இன்றைக்கு ஒரு மணிக் கட்டுக்குச் சேரும்படியாகப் பதில் எழுத வேணுமாம். உன் அபிப்பிராயத்தைக் கேட்டு வைக்கச் சொல்லி விட்டு அப்பா ஜோஸ்யரைப் பார்த்து வரப் போயிருக்கிறார்' என்றாள். "அம்மா, நேற்றைக்கு வந்தவர் எவ்வளவோ படித்தவராக யிருக்கலாம், பெரிய உத்தியோகத்திலிருக்கலாம், நல்ல சொத்து சுதந்திரமுள்ளவராகவுமிருக்கலாம். இதெல்லாம் இருந்தும்..."

"பின்னே என்னடி அவனுக்குக் குறைச்சல்" என்றாள் அம்மா படபடப்புடன்.

"அவர் வந்து......" என்று சற்றுத் தயங்கினேன்.

"அவனுக்கு என்ன வந்தது?" என்றாள்.

"அவர் வந்து என் கண்ணுக்குப் பார்க்கிறதற்கு ரொம்ப கர்நாடகமா யிருக்காரே" என்று தட்டுத் தடுமாறிச் சொன்னேன்.



" டாக்டர் ஸார் ! நீங்கள் வைத்தியம் செய்ததில் காது இப்போது நன்றாகக் கேட்கிறது. என்ன பீஸ் கொடுக்கணும் சொல்லுங்கள்."

" நாற்பது ரூபாய் "

" என்ன அறுபது ரூபாயா ? "

" இல்லை ; நூறு ரூபாய்."

"என்ன சொன்னாய்? அவன் கர்நாடகமாயிருக்கிறானா? உன்னை இந்த ஊரில்லாத வழக்கமாகப் பத்து கிளாஸ் வரைக்கும் படிக்க வைத்ததற்கு லக்ஷணமாக இவ்வளவாவது பேசத் தெரிந்ததே உனக்கு. சரி, சரி, உன் கர்நாடகமும் மலையாளமும் எனக்கு ஒன்றும் தெரியாது. எல்லாம் உங்கப்பாவிடமே போய்ச் சொல்லு" என்று பொரிந்து கொட்டி விட்டாள் அம்மா. அம்மா என் பக்கம் பேசுவாள் அல்லது என் மனோ நிலைமையை அறிந்து கொண்டு அதற்குத் தக்கபடி பதில் சொல்லுவாள் என்று எண்ணிய எனக்கு அம்மாவின் போக்கு ஏமாற்றத்தையே அளித்தது. மௌனமாக அம்மாவுக்குச் சமையலுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வதில் முனைந்தேன்.

மணி பன்னிரண்டு அடித்தது. வெளியே போயிருந்த அப்பா அப்பொழுதுதான் திரும்பி வந்தார். வந்ததும் பொங்கி வந்த உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு "அப்பாவிடம் எனக்கு அந்த வரனைப் பிடித்திருக்கிறது என்று சொல்லி விடு" என்றேன் நான் அம்மாவிடம்.

சற்று நேரத்துக்கெல்லாம் அப்பா அவ்விதமே ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்த்துவிட்டு "பவானி, இந்த வரன் பார்ப்பதற்குக் கொஞ்சம் கட்டுப் பெட்டி போல் தோன்றுகிறானே என்று நினைக்காதே! நாளடைவில் நீ அவனை உன் மனம்போல் திருத்தி விடலாம்" என்றார். போகட்டும்! அம்மாவைப் போலில்லாமல் அப்பாவாவது என் மனதுக்கு இதமான வார்த்தைகளைச் சொன்னாரே என்று எனக்குச் சிறிது ஆறுதலாயிருந்தது.

## 2

ஒரு சுப முகூர்த்தத்தில் எனக்கும் அந்த வரனுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தேறியது. கூடிய மட்டும் என் மனதிலிருந்த அதிர்ச்சியை வெளியே காட்டாமலேயே கலியாணத்தின்போது எல்லோரிடமும் பேசிச் சிரித்துச் சமாளித்து விட்டேன். கலியாணம் கழிந்த அடுத்த வாரம் நானும் என் தகப்பனாரும் சென்னை போய்ச் சேர்ந்தோம். என் கணவர் எங்கள் இருவரையும் ரயிலடிக்கு வந்து அழைத்துக் கொண்டு போனார். மைலாப்பூரிலிருந்த அவருடைய சிறிய பங்களாவை அடைந்ததும் அவருடைய வயது முதிர்ந்த அத்தைக்கு எங்களை அறிமுகப் படுத்தி வைத்தார். அத்தை என்னை மகிழ்ச்சியுடன் வரவேற்றாள். அன்று முதல் வீட்டுச் சமையல்காரனும், வேலைக்காரியும், தோட்டக்காரனும் என்னுடைய கட்டளைக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். இதெல்லாம் எனக்கும் அப்பாவுக்கும் பெருமையாகத்தானிருந்தது. இரண்டு மூன்று நாள் தங்கி விட்டு அப்பா எனக்கு வேண்டிய புத்திமதி சொல்லி விட்டுத் திரும்பி ஊருக்குப் போய் விட்டார்.

வீட்டுக்கு வந்த ஒரு மாதத்திற்கெல்லாம் பொழுது போக்குக்கு ரேடியோ வேண்டுமென்று தெரிவித்தேன். அடுத்த நாளே ரேடியோ வந்து சேர்ந்தது. சாயங்கால வேளைகளில் வெளியே போய் நாலு பேருடன் பேசிப் பழக 'லேடீஸ்' கிளப்பில் மெம்பராகச் சேர வேண்டுமென்ற என் விருப்பத்தைத் தெரிவித்தேன். அதற்கு அவர் தடை சொல்லவில்லை. "நீ வெறும் பேச்சுக்காக மாத்திரம் அங்கே போவதில் பயனில்லை. தினந்தோறும் அங்கே போய் அரைமணி நேரமாவது 'பாட்மிண்டன்' ஆடிவிட்டு வா. நாள் பூராவும் வீட்டிலே அடைத்துக் கிடக்கும் உனக்கு அந்தக் குறைந்த பட்ச தேகப் பயிற்சியாவது இருக்கட்டும்" என்று அவர் சொன்னதை ஏதோ கேலியாகச் சொல்லுகிறார் என்று ஐயமுற்றேன். ஆனால் அன்று மாலை அவர் காலேஜிலிருந்து வரும்போது ஒரு பூப் பந்து மட்டையை என்னிடம் கொண்டுவந்து கொடுத்த போதுதான் அவர் பேச்சிலும் கண்டிப்பானவர் என்று தெரிந்து கொண்டேன்.

என்னுடைய கோண வகிடைப் பற்றியோ, நான் கொசுவம் வைத்துப் புடவை கட்டிக் கொள்ளாததைப் பற்றியோ, நான் காலில் ஜோடணிந்து, காது லோலாக்குகள் குலுங்க, ஒய்யாரமாகக் கையில் பந்து மட்டையுடன் 'லேடீஸ் கிளப்'புக்குப் போய் வருவதைப்பற்றியோ ஆட்சேபித்து ஒரு வார்த்தைகூடச் சொல்லாத அவரிடம், அவருடைய சிகையைப் பற்றியோ, நெற்றியில் அணியும் சின்னத்தைப் பற்றியோ, அவர் காலேஜுக்குப் போகும்போது அணிந்து கொள்ளும் எளிய உடையைப் பற்றியோ என் அபிப்பிராயத்தை சொல்ல எனக்கு எப்படி நா எழும்?

அவர் வீட்டிலிருந்த நேரத்தில் அநேகமாக புஸ்தகமும் கையுமாகத்தான் இருப்பார். அவரிருக்குமிடம் தேடிப் போனால் புஸ்தகத்தைக் கீழே வைத்துவிட்டு இரண்டொரு வார்த்தைகள் என்னிடம் பேசுவார். நடையுடையிலும் பாவனையிலும் என் மனதிற்கிசைந்தபடி அவரை மாற்றி விடலாம் என்று நான் கொண்டிருந்த நம்பிக்கை கொஞ்சம் கொஞ்சமாகத் தளர ஆரம்பித்தது. 'சரி நமக்கு விதித்தது அவ்வளவுதான்' என்ற முடிவுக்கு வந்து என் மனம் சாந்தியடையும் தறுவாயில்தான் நான் எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. (அடுத்த இதழில் முடியும்)

**FOR TWO WEEKS MORE**

**JEWEL FITTED WATCHES**

AT LESS THAN HALF PRICES

EACH GTD. 10 YEARS



**ALARM TIME PIECE**

SPECIAL QUALITY ~~26/-~~ 15/-

SUPERIOR ~~36/-~~ 16/8



1606-5 JEWELS ROLD GOLD ~~75/-~~ 34/-

" 15 JEWELS ROLD GOLD ~~90/-~~ 43/-



1607-5 JEWELS ROLD GOLD ~~64/-~~ 32/-

" 15 JEWELS ROLD GOLD ~~96/-~~ 44/-



1608-5 JEWELS CROME CASE ~~48/-~~ 22/-

" " " ROLD GOLD ~~60/-~~ 28/-

" 15 JEWELS SUPERIOR ~~86/-~~ 42/-

Postage extra. Free on order for two.

**PIONEER WATCH Co**

POST BOX NO 11428 CALCUTTA

**ப்ளாண்டர்ஸ்**

**ஹை க்ரோன்**

**நீலகிரித்**

**தேயிலை**




**நீங்கள்**

**ரசிக்கக்கூடிய**

**ருசிக்காக**

THE PLANTERS COMPANY, LTD.,
COONOOR, NILGRIS S INDIA.



# நரஸூஸ் காபிதூள்

உங்கள் பிரியமுள்ள பானம்

## இப்பொழுது எங்கும் கிடைக்கும்

உயர்ந்த ரக பிளாண்டேஷன் பீபேரி, எக்ஸ்ட்ரா
போல்ட் காபிக் கொட்டைகளும்.

7 பவுண்டு, 3 பவுண்டு, 1½ பவுண்டு, ½ பவுண்டு
சீல் வைத்த துணிப் பைகளில்
கிடைக்கும்.




**நரஸூஸ் மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட், சேலம்.**

# லிவர்ஜென்

எல்லா ஈரல் வியாதிகளுக்கும் சிறந்தது

A SPW PRODUCT



ஸ்டாண்டர்டு பார்மஸூட்டிகல் வொர்க்ஸ் லிட்.,
ஸோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்: ஸ்டாண்டர்டு ப்ராடக்ட்ஸ்
லிமிட்டெட், 79 A & B, செம்புதாஸ் தெரு, மதராஸ்.



எக்ஸிமா

சரும வியாதிகளுக்கு, முக்கியமாக எக்ஸிமாவுக்கு ஸைமாக்ஸ் மிகவும் சிறந்தது. சருமத்தின்மேல் ஏற்படும் எரிச்சலை மாயமாய்ப் போக்குகிறது. சருமத்தை இயற்கை நிறத்துக்கும் தன்மைக்கும் கொண்டு வருகிறது. என்றும் ஒரு பாட்டில் உங்கள் வசம் இருக்கட்டும்




ZIMAX

AN ECZEMA CURE



தந்த சுகாதாரம்

சொத்தையான பற்கள் சீரான தேக ஆரோக்கியத்தைப் பாதிக்கின்றன. தைமோஸின் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்குங்கள். பயோரியா ஜிஞ்ஜிவிடிஸ் நோய்களையும் சுவாசத்தில் துர்நாற்றத்தையும் தவிர்க்கிறது. உங்கள் குடும்பத்துக்கு மிக அவசியமானது தைமோஸின்



THYMOCIN

FOR DENTAL HYGEINE

டி. எம். தாகூர் & கோ., 9, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜி. டி., மதராஸ்

# நீங்கள் குற்றவாளி ஆவீர்கள்



- உணவை வீணாக்கினாலும் சரி
- பங்கீடு விதிகளைக் கடைப் பிடிக்காவிட்டாலும் சரி
- தேசத்தின் நெருக்கடியின் போது உங்கள் பங்கைச் செய்யாவிட்டாலும் சரி.

## உணவு உற்பத்தியைப் பெருக்குக

AC. 138 TH

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden Poonamallee, High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

# எஸ். மேனகா தன் சருமத்தைப் பாதுகாக்க ஏன் லக்ஸ் டாய்லட் சோப்பை விரும்புகிருர் என்று கூறுகிருர்




**அவர் சொல்வதாவது:**

"மாசு மருக்களை விளைவிக்கக் கூடிய புழுதியையும் மற்றுமுள்ள அசுத்தங்களையும் லக்ஸ் டாய்லட் சோப்பின் செழிப்பான வெண்மை நுரை துப்புரவாகசுத்தம் செய்கிறது. அதனுல் சருமத்தை மிருதுவாகவும், அழகாகவும் தெளிவுடனும் இருக்கச் செய்கிறது. மேலும்," இன்னும் கூறுகிருர் "லக்ஸ் டாய்லட் சோப்பின் மென்மையான பரிமளம் உங்கள் சருமத்தை எப்பொழுதும் மலர்ச்சியுடனும் கவர்ச்சியுடனும். இருக்கச் செய்கிறது."

☆ *இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும் சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தையும் வசீகரமாக செய்யும்!*



**ஸினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்**

LTS. 204-178 TM